6670

# அவன் அமரன்

## முதல் அங்கம்

### காட்சி 1

இடம் :—இலினுயிஸிலுள்ள நியூ சேலம். மென் டார் கிரஹாமின் அறை. நள்ளிரவு நேரம். அறை யின் நடுவே ஒரு பெரிய மேஜைமீது புத்தகங்களும் ஏராளமான பத்திரிகைகளும் குவிந்து கிடக்கின்றன. நடுவே எரியும் அகல் விளக்கின் மங்கிய ஒளிபடர்ந் திருக்கிறது. மேஜையின் எதிரே மென்டார் கிரஹாம் —அமைதியே உருவான ஒரு பள்ளி ஆசிரியர்— அமர்ந்திருக்கிருர். அவருக்கெதிரே காட்டுமிராண் டியைப் போன்று கந்தல் உடையுடன் கம்பீரமாக இளைஞன் ஆபிரஹாம் லிங்கன் வீற்றிருக்கிருன். ஆர்வம் நிறைந்த பார்வை. தென் இண்டியாஞ பிரதேசத்தின் கொச்சை மொழியில் [கென்டகீய பாஷை போன்றது] பேசுகிருன்.

மேஜைமீது மென்டார் சாய்ந்து கொண்டிருக் கிருர். ஆபி வீற்றிருக்கும் நாற்காலி சற்றுப்பின்ஞல் தள்ளிப் போடப்பட்டிருக்கிறது. அதனுல் அந்த மங்கிய ஒளியில் அவரது முகம் தெளிவாகத் தெரிகிறது. இலக்கணப் புத்தகத்தின் ஒருபக்கத்தை மென்டார் விரித்து வைத்துக்கொள்கிருர்.

பல்வேறு மனேநிலைகள் பற்றி மென்டார் பிர சங்கம் செய்யத் தொடங்குகிருர்.

**மேண்டார்:** நம் ஒவ்வொருவரிடமும் பல்வேறு மனே நிலைகள் உண்டு. ஆனல் ஆபி, இது விஷயத்தில் இயற்கைக்கு மிஞ்சின நிலையே உங்களிடம் காணப்படுகிறது. அவை உமது குணதிசயங்களைப் பல்வேறு கோணங்களில் தெளிவாக்குகின்றன. அது போலவே தான் இந்த ஆங்கில பாஷையும். ஆனல் இதை விகாரமாகத் தட்டுத் தடு மாறி ஒடிந்து விழும் உயிருள்ள மனித னைப்போலவோ அல்லது பிரமாதமான ஆடம்பர மனிதனைப் போலவோ, நேர்மை யும், எளிமையும் உள்ள பாமர மனிதனைப் போலவோ தான் கருதவேண்டும். இப் போது ஐந்து வகையான நிலைகள் என்ன வென்று கூறுங்கள்.

**ஆபி:** இயல் நிலை, ஏவல் நிலை, வியங்கோள், விளைவு, எல்லையற்ற நிலைகள்.

**மேண்டார்:** அவற்றின் பொருள் என்ன?

**ஆபி:** இயல் நிலைதான் மிகவும் எளிதானது. அது சாதாரணமாக ஒரு பொருளின் இயக்கத்தைக் காட்டுகிறது. 'அவன் நேசிக்கிருன்' 'நேசிக்கப் படுகிருன்' இதையே கேள்வியாக மாற்றிக் கேட்கும் போது 'அவன் நேசிக்கிருனு?' அல்லது 'அவன் நேசிக்கப்படுகிருனு?' என்ருகும். ஏவல் நிலை, கட்டளை யிடுவதற்கு உப யோகப்படுகிறது. உதாரணமாக, 'இதை

விட்டு வெளியேறி எப்படியாவது நாச மாகப் போ' என்பதைக் கொள்ளலாம்.

மென்டார்: [தனக்குள் சிரித்துக் கொள்கிறார்.] இந்த ஓர் உதாரணம் தானா உங்களுக்குச் சிறப்பாகப்பட்டது?

ஆபி: நல்லது. கிறிஸ்து வேத பாணியிலேயே இதை உபயோகிக்கலாம். 'நீ சாந்த மாகப் போ' என்று. இதுவும் ஏவல் நிலைதான்.

மென்டார்: சாதாரணமாகக் கட்டளை யிடுவ தென்ற அடிப்படையில்தான் இப்பெயர் ஏற்பட்டது. ஆனால், அதையே மிக எளிய அடிவணங்கி வேண்டிக்கொள்ளும் நிலைக்கு உபயோகிக்கலாம்.

ஆபி: 'எங்களுக்குத் தேவையான உணவை அளியுங்கள்; எங்கள் தவறுகளைப்பொறுத் தருளுங்கள்.'

மென்டார்: [மேஜைமீது குவிந்து கிடக்கும் பத்திரிகைகளில் ஒன்றை எடுத்து ஆபி யிடம் கொடுத்து] இதைப் படி, பார்ப் போம். அமெரிக்க செனட் சபையில் திரு வெப்ஸ்டர் அவர்கள் நிகழ்த்திய பிரசங் கம் இது. படி. இது ஓர் உன்னதமான சாசனம்; இதில் ஏவல் நிலை தெளிவுடன் பொருத்தமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது.

அதைப்படி [அவர் நாற்காலியில் சாய்ந்து கொண்டு ஆபி வாசிப்பதைக் கேட்கிறார்.]

ஆபி: [கையில் பத்திரிகையை எடுத்துக் கொண்டு விளக்கு வெளிச்சத்தில் படிக்கிறார்.] சபையோர்களே, செனட்டர் வெப்ஸ்டர் தன் பிறப்பிடமான பாஸ்டன் நகரத்தின் விசேஷ ஆலய மணிஓசையைப் போன்று கணீரென்று நாதத்துடன் ஆரம்பிக்கிறார். ' சபையோர்களே—நான் இந்த ஐக்கிய அமெரிக்கக் கூட்டமைப்புக்கு அப்பால் உள்ள எவற்றையும் பற்றிச் சிந்தித்துப் பார்க்க முற்படவில்லை. அங்கெல்லாம் என்னென்ன அரிய பொருள்கள் புதைந்து கிடக்கின்றனவோ—அவற்றைப் பற்றியும் அக்கறை கொள்ளவில்லை. இந்த ஐக்கிய அமெரிக்கக் கூட்டு அமைப்பு நீடித்திருக்கும் வரை........" [இதுவரை ஆபி பிரசங்கத்தை வரிப் பாடத்தைப் போன்று உணர்ச்சியற்று வேகமாக வாசித்துக் கொண்டே போகிறார்.]

மென்டார்: [இடை மறித்துக் குறிப்புணர்த்துகிறார்.] பலசரக்குப் பட்டியலை வாசிப்பது போல் படிக்காதே. உன் தாய்நாட்டின் நிலைமை ஏதோ ஆபத்திலிருப்பது போல் கருதி செனட் சபையின் முன் நீயே பிரசங்கம் செய்வதாகப் பாவித்துக்கொள். அப்போது அதில் ஒரு ஜீவன் இருக்கட்டும்.

**ஆபி :** *டேனியல் வெப்ஸ்டரைப் போன்று நீண்ட சொற்களை பிரயோகிக்க என்னல் முடியாது.*

**மென்டார் :** *அதைக் கற்றுக்கொள்ளத்தான் இங்கு வந்துள்ளாய் நீ. மேலே படி பார்ப்போம்.*

**ஆபி :** *[கம்பீரமான தொனியில் நிதானமாக வாசிக்கிருர்.] அமெரிக்கக் கூட்டமைப்பு நிரந்தரமாக உள்ளளவும் நமக்கும் நம் சந்ததிகளுக்கும் வளமான எதிர்காலம் உண்டு. அதற்கப்பால் உள்ள திரையை ஊடுருவிப் பார்க்க நான் விரும்பவில்லை. என் ஆயுட்காலத்திற்குள் அந்த மர்மத் திரை விலகாதிருக்க ஆண்டவனை வேண்டிக்கொள்கிறேன்.*

**மென்டார் :** *இங்கு வினைச்சொல் உபயோகிக்கப் பட்டிருக்கும் முறையைக் கவனி.*

**ஆபி :** *[தொடர்ந்து வாசிக்கிருர்.] "என்னுடைய இறுதிக்காலத்திலும் என் தாய் நாடு பிளவுபட்டு ஒற்றுமையின்றி உள் நாட்டுக் கலகங்களிலும் போர்களிலும் ஈடுபட்டு ரத்தக்காடாகாமல் என்றும் இதே அமைதி நிறைந்த ஐக்கிய நிலை திகழுவதைக் காண்பேஞைக. அகிலமெங்கும் போற்றப்படும் நமது குடியரசு என்றும் இதே மகோன்னத*

நிலையில் நீடிப்பதையே எனது ஆயுள் பூராவும் காணும் பாக்கியம் கிட்டுமாக. இக்குடியரசு என்றும் இதே மங்காத புகழுடன் எந்த நிலையிலும் சீரிய நோக்கத்தில் சிறிதும் பிறழாது வெற்றிக்கொடி சிறிதும் மாசுறுமல்....." [கடைசி பதத்தை உச்சரிக்கும்போது தடுமாறுகிறார்.] "........ எதனுல் இந்த மாசு, இந்தப் பிரமை, இந்தத் தவறு என்ற கேள்விகளுக்கு இடந்தராமல் 'முதன் முதலில் சுதந்திரம், அதன் பிறகுதான் ஐக்கியம்' அன்றியும் அமெரிக்கர்களின் உண்மையான ஆதர்சக் கொள்கை — சுதந்திரமும் ஐக்கியமும் எங்கும் எல்லாரிடத்திலும் வியாபித்து நிலைத்து நின்று ஆட்சி புரியவேண்டும்."

**மேன்டார்:** சுதந்திரமும் ஐக்கியமும் என்பதிலுள்ள 'உம்' விகுதியை நன்றாக அழுத்திப் படி.

**ஆபி:** " இன்றும் என்றும் சுதந்திரமும் ஐக்கியமும் ஒன்றுபட்டே நிலவும் என்றும் பிரிவு படாவவை!" [பத்திரிகையை மேஜைமேல் வைக்கிறார்.] இப்பிரசங்கத்தைக் கேட்டு செனட்சபை அங்கத்தினர்கள் உணர்ச்சி வசமாகி எழுந்து நின்று 'கரகோஷம்' செய்து ஆர்ப்பரித்திருப்பார்கள்!

**மேன்டார்:** அங்கிருந்த அங்கத்தினர்கள் பலரும் அவரவரது கட்சிக்குத் தக்கவாறு

சிலர் சந்தோஷ ஆரவாரம் செய்தனர். மற்றும் சிலர் தூற்றிப் பேசினர்.

ஆபி : வெப்ஸ்டர் எதைப் பற்றிப் பிரசங்கம் செய்தார் ?

மென்டார் : ஐக்கிய அமெரிக்கக் கூட்டமைப்பி லிருந்து எந்த ராஜ்யமும் பிரிந்து போக லாம் என்னும் உரிமைப் பிரச்னையின் மீது நடந்த விவாதத்தின்போது நிகழ்த்திய பிரசங்கம் அது. தனி மனிதர்களுக்கு எப் படித் தம் இஷ்டம்போல் சுதந்திரமாக நடக்க உரிமை உண்டோ அதுவேபோல் ஒவ்வொரு ராஜ்யமும் தன் இஷ்டம்போல் சுதந்திரமாக இயங்க உரிமை உண்டு என்று தென் கரோலினுவுக்காக பரிந்து பேசிய ஹேறயின் திறம்பட வாதித்தார். அதாவது ஒரு ராஜ்யத்திலுள்ள பெரு வாரியான மக்கள் ஏகமனதாக ஐக்கிய உறவு வேண்டாமென்று தீர்மானித்தால் அதன்படி அவர்கள் ஐக்கிய அமெரிக்க கூட்டுறவிலிருந்து பிரிந்து போய் புதிய தொரு அரசாங்கத்தையோ அல்லது பல அரசாங்கங்களையோ ஏற்படுத்திக் கொள்ள உரிமை உண்டு—அப்படிச் செய்தால் இந்த அமெரிக்கக் கண்டம் ஐரோப்பாக் கண்டத்தைப்போல் பல சிறு பகுதி களாகப் பிரிந்துவிடும். அதற்காகத்தான் வெப்ஸ்டர் அவருக்குச் சரியான பதில் கொடுத்தார். அவர் ஒற்றுமை யுணர்வு

நிறைந்த கூட்டுறவு தகர்க்கப்பட்டால் பிறகு கிடைத்தற்கரிய நமது சுதந்திரம் சிறிதும் நிலைக்காது என்பதை விளக்கிக் காட்டினர். சரி, இப்பொழுது வியங்கோள் நிலையைப் பற்றிக் கவனிப்போம்.

ஆபி: அநேகமாக நமக்கு நேரக்கூடிய கசப்பான விளைவுகளையே இந்நிலை குறிக்கும். இதற்கு உதாரணமாக, 'எனது கடன் தொல்லைகளிலிருந்து நான் மீண்டுவிட்டால் அநேகமாக மறுபடியும் கடனாளியாவேன்' என்கிற நிலையை ஒக்கும்.

மென்டார்: (புன்னகையுடன்) இதற்கு இந்த உதாரணத்தை ஏன் கூறுகிறாய்?

ஆபி: காரணம், இதுபற்றிய எண்ணம்தான் என் மனத்தில் எப்போதும் பாரமாக உறுத்தி வருகிறது.

மென்டார்: கடைக்கு மீண்டும் கஷ்டம் ஏற்பட்டுள்ளதா?

ஆபி: (அமைதியுடன்) ஆமாம், அங்கு விற்பனைக்காக இருந்த விஸ்கி முழுவதையும் பேர்ரி குடித்துத் தீர்த்துவிட்டான். அதனால் எந்த நேரத்தில் கடையை மூடவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுமோ? புரியவில்லை. நானும் அப்பாவுக்கு ஏற்ற மகனாகவே வாய்த்துள்ளேன். நிரந்தரமானதொரு

வேலை கிடைத்தால்கூட அதிலும் எனக்குத் தோல்விதான் கிட்டும்.

**மென்டார்:** ஆபி, உனக்கு இங்கு தோல்வி இல்லை. இங்குள்ள அனைவரும் உனது நண்பர்கள். உனது முன்னேற்றத்திற்காக உதவி செய்ய எப்பொழுதும் தயாராக உள்ளனர்.

**ஆபி:** (சற்று வருத்தத்துடன்) அது தெரியும். அதுவும், மென்டார் அவர்களே! உங்களைப் போன்று இரவு நெடு நேரம் வரை கஷ்டத்தையும் பாராமல் எனக்கு கல்வி அறிவூட்டுபவர்கள் இருக்கிறார்கள். மற்றும் ஜாஷ் ஸ்பீட், ஜட்ஜ் கிரீன் ஆகியோருக்கும், மற்றும் சிலருக்கும் நான் கடன் தர வேண்டியது உள்ளது. இவர்கள் எல்லோரும் எனக்கு போஸ்ட்மாஸ்டர் உத்தியோகத்தை வாங்கித்தர முயற்சி செய்கின்றனர். காரணம்—வாரத்திற்கொரு முறை தபால் வருவதால் அதை நான் திறமையாக நிர்வகிக்க முடியுமென்று நம்புகின்றனர். நட்புக்கு இலக்கணமாகத் திகழும் பல அரிய நண்பர்கள் எனக்கிருக்கிறார்கள். ஆனால் எனது விதியை அவர்களாலும் மாற்ற முடியாது. என்னுடைய சுபாவம் அந்த மாதிரி அமைந்திருக்கிறது.

**மென்டார்:** இந்தப் புது சேலத்தை விட்டு வெளியேறிச் செல்ல விரும்புகிறாய்.

எங்கோ ஒரு மூலையில் மறைந்து கிடக்கும் இவ்விடத்தில் யாருக்கும் எவ்வித புதிய வாய்ப்பும் கிட்டாது.

ஆபி: உண்மைதான். இங்கிருந்து வெளியேறி விட நினைத்தேன். தொடர்ந்து அதிலேயே என் சிந்தனை செல்கிறது. என் குடும்பத் தார் அனைவருமே எதைத் தேடிச் செல் கிறோம் என்பதை உணராமலே நாடோடி களைப் போன்று ஊர் ஊராகச் சுற்றித் திரிந்து கொண்டிருந்தார்கள். எனது வயோதிகத் தந்தை வர்ஜீனியாவை விட் டுக் கிளம்பி கென்டகியிலிருந்த பல இடங் களுக்குச் சென்றார். அங்கு தான் நான் பிறந்தேன். அதன் பிறகு இன்டியானா விற்கும், அங்கிருந்து இந்த இல்லினாயிஸிற் கும் வந்தார். நான் சிறுவனாக இருந்த போது திரும்பத் திரும்ப மூட்டையைக் கட்டுவதும் அவிழ்ப்பதுமாக இருந்த ஒரு நிகழ்ச்சிதான் என் மனத்தில் இன்றும் நிலைத்துள்ளது.

மென்டார்: சரி, அப்படியானால் கிளம்பிப் போ. உனக்காகப் புது உலகத்தில் தனி இடம் தேடிக் கொள்.

ஆபி: நானும் செத்கேலும் உண்மையிலேயே இங்கிருந்து வெளியேறி கென்ஸா ஸுக்கோ அல்லது நெப்ராஸ்கா பிராந்தி யத்திற்கோ சென்று விடுவதுபற்றித் தீவிர

மாக ஆலோசித்தோம். ஆனால் எங்கு சென்றாலும் என் கதை இப்படியே தானிக்கும்——ஏராளமான நண்பர்களும், நிறையக் கடனும்.

மென்டார்: அது சரி ஆபி—வாழ்க்கையில் எல்லாத் துறைகளிலும் தோல்வியுற்றவர்களுக்கென்று இரண்டு தொழில்கள் பிரத்தியேகமாக உள்ளன. ஒன்று—பள்ளி ஆசிரியத் தொழில்; மற்றொன்று அரசியல்வாதி யாதல்.

ஆபி: அப்படியானால் அதில் நான் பள்ளி ஆசிரியத் தொழிலேயே தேர்ந்தெடுப்பேன். நீங்கள் அரசியலில் ஈடுபடுங்கள். அதன் மூலம் நீங்கள் தேர்தலில் வெற்றி பெற்றாலும் பெறலாம்.

மென்டார்: ஆம். அதுவும் சாத்தியமாகலாம்.

ஆபி: தேர்தலில் வெற்றி பெற்றால் நீங்கள் நகரத்திற்குச் செல்லவேண்டி யிருக்கும். அதிலிரண்டிலுமே எனக்கு வெறுப்புத் தான்.

மென்டார்: நகரங்களின்மீது உனக்கு ஏன் வெறுப்பு? இதற்கு முன்பு ஏதாவது நகரத்தைப் பார்த்திருக்கிறாயா ?

ஆபி: பார்த்திருக்கிறேன். ஆற்றைக் கடந்து இரு முறை நியூ ஆர்லியன்ஸுக்குச்

சென்றிருக்கிறேன். அங்கு தங்கியிருத்தல் ஒவ்வொரு நிமிஷமும் என் உள்ளத்தை விவரிக்க முடியாத ஒருவித கிலி ஆட் கொண்டிருந்தது.

**மென்டார்:** கிலியா? அது எதனுல் ஏற்பட்டது?

**ஆபி:** அதைச் சொன்னுல் என்னை ஒருவிதப் பைத்தியக்காரனெனக் கருதுவீர்கள். அங்குள்ள மக்களைக் கண்டாலே எனக்குப் பீதியும் கிலியும் தான்.

**மென்டார்:** [சிரித்துக் கொண்டே] ஆமாம், அவர்கள் உன் பொன்னையும், பொருளையும் அபகரித்துக் கொண்டு விடுவார்கள் என்று பீதியடைந்தாய்?

**ஆபி:** அவர்கள் என்னைக் கொன்று விடுவார்களோ என்றுதான் பீதியடைந்தேன்.

**மென்டார்:** ஆமாம், உன்னை ஏன் அவர்கள் கொல்ல வேண்டும்?

**ஆபி:** அது ஏனே? எனக்குத் தெரியவில்லை.

**மென்டாரர்:** (சற்று நேரங்கழித்து) நீ எப்பொழுதும் சாவைப் பற்றியே எண்ணிக் கொண்டிருக்கிருய் அல்லவா?

**ஆபி:** ஆமாம், அதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை. சாவு எப்பொழுதும் என்னைச்

சூழ்ந்துகொண்டே இருக்கிறது. எனக்கு நினைவு தெரிந்த நாள் முதலாகவே இப்படித்தான். நான் இங்குள்ள மேஜை உயரம் வளர்ந்திருந்த பொழுது தான் என் தாயார் காலமானாள். அப்பொழுது சவப்பெட்டி தயார் செய்வதில் நானும் என் தந்தைக்கு உதவி செய்தேன். அதற்கு வேண்டிய மூளைகளை சிறிய அரிவாளால் வெட்டிக் கொடுத்தேன். என் தாயாரை என் பாட்டி பெட்ஸி ஸ்பாரோவின் கல்லறைக் கருகில் புதைத்தோம். அவ்விடத்திற்கு நான் அடிக்கடி சென்று பார்ப்பேன். அங்குள்ள சமாதிகளின்மீது மான்கள் துள்ளி விளையாடிக் கொண்டிருப்பதைக் காண ஆனந்தமாக இருக்கும். அதன் பிறகு நான்மான்களைக் கொல்வதையே விட்டு விட்டேன். என் தந்தை ஒரு மானைக் கொல்ல குறிப்பார்த்துக் கொண்டிருக்கையில் அவர் கைத்துப்பாக்கியைத் தட்டி விட்டேன். அதற்காக அவரிடம் செம்மையாக உதை வாங்கினேன். மான்களின் மருண்ட பார்வையைக் காணும்பொழுது (நியூ ஆர்லியன்ஸிலிருக்கிற வேட்டைக் காரர்களுடையதைப் போல) கொலை எண்ணம் நிரம்பிய மனிதர்களுடைய பார்வையை நான் ஒத்திட்டுப் பார்ப்பது வழக்கம்.

**மேன்டார்:** (சற்று மௌனத்திற்குப் பிறகு) ஆபி, உன்னுடைய பேச்சில் உறுதியே

இல்லை. எல்லாம் முன்னுக்குப் பின் முரணுயிருக்கிறது.

ஆபி : ஏன் அபபடிச சொல்கிறீர்கள் ?

மென்டார் : ஏனெனில் உன்னைப் போன்று இவ்வளவு நட்புணர்ச்சியோடு பழகுபவர்களைக் கண்டதில்லை. அதே நேரத்தில் மக்கள் பால் பொதுவான ஒரு வெறுப்புணர்ச்சியும் உன்னிடம் குடி கொண்டுள்ளது.

ஆபி : வெறுப்புணர்ச்சி என்ருல் ?

மென்டார் : பொதுவாக மனிதர்களை நம்பாதவன். நீ சமூகத்தையே வெறுக்கிருய்.

ஆபி : அப்படி இருந்தாலும் இருக்கலாம். தனிப்பட்ட முறையில் எவரிடத்திலும் எனக்கு வெறுப்பு இல்லை. ஆனல் மக்கள் கூட்டத்தைக் கண்டால் தான் ஏதோ ஒரு படை அணியைப் பார்ப்பது போன்ற வெறுப்புத் தோன்றுகிறது. அது சரி. நான் உங்களிடம் இங்கு பாடம் கேட்க வந்து விட்டு அனுவசியமாக ஏதோ வம்பு பேசிக் கொண்டிருக்கிறனே !

மென்டார் : அதனலென்ன, ஆபி. அப்படி நீ பேசப் பேசத்தான் நான் உன்னைத்திருத்த முடியும்.

**ஆபி:** அது சரி. என் தந்தையைப் பற்றி பேச ஆரம்பித்தாலே அவருடைய பாஷைதான் எனக்கும் வருகிறது. அடடா! நாளைக்கு நீங்கள் பள்ளியில் வேறு பாடம் சொல்ல வேண்டுமே! நான் போய் வருகிறேன். (எழுந்திருக்கிறார்.)

**மென்டார்:** சற்றுப் பொறு. [மேஜை மீதுள்ள பத்திரிகை குவியல்களைப் புரட்டி ஆங்கில சஞ்சிகை ஒன்றை எடுக்கிறார்.] உனக்குக் காண்பிக்க வேண்டிய இன்னொரு விஷயமும் உள்ளது. அது ஒரு கவிதை. [பத்திரிகையிலிருந்த கவிதையைப் புரட்டி எடுக்கிறார்.] இதோ, இந்தக் கவிதை தான். ஆபி, எங்கே இதைப் படி. [ஆபியிடம் பத்திரிக்கையைக் கொடுக்கிறார். ஆபி மேஜை ஓரமாக விளக்கு வெளிச்சத்தில் நகர்ந்து உட்கார்ந்துகொண்டு பத்திரிக்கையைப் பிரிக்கிறார்.]

**ஆபி:** (பாடலைப் படிக்கிறார்.) 'சாவைப்' பற்ற காலஞ்சென்ற கீட்ஸ் தனது பத்தொன்பதாவது வயதில் இயற்றியது.

"மரணம ஒரு நித்திரையோ
வாழ்வும்தான் ஒரு கனவோ!
நினைவிலே சுழலிடும் இன்பக்
காட்சிதான் நிலையோ!
மரணமே துன்பமெனக் கொள்ளுதலும்
நியாயமோ

*தரணியெலாம் சுற்றியலேந்து*
*மானிடர் துக்கவாழ்வை*
*நுகர்தலும் நீதியோ*
*மாந்தர் தம்கடும் வழியைவிடும்*
*நாள் என்ருே*
*இந்த ஞாலமெனும் அஞ்ஞான*
*மார்க்கத்தை விட்டகன்று*
*நிலேயான இன்பநிலே எய்துவரோ "*

[படித்துவிட்டு மென்டாரை ஏறிட்டுப் பார்க்கிருர்.] இது என்ன இவ்வளவு அழகாக இருக்கிறதே! [மறுபடியும் அக் கவிதையை மனனம் செய்யத் தொடங்கு கிருர். விளக்கொளி மங்குகிறது.]

[காட்சி முடிவு]

## காட்சி 3

நியூ சேலத்தில் உள்ள 'ரட்லட்ஜ் உண்டிச்சாலே' —ஜூலே நான்காம் தேதி : நண்பகல் நேரம்.

மரப்பலகைச் சுவர்களுடன் கூடிய விசாலமான அறை. ஜன்னல்கள் திரையிடப்பட்டு அழகுடன் மிளிர்கின்றன. சுவர்களில் தொங்கும் படங்கள் ஆடம்பரத் தோற்றத்தை யளிக்கின்றன. அதில் வாஷிங்டன் முதல் ஜாக்ஸன் வரை திகழ்ந்த அமெரிக்க ஜனுதிபதிகளின் படங்களும் காட்சியளிக்

கின்றன, அவற்றின் இடையே, பிரசார நோக்கத்திற்காகவோ, என்னவோ, ஹென்றிக்ஸேயின் படம் தொங்குகிறது. இடது பக்கத்தில் சமையலறைக்குச் செல்லும் கதவு; வலது புறமாகப் பின்னல் வாயிற் கதவு திறந்துள்ளது. சூரிய ஒளி படர்ந்து பிரகாசிக்கிறது.

அறைக்குள்ளே இரண்டு மேஜைகள், இரண்டு பெஞ்சிகள், மற்றும் பல நாற்காலிகளும் ஸ்டூல்களும் போடப்பட்டுள்ளன.

பின்புறத்திலுள்ள பெஞ்சியின் மீது பென் மாட்லிங் வீற்றிருக்கிருர். நீர் மல்கும் கண்களும் தொங்தியுமாக காட்சியளித்த அவர் ஒரு பழைய புரட்சி வீரர். குடியேற்ற நாட்டின் ஆபாசச் சின்னமான உடையும் விசாலமான தொப்பியும் அணிந்துள்ளார். அப்போது ஜோஷுவா ஸ்பீட் பின்தொடர ஜட்ஜ் பௌலிங் கிரீனும், நினியன் எட்வர்ட்ஸும் உள்ளே வருகின்றனர். உடல் பருத்து வயது முதிர்ந்த பௌலிங் சாத்வீகமானவர். இளைஞன் நினியன் உயரமானவன்! கவர்ச்சியான தோற்றமுடையவன், செல்வ வசதியுள்ளவன். சாந்தமும் இனிய சுபாவமும் கொண்ட ஜோஷ் எப்பொழுதும் சிந்தனை நிறைந்த தோற்றமுள்ளவர். அவர் அழகிய உடையணிந்து கொண்டிருந்தார்.

**பௌலிங்:** *[உள்ளே வந்து கொண்டே] எட்வர்ட்ஸ், இதுதான் ரட்லஜ் விடுதி! ஆனல் நல்விருந்து கிடைக்கும் ஒரு பொன் மாளிகை அல்ல.*

**நினியன்:** *அதனலென்ன? கிரீன், விஸ்கி கிடைத்தால் சரிதான். [இடது பக்கமாக*

*இருந்த கதவருகே சென்று ஜோஷ் கூப் பிடுகிறார்.]*

**ஜோஷ் :** *ரட்லஜ் குமாரி !*

**ஆன் :** *(கதவருகில் வந்து) என்ன வேண்டும், ஸ்பீட், அவர்களே.*

**ஜோஷ் :** *ஆபி லிங்கனைப் பார்த்தாயா ?*

**ஆன் :** *பார்க்கவில்லையே! ஒருவேளை அவர் ஓட்டப்பந்தயம் பார்க்கப் போயிருக்கலாம், [சமயலறைக்குள் திரும்பிச் செல்கிறாள். ஜோஷ் பௌலிக்கிடம் வருகிறான்.]*

**ஜோஷ் :** *நான் ஆபியைத் தேடிப் பிடித்துக் கூட்டி வருகிறேன்.*

**நினியன் :** *ஜோஷ், இன்று மாலைக்குள் நாம் ஸ்பிரிங்பீல்டுக்குத் திரும்பிவிட வேண்டு மென்பது ஞாபகமிருக்கட்டும். [ஜோஷ் வெளியே போய் விடுகிறான்.]*

**பௌலிங் :** *[மாட்லிங்கைப் பார்த்து] பென் மாமா! சவுக்கியம் தானா? எட்வர்ட்ஸ் அவர்களே, இப்படி அமருங்கள். (வலப் புறமிருக்கும் மேஜை அருகே செல்கின் றனர்.)*

**பென் :** *வணக்கம் பௌலிங். [சமயலறையி லிருந்து ஆன் வருகிறாள்.]*

**ஆன் :** *வாருங்கள் ஜட்ஜ் கிரீன்.*

**பௌலிங் :** நல்வாழ்த்து உனக்கு, ஆன். உன் தகப்பனார், வைத்திருக்கும் விஸ்கியில் ஒரு புட்டி கொடு, பார்க்கலாம்.

**ஆன் :** இதோ, கொண்டு வருகிறேன். [உள்ளே செல்ல எத்தனிக்கிறாள்.]

**பேன் :** [அவளை நிறுத்தி] பார்படோஸ் ரம்மில் எனக்கு ஒரு மொந்தை கொண்டுவா.

**ஆன் :** மன்னியுங்கள், மிஸ்டர் மாட்லிங். முன்பே உங்களுக்கு ஒரு மொந்தை கொடுத்திருக்கிறேன். அதற்குப் பணம் கொடுத்தால்தான் மேற்கொண்டு கொடுக்கலாம் என்று என் தந்தை கூறியுள்ளார்.

**பேன் :** அது சரிதான் பெண்ணே! உன் தந்தை கூறியிருப்பது தெரியும். ஆனால் என்னைப் போன்ற பழம் பெரும்போர் வீரனுக்கே ஒரு சலுகை காண்பிக்க முடியாதென்றால் இந்த நாட்டு மக்கள் நன்றியற்றவர்கள் என்று தான் சொல்லவேண்டும்.

**பௌலிங் :** அவருக்கும் ரம் கொண்டு வந்து கொடு, ஆன். அதற்கான பணம் நான் தருகிறேன். [வயது முதிர்ந்த ட்ரம் கோக்டால் வருகிறார்.]

**பேன் :** [அரை மனத்துடன்] ரொம்ப நன்றி, ஜட்ஜ்.

**ட்ரம் :** ஆன், எனக்கு ஒரு கோப்பை 'ஸேபாகோ' டீ கொண்டு வா.

ஆன்: இதோ கொண்டு வருகிறேன். (இடது புறமாக அவள் வெளியே செல்கிறாள். ட்ரம் மேஜையை அணுகி உட்காருகிறார்.)

பௌலிங்: பேசாமல் இரு, பெண்.

ட்ரம்: மிஸ்டர், எட்வர்ட்ஸ், நமது மாபெரும் நகரத்தைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்.

நினியன்: வசதி நிறைந்த அழகான இடம் தான். இது மலையுச்சி மீதுள்ள புல் தரை நடுவே அமைந்துள்ள இந்த அழகிய நகரம் என்னைப் பெரிதும் கவர்ந்துள்ளது.

ட்ரம்: ஆம். மேற்குப்பிராந்தியத்தை அணுகும் பிரதான மார்க்கத்தில் நாங்கள் குடியேறி யிருக்கிறோம். சுற்றிலுள்ள கீழ் மக்களும் அநாகரிக ஜனங்களும் இங்கிருந்து தொலைந்து விட்டால் இன்னும் நன்றாக மேன்மையடைவோம்.

நினியன்: (அமரிக்கையாக) அதற்கென்ன? சந்தேகமில்லாமல் வளர்ச்சி யடைவீர்கள். [விஸ்கி, டீ, ரம் முதலியவற்றை எடுத்துக் கொண்டு ஆன் வருகிறாள்.]

பௌலிங்: ஆன், உனது சேவைக்கு நன்றி.

ஆன்: இன்னும் மண் வண்டி வரவில்லையோ?

ட்ரம்: வரவில்லையே! நானும் அதற்காகத் தான் காத்துக் கொண்டிருக்கிறேன்.

**பௌலிங் :** *என்ன ஆன், கடிதம் ஏதாவது எதிர்பார்க்கிருயா?*

**ஆன் :** *அதெல்லாமில்லை. எனக்கு யார் எழுத போகிருர்கள்?*

**பௌலிங் :** *ஜூலை நாலாம் தேதியன்று என்ன நடக்குமென்று உன்னுல் இப்போது கூற முடியாது. [அவரும் நினியனும் தங்கள் கோப்பைகளிலிருந்த பானத்தை அருந்து கின்றனர்.] கண்மணி, உனக்குச் சகல வித சௌபாக்கியங்களும் கிட்டட்டும். ஆனுல் இந்த எட்வர்ட்ஸ் இருக்கிருரே, அவர் விவாகமானவர். அவரைப் பார்த் துக் கண்ணைச் சுழற்றுவதில் பயனில்லை.*

**ஆன் :** *[தனக்குள் சிரித்தவாறே] ஜட்ஜ் கிரீன் அவர்களே, இது என்ன பரிகாசம்?*

*[சமையலறைக்குள் போகிருள்.]*

**நினியன் :** *அழகு வாய்ந்த சூட்டிக்கையான பெண்தான் இவள்.*

**ட்ரம் :** *நல்ல குலம் கூடத்தான்!*

**நினியன் :** *இப்பகுதியில் பெண்களுக்குப் பஞ்ச மிருந்தும் இவ்வளவு அழகுள்ள பெண்ணை யாரும் கொத்திக்கொண்டு போகாமலிருப் பது விந்தைதான்!*

**பௌலிங் :** *அவளது மனதைக் கவர்ந்த ஒருவர் உண்டு. தன்னை மக்நீல் என்று சொல்லிக் கொண்ட அவரிடம், பாவம்! இந்தப்*

பெண் தன் மனதைப் பறிகொடுத்து அவரையே மணந்து கொள்வதாகவும் வாக்கும் கொடுத்துவிட்டாள். அவனுடைய உண்மைப் பெயர் மக்மமார் என்று இப்பொழுதுதான் தெரிகிறது. கையில் சிறிது பணம் சேர்ந்தவுடன் சீக்கிரம் திரும்பி வருவதாக இவளுக்கு வாக்களித்து விட்டு ஊரைவிட்டுப் போய்விட்டான். அவனுக்காகவே இவள் இன்னும் காத்துக் கிடக்கிறாள். அதுசரி எட்வர்ட்ஸ் உங்களுக்கு நேரமாகிவிட்டது போலிருக்கிறதே. இந்த நியூசேலத்தில் உங்களுக்கு என்ன தேவை என்று தெரிவியுங்கள். எங்களாலானவரை........

**னியன் :** எனக்கு என்ன தேவை என்பது உங்களுக்கு நிச்சயமாகத் தெரிந்திருக்கும்.

**ட்ரம் :** உங்களுக்கு 'ஓட்' தேவை. என் ஓட்டு உங்களுக்குத்தான். கொடுங்கோலன் ஆண்டி ஜாக்ஸனைத் தொலைப்பதற்கு எதுவாயினும் நாங்கள் செய்யத் தயார் [சுவரிலிருந்த ஜாக்ஸன் படத்தை நோக்கிப் பயமுறுத்துவதுபோல் விரலை ஆட்டுகிறான்]

**னியன் :** நம் மதிப்பிற்குரிய ஜனாதிபதியின் நற்குணங்களைப் பாராட்டுவதில் நான் எவருக்கும் சளைத்தவனல்ல. ஆனால் அவர் நமது பாங்கு முறைகளைச் சீர்குலைத்து

*நாணயக் கொள்கையில் நமது நம்பிக்கையைப் பாழாக்கி, பூரண அதிகாரம் பெற்றுள்ள ராஜ்யங்களையுமே, யூனியனிலிருந்து பிரிந்து போகும் நிலைக்குக் கொண்டு வந்தால் அதற்கு முட்டுக்கட்டை போட்டே தீரவேண்டும்.*

**பௌலிங்:** *இவரது காலம் முடிய இன்னும் இரண்டு ஆண்டுகள் உள்ளனவே. இந்தப் பெரியவர் அதுவரை சாகாதிருந்தால் அவரது செல்வாக்குக்கு எதிராக நம் "பாச்சா" ஒன்றும் பலிக்காது.*

**கினியன்:** *ஆனால் இந்த இல்லினாயிஸ் ராஜ்ய நிர்வாகத்தில் அவருக்கு இச்சகம்பாடி உயிர் வாழும் ஆட்களைத் துரத்த நாம் இப்போதே ஆயத்தமாகலாம். "ஆண்ட்ரு ஜாக்ஸன் ஒழிக" என்ற போர்ச் சங்க நாதம்தான் நம்மிடமுள்ளதே.*

[இச் சந்தர்ப்பத்தில் ஜாக் ஆர்ம்ஸ்ட்ராங்கும், கிளாரி குரோவைச் சேர்ந்த மூவரும் பிரவேசிக்கின்றனர். அவர்களுடைய பெயர்கள்—பாப், பார்கஸ், ஜாஸ்ப் என்பவையாம். அவர்கள் நகர சோதாக்கள்; ஆர்ப்பாட்டப் பேர்வழிகள்; நல்ல தன்மையுடன் முரட்டுக்குணமும் படைத்தவர்கள்.]

**ஜாக்:** *[கதவருகில் இடது பக்கமாய்ச் சென்று] ரட்லட்ஜ் குமாரி!*

**ஆன்:** *[கதவுப் பக்கம் தோன்றி] உனக்கு என்ன வேண்டும். ஜாக் ஆர்ம்ஸ்ட்ராங்?*

**ஜாக்:** மன்னிக்க வேண்டும், ரட்லஜ் குமாரி எங்களுக்கு ஒரு மொந்தை சாராயம் வேண்டுமே.

**பாப்:** உடனே வேண்டும், எங்களுக்கு ஒரே வரட்சி!

**ஆன்:** போ! வெளியே, போ, போக்கிரி!

**ஜாக்:** ஒரு மொந்தை என்று சொன்னேன். என்ன தோழர்களே, நான் சொன்னது காதில் விழுவில்லையா?

**பியார்கஸ்:** அப்படித்தான் என் காதில் விழுந்தது ஜாக்.

**ஜாஸ்ப்:** அதை எடுத்துவா, ஆன்.

**ஆன்:** என்னுடைய தந்தை இங்கிருந்தால் காட்டு ஓநாய்களை வேட்டையாடுவது போல் உன்னைச் சுட்டிருப்பார்.

**ஜாக்:** உங்கப்பா இருந்திருந்தால் உன்னைக் காட்டிலும் இன்னும் பீதி யடைந்திருப்பார். நாங்களெல்லாம் கிளாரி குரோவ் அடவியின் கொடிய பூனைகள் என்று அவர் அறிவார். நாங்கள் ஓநாய்களை விட மோசம். தாக வெறி எங்கள் தலையில் ஏறியிருக்கிறது. மரியாதையாய் சீக்கிரம் விஸ்கி கொண்டுவா. இல்லையேல் உன் தந்தையின் பொருள்களெல்லாம் தவிடு பொடியாய்விடும். [ஆன் போகிறாள்.]

**ட்ரம்:** [காதோடு நினியனிடம்] இது தான் முன்பு நான் சுட்டிக்காட்டின மட்டரகமான கூட்டம்.

**ஜாக்:** ஏய்! ட்ரம் கோடால்! தொடை நடுங்கி, டீ குடித்துக்கொண்டு என்ன உளறு கிறாய்?

**பாப்:** அவன் ஒரு துரோகி. அவனுக்குச் சவுக்கடி தண்டனை கொடுக்க வேண்டும்.

**பியார்க்ஸ்:** அவன் வயிற்றிலுள்ளதெல்லாம் வெளியே கக்கும்படி பிழிந்தெடுக்க வேண்டும் ஜாக்.

**ஜாஸ்ப்:** [உரத்த குரலில்] சாராயத்தைக் கொண்டு வா, ஆனி.

**ஜாக்:** ஜட்ஜ் பௌலிங் கிரீன் அவர்களே, தாங்களுமா இங்கே? சால் போன்ற தொந்தியும் நீங்களும்! யோக்கியர்களைச் சிறையில் தள்ளிய சீமானல்லவோ தாங்கள்—அது யார் அந்தப் புது மனிதர்? இவ்வளவு நாஸூக்கான ஒருவரை நியூ சேலத்தில்காண முடியாதே.

**பௌலிங்:** ஜாக், இவர்தான் ஸ்பிரிங்பீல்ட்டைச்சேர்ந்த நினியன் எட்வர்ட்ஸ். தயவு செய்து வாயை அடக்கி உட்காருங்கள்; மரியாதையாய் நடந்து கொள்ளுங்கள்.

**ஜாக் :** அட! நினியன் எட்வர்ஸா! ஓஹோ! கவர்னர் மகளு? நல்லது, நல்லது.

**நினியன் :** கஜெகர் லாக்! என்னைச் சரியாக தெரிந்து கொண்டுவிட்டீர்கள்.

**ஜாக் :** நீங்கள் நியூ ஆர்லயன்ஸ் ராஜ்யபாணியில் உடையணிந்து வெள்ளிப் பூண்போட்ட கைத்தடி, தங்க கடியார சங்கிலி சகிதம் காட்சியளிக்கிறீர்கள். இதில் ஆச்சரியப் படுவதற் கொன்றுமில்லை. ஊரார் நிலங்களைக் கொள்ளையிட்டு உங்கள் தகப்பனுர் சேர்த்து வைத்த பணத்தைக் கொண்டு நீங்கள் எதைவேண்டு மானுலும் வாங்கலாம். எங்களிடமிருந்து உன் தகப்பனுர் கொள்ளைப் பணம் வரி வசூலிக்கிறுர். அதனுல் உன் சட்டைப்பை முழுவதும் ஒரே பணமாகத் தானிருக்கும். என்ன மிஸ்டர் எட்வர்ட்ஸ், நான் கூறுவது சரி தானே!

**பாப் :** ஜாக், இந்தப் பணத்தை நாம் அபகரித்துக் கொள்ளலாமே!

**பியாரக்ஸ் :** செம்மையாகத் தாக்க வேண்டும் இவரை.

**ஜாக் :** [நினியனைப் பார்த்து] அதிருக்கட்டும். தாங்கள் இங்கு எதற்காக வந்தீர்கள்? சண்டையைக் கிளப்ப உத்தேசமா? அப்படியானுல் நான் அதற்குத் தயார். உம்மு

டன் மல்யுத்தம் செய்து பிய்த்து, பிராண்டி கிழித்தெறிந்து விடுகிறேன்.

**ஆன் :** [உள்ளே நுழைந்து] ஜாக் ஆர்ம்ஸ் டிராங் இதோ நீங்கள் கேட்ட சாராயம்! குடித்துவிட்டு இங்கிருந்து செல்லுங்கள். [ஆன் நான்கு கோப்பைகள் கொணர்ந்து வைக்கிருள்.]

**ஜாஸ்ப் :** அவர் ஒரு மொந்தை யல்லவா கேட்டார்?

**ஜாக் :** [கோப்பைகளைப் பார்த்தபடி] என்ன? ஒவ்வொருவருக்கும் ஒரு கோப்பைதாஞ? கடைவாயிக்குக் கூட வராதே! ஒரு மொந்தை நிறையக் கொண்டுவா, ஆன்.

**பியார்க்ஸ் :** ஒரு வேளை அவளால் எடுத்து வர முடியவில்லையோ, என்னவோ? நான் போய் எடுத்து வருகிறேன் ஜாக். [சமை யலறைக்குள் போகிருன்.]

**ஆன் :** [மனம் நொந்து நிராசையுடன்] இந்தக் குடிக்காரர்களிட மிருந்து அபலைகளைக் காப்பாற்றக் கூடியவர்கள் ஒருவருமே இல்லையா?

**நினியன் :** ஏன்? நான் இருக்கிறேன். முடிந்த வரை ஒரு கை பார்க்கிறேன். [எழுந்தி ருக்கிருன்.]

**பௌலிங்:** [அவனைத் தடுத்து] சிறிது ஜாக்கிரதையாகவே இருங்கள் எட்வர்ட்ஸ்.

**ஜாக்:** அது சரிதான், எட்வர்ட்ஸ், அந்தப் பெரியவர் சொல்கிறபடி சற்று ஜாக்கிரதையாகவே இருங்கள். அந்தத் தொந்திப்பயல் நம்மைக் காட்டிலும் புத்திசாலி. இது போன்ற முரடர்கள் விஷயத்தில் அவருக்கு நிரம்ப அநுபவம் உண்டு. அந்த வெள்ளிப் பூண் தடியாலேயே உன் தொண்டையை நொறுக்கி விடுவாரென்று அவருக்குத் தெரியும். பாப், நாம் ஹாங் பியர்ஸனுக்கும் கஸ் நாச்மீஞ்சுக்கும் என்ன செய்தோமென்பதை நீ எடுத்துச் சொல்.

**பாப்:** ஜாக் அவர்கள் இருவரையும் பீப்பாயிலடைத்து, ஆணி வைத்து இறுக்கி இந்த நியூசேலம் மலையுச்சியிலிருந்து உருட்டி விட்டார். அந்தப் பீப்பாய் உருண்டு வந்து கரையைக் கடந்து ஆற்றிலே விழுந்து விட்டது. பிறகு நாங்கள் பீப்பாயைத் திறந்த போது அவர்களிருவரும் அசைவற்றுக் கிடந்தனர்.

**ஜாக்:** ஆனல் உங்களையும், உங்கள் நண்பரையும் போட்டு அடைக்கப் பெரிய பீப்பாய் தேவைப்படும்; பெரியவர் ஹிக்கரியன். நல்ல பெயரைக் கெடுக்க துஷ்பிரசாரஞ் செய்யும் சதிகாரர்களையும் அப்படித்தான்

செய்வேன் [பியார்க்ஸ்] மொந்தையுடன் வருகிறான்.]

**பென் :** அவனைக் கொன்று போடுங்கள். நீங்கள் தான் உண்மையான அமெரிக்கர்கள்.

**நிவியன் :** [எழுந்திருக்கிறார்] பெரியோர்களே, எல்லோரும் வெளியே வாருங்கள். உங்கள் இஷ்டப்படி சண்டை போடலாம்.

**ட்ரம் :** மிஸ்டர் எட்வர்ட்ஸ், இப்படி நீங்கள். சண்டைக்கு இழுப்பது தற்கொலை செய்து கொள்ள நிச்சயத்தவாறாகும்.

**ஜாக் :** அதெல்லாமில்லை; நாங்கள் கொலைகாரர்களில்லை. எலும்பைத் தான் நொறுக்குவோம். அதன் பிறகு சில மாதங்களில் உருத்தெரியாமல் மாறிவிடுவாய். பியார்கஸ் அந்த மொந்தையைக் கொண்டுவா. [அவர்கள் வெளியே போகும் போது வாசலில் அழகான உடையுடன் ஆபி எதிரில் வருகிறார். அவர் கையில் தபால் கடிதங்கள் இருந்தன. அவருக்குப் பின் புறத்தில் ஜாஷ் ஸ்பீட் நின்று கொண்டிருந்தார்.]

**ஆபி :** ஜாக், மண் வண்டி வந்து விட்டது. இன்னும் நீங்கள் குடித்தாக வில்லையா ? ஆன்! உங்களுக்கு ஒரு கடிதம் இருக்றது. [ஆனிடத்தில் அவருக்கு விசேஷ நாணம் ஏற்படுகிறது.]

ஆன் : ஆபி, உங்கள் உதவிக்கு என் நன்றி. [கடிதத்தைப் பெற்றுக் கொண்டு வெளியே ஓடுகிருள்.]

பென் : ஆபி, இப்போது ஒரு சண்டை நடக்கப் போகிறது.

நினியன் : [ஜாக்கைப் பார்த்து] சண்டைக்கு வருவதனல் வாருங்கள்.

ஜாக் : ரொம்ப நல்லது, பிள்ளேகளா.

ஆபி : சண்டையா? யார் யாருக்கு? ஏன்?

ஜாக் : ஆபி, இவர் தான் நினியன் எட்வர்ட்ஸின் குமாரர். ஸ்பிரிங்பீல்டிலிருந்து வந்திருக்கிருர். அவருக்குச் செம்மையான உதை வேண்டும் போலிருக்கிறது. அவரிஷ்டப்படியே கொடுக்கலாமென்று எண்ணுகிறேன். [ஆபி நினியனே ஏற இறங்கக் கூர்ந்து கவனிக்கிருர்.]

பௌலிங் : ஆபி, இந்தச் சண்டை விஷயத்தைத் தடுத்துவிடு, அப்பா. இல்லாவிடில் கொலேயில் முடிந்துவிடும்.

ஜாக் : ஏய், சால்வயிறு கிரீன்! வாயை மூடுகிருயா, இல்லேயா! ஆண்டி ஜாக்ஸனின் விரோதிகளேக் கொலே செய்வதுதான் நலம்; வாங்கடா!

ஆபி : சற்றுப் பொறு ஜாக், இன்று என்ன தினம் என்பதை மறந்துவிட்டாயா?

**ஜாக்:** எனக்குத் தெரியாது. ஆனல் ஜூலை நாலாம் தேதி யன்று ஒரு அரசியல் வாதியைச் சவுக்கால் அடிக்கலாம்.

**ஆபி:** நல்லது! சண்டை போட்டாக வேணு மென்கிற அவா உனக்கு இருக்குமானல் அயலூர்க்காரர்களை வலித்திழுக்கின்ருய்! இந்நகரத்திற்கு நான் போஸ்ட் மாஸ்டர் என்ற ஹோதாவில் நானும் தான் ஒரு அரசியல்வாதி. உன் கைவரிசையை என் னிடம் காட்டு. [ஜாக்கைப் பக்கத்தில் தள்ளிவிட்டு நினியனை நோக்கி] உங் களைப் பற்றி எனக்குத் தெரியாது. என் பெயர் லிங்கன். உங்களைப் போன்ற ஒரு வீர புருஷனேடு கைகுலுக்க ஆசைப்படு கிறேன்.

**நினியன்:** [ஆபியின் கையைக் குலுக்கிக் கொண்டு] உங்களை நான் தெரிந்து கொண்டதில் எனக்கு மிகவும் மகிழ்ச்சி.

**ஆபி:** ஆம், நான் தக்க தருணத்தில் இங்கு வந்தேன். இல்லாவிடில் எல்லாம் விரச மாய்ப் போயிருக்கும். கைகூட கலந்திருக் கும். இந்தாருங்கள், பௌலிங், உங்களுக்கு இரண்டு கடிதங்கள்; ட்ரம், இதோ உங் களுக்கு "ஸின்ஸினுடிஜார்னல்".

**ஜாக்:** ஆபி, உனக்கு சம்மந்த மில்லாத இவ் விஷயத்தில் நீ தலையிடாதே! இந்தத் தேச

பக்தி விஷயம், எங்கள் கௌரவத்தைச் சார்ந்தது.

ஆபி: இந்த நகரில் நடக்கும் விஷயங்களெல்லாவற்றிலும் எனக்குப் பங்கு உண்டு ஜாக்! இந்த மாதிரியான வேலை எனக்கு முக்கியம். நான் வரும் வழியில் ஹன்னுவைச் சந்தித்தேன். அவள் உன்னை உடனே வரச் சொன்னுள். இல்லாவிடில் பலகாரங்களை ஸ்ட்ரேடர்ஸ் குழந்தைகளுக்குக் கொடுத்து விடுவாளாம். பிறகு நீயும் உன் குழந்தைகளும் பட்டினிதான். ஆம். புறப்படு சீக்கிரம்!

பியார்க்ஸ்: ஆபியின் பேச்சைக் கேட்டு சண்டை போடாமல் விட்டு விட்டு ஓடப்போகிருயா? ஜாக்.

ஆபி: ஆம், சந்தேக மில்லாமல் [ட்ரம் பக்கம் திரும்பி] ட்ரம், அந்தப் பத்திரிகையை நீங்கள் இப்போது படிக்கவில்லையென்ருல் நான் கொஞ்சம் படித்து விட்டுத் தருகிறேன்.

ட்ரம்: அப்படியே, இந்தா, இதோ, பத்திரிகை. [பத்திரிகையை ஆபியிடம் கொடுக்கிருன்.]

ஆபி: [ஜாக்கைப் பார்த்து] விரைந்துபோ ஜாக், இல்லா விட்டால் ஹன்னு சீறப் போகிருள், பார். [ஆபி ஒரு நாற்காலியில்

அமர்ந்து பத்திரிகையைப் பார்க்கிறார். ஜாக் அவரை சிறிது கவனித்தபடி சிரித்துக்கொள்கிறான்.]

**ஜாக் :** [நினியனைப் பார்த்து] ஆபி லிங்கனால் உன் உயிர் தப்பியது. ஆபி என் நண்பன். அவனுக்காகச் சண்டையை நிறுத்திக் கொள்கிறேன்.

**ஆபி :** அது மட்டுமல்ல. என் ஒருவன் மீது தான் உன்னால் கைவைக்க முடியாது.

**ஜாக் :** மிஸ்டர் நினியன் எட்வர்ட்ஸ், எச்சரிக்கிறேன் ; மற்றொருதரம் இங்கே வந்து தகராறு வைத்துக் கொள்ளாதீர்.

**ஆபி :** ஜாக், சீக்கிரம் போ, ஹன்னா காத்துக் கொண்டிருக்கிறாள்.

**ஜாக் :** [ஆபியிடம் நெருங்கி] ஆபி நான் செல்கிறேன். ஆனால் உனக்கு ஒன்று சொல்லுகிறேன். இம்மாதிரி நாள் முழுவதும் புத்தகமே கதி யென்றிருப்பாயானால் உன்னிடம் இப்போதுள்ள வீரம் குன்றி கோழையாகிவிடுவாய். எவர் வேண்டுமானாலும் உன்னைத் தாக்கலாம். ஏன் நான் கூடத் தான் [என்று சொல்லித் தானே சிரிக்கிறான். ஆபியின் முதுகைத் தட்டிக் கொடுத்து விட்டுச் செல்கிறான்.] உங்களைச் சந்தித்ததில் மெத்த சந்தோஷம், மிஸ்டர் எட்வர்ட்ஸ். [அவன் வெளியேறுகிறான்.

பாபும் ஜாக்கும் பின்தொடருகின்றனர். மொந்தையை எடுத்துக்கொண்டு பியார் கஷ-ம் அவர்களுக்குப் பின்னல் செல் கிருன்.]

**நினியன் :** (ஜாக்கிடம்) தங்களைச் சந்தத்தில் எனக்கும் மெத்த சந்தோஷம்.

**ஆபி :** பியார்கஸ்! உனக்கு அந்த மொந்தை எங்கிருந்து கிடைத்தது?

**பியார்கஸ் :** (சற்று நடுக்கத்துடன்) மிஸ் ரட் லட்ஜின் சமயலறையில் இருந்தது. இதை ஜாக்தான் எடுத்து வரச் சொன்னன்........ நான் அதை........

**ஆபி :** சரி, அதைக் கீழே வை! வழியில் செத் கேலைப் பார்த்தால் அவருக்கு ஒரு கடிதம் வந்துள்ளது என்று சொல்.

**பியார்கஸ் :** அப்படியே சொல்கிறேன். ஆபி. [மொந்தையைக் கீழே வைத்துவிட்டு பியார்கஸ் போகிருன். சிரித்தபடி ஜாஷ் ஸ்பீட் மேஜை அருகே வருகிருன்.]

**ஜாஷ் :** ரொம்ப நல்லதாய்ப் போயிற்று, நினி யன். இந்தப் போக்கிரிகள் உங்களைத்தாக் கியிருந்தால் தங்கள் மனைவியிடம் எப்படித் திரும்ப அழைத்துப்போக முடியும்?

**நினியன் :** என்ன நடக்குமென்பதைப் பற்றி எனக்கு முன் கூட்டியே தெரியும். ஜ்ராஷ்

[ஆபி பக்கம் திரும்பி] உங்களுக்கு மிகவும் நன்றி லிங்கன்.

**ஆபி:** அது சரி, மிஸ்டர் எட்வர்ட்ஸ்; ஜாக் ஆர்ம்ஸ்டிராங் வீண் ஜம்பம் அடித்துக் கொள்ளுவானே யொழிய மிகவும் நல்ல எண்ணமுடையவன்.

**நினியன்:** எங்களோடு சேர்ந்து நீங்களும் குடியுங்களேன்!

**ஆபி:** அதெல்லாம் வேண்டாம், மெத்த நன்றி. [அவர் பத்திரிகையைப் படிக்கிறார். பௌலிங் கண்ணாடிக் கோப்பைகளில் மதுவை ஊற்றுகிறார்.]

**பௌலிங்:** எனக்கு இன்னொரு கோப்பை மது வேண்டும். இன்னும் எனக்கு அந்த நடுக்கம் போகவில்லை. [நினியனிடம் ஒரு கோப்பையைக் கொடுத்துவிட்டு தானும் மது அருந்துகிறான்.]

**ட்ரம்:** மிஸ்டர் எட்வர்ட்ஸ்! இம்மாதிரியான அக்கிரமச் செயல்களால்தான் நம் ஊருக்கே கெட்ட பெயர் ஏற்படுகிறது.

**நினியன்:** இப்பொழுதெல்லாம் நமது நாட்டுத் தலை நகரத்திலும் மற்ற இடங்களிலும் இந்த மாதிரியான காலித்தனம் மலிந்து விட்டது. [உட்கார்ந்துகொண்டு மதுவை அருந்துகிறார்.]

ஆபி : *பிரான்சிலுள்ள லயான்ஸில் ஏதோ கலகமாம். இதில் வந்திருக்கிறது. [பத்திரிகையைப் படிக்கிறார்.] "நெசவாலைகளில் புது மாதிரியான தையல் இயந்திரங்கள் நிறுவப்பட்டதன் நிமித்தம் வேலை யிழந்த பெரிவாரியான தொழிலாளர்களின் கூட்டம் இந்த நகரத்தில் பயங்கரமான கிளர்ச்சி செய்து ஆர்ப்பரித்தனர். பிரெஞ்சு அரசாங்க ராணுவத்தினர் கடுமையான நடவடிக்கைகள் மூலம் அடக்கி ஒடுக்கினர். அதன் பின்புதான் ஆர்ப்பாட்டங்கள் யாவும் ஓய்ந்தன. அந்தக் கலகக்காரர்கள் 'ஒன்று வேலை செய்து வாழ்வோம் அல்லது போரிட்டு மடிவோம்' என்பன போன்ற புரட்சி கோஷங்கள் கொண்ட கொடிகளைத் தாங்கி ஊர்வலமாகச் சென்றனர். [ஆபி, வலது புறத்திலிருந்த படத்தைப் பார்க்கிறார்.] ஓ! இது புரட்சி!*

பௌலிங் : *இருக்கலாம். ஆனால் நமது நியூ சேலத்திற்கும் அவ்விடத்திற்கும் வெகு தூரமாயிற்றே!*

ஜாஷ் : *உங்களோடு சற்றுப் பேசவேண்டும். பத்திரிகையைக் கீழே வையுங்கள்!*

ஆபி : *என்னுடனா? எதைப்பற்றி? ஆச்சரியத்துடன். ஜாஷ், பௌலிங், நினியனைப் பார்க்கிறார்.]*

ஜாஷ் : *உன்னைப் பார்ப்பதற்காகத்தான் நான் இங்கே எட்வர்ட்ஸை அழைத்து வந்தேன்.*

*அவருடைய அநுமதியின் பேரிலேயே எதற்காக என்பதைச் சொல்லவேண்டும்.*

**நினியன் :** *பரவாயில்லை! தொடர்ந்து சொல், ஜாஷ். [அனைவரும் ஆபியைக் கூர்ந்து கவனிக்கிறார்கள்.]*

**ஜாஷ் :** *ஆபி! ராஜ்ய சட்டசபை தேர்தலுக்கு நிற்கிறாயா ?*

**ஆபி :** *எப்பொழுது ?*

**ஜாஷ் :** *சமீபத்தில் அடுத்துவரும் தேர்தலில் தான்.*

**ஆபி :** *ஏன் ?*

**நினியன் :** *மிஸ்டர் லிங்கன்! சற்று முன்புதான் தாங்கள் எனக்கு அறிமுகமானீர்கள். ஆனால் இந்த இடைக்காலத்திலேயே ஜாஷ் ஸ்பீட் கருதுவதுபோல் நீங்கள் தான் எங்கள் விருப்பத்திற்கேற்ற நபர் என்பதை ஒத்துக் கொள்ளுகிறேன். நீங்கள் தேர்தலுக்கு நின்றால் விக்கட்சியினர் அனைவருமே உங்களை ஆதரிப்பார்கள்.*

**ஆபி :** *இதெல்லாம் என்ன? உன் வேலைதானா, ஜாஷ் ?*

**ஜாஷ் :** *[சிரித்துக்கொண்டே] அதெல்லாம் இல்லை, இல்லை. பொது மக்கள்தான் உங்களை விரும்புகின்றனர்!*

**ட்ரம்:** பௌலிங்! இதைப்பற்றி உங்கள் கருத்தென்ன?

**பௌலிங்:** [திருப்தியுடன்] இந்த யோசனையை நான் வரவேற்கிறேன். தவிரவும், ஆபி, நீங்கள் எந்தப் பிரச்னையைப் பற்றியும்—பிரிந்து போதல், டெக்ஸாஸ், தேசீய பாங்கு நெருக்கடி ஆகியவைபற்றி—நீங்கள் திறம்பட வாதிப்பதில் வல்லவர். தவிரவும் இதனல் சற்றுக் குதூகலமாகப் பொழுது போகும்.

**ஆபி:** '[எழுந்திருக்கிறார்] நான் என்ன நினைக்கிறேன் என்பது பற்றி யாரும் கேட்கப் போவதில்லையா?

**ஜாஷ்:** (சிரிக்கிறார்) அதுசரி, நான் கேட்கிறேன், சொல் ஆபி.

**ஆபி:** (சற்றுத் தாமதிக்து) நீங்கள் சொல்வது ஒரு வேடிக்கையான யோசனைதான். இதைப் பற்றித் திடீரென்று ஒரு முடிவெடுக்க இயலவில்லை. ஆனாலும் இது எனக்கு அவ்வளவாக விருப்பமில்லாத விஷயம்தான்.

**பௌலிங்:** நீ, தேர்தலில் வெற்றியடைந்தால் உனக்குத் தினசரி ஊதியமாக மூன்று டாலர்கள் கிடைக்குமென்பதை மறந்து விடாதே.

**ஆபி:** நல்ல ஊதியம்தான் என்பதில் சந்தேகமில்லை. தவிர, பௌலிங், உங்கள் நோக்கம்

என்னவென்றும் புரிகிறது. நான் உங்க களுக்கு ஏராளமாகக் கடன் கொடுக்க வேண்டியுள்ளது. இருபது வருஷகாலம் நான் சட்டசபையில் பணியாற்றினல் தின சரி இரண்டரை டாலர்வீதம் உங்களுக்குத் திருப்பிக் கொடுத்துவிட முடியும். [விரலை மடக்கிக் கணக்கு பார்க்கிறார்.]

**பௌலிங்:** கடனைப் பற்றி நான் நினைக்கவில்லை, ஆபி.

**ஆபி:** நீங்கள் நினைக்கவில்லை யென்பது புரி கிறது பௌலிங்; ஆனல் நான் நினைக்காம லிருக்க முடியுமா? அதைப்போலத்தான் நீங்களும், எட்வர்ட்ஸ். 'விக்' கட்சிக்கு ஏராளமாகப் பணமிருக்கிறது. ஆனல் நாஷனல் பாங்கை ஆண்டவன் தான் காப் பாற்றவேண்டும்.

**நினியன்:** ஆமாம்.

**ஆபி:** அது சரி. ஆனல் சம்பாதிக்கவே தெரி யாத ஒருவன்—ஆயிரத்தைந்நூறு டாலர் கள் கடனளியாகவுள்ளவனை—தேர்தலில் அபேட்சகராக நிறுத்துவது ஏற்குமா?

**பௌலிங்:** (நினியனிடம்) ஆபியின் கடன்களின் விவரங்களைப்பற்றி நான் சொல்லுகிறேன். அவர் துரதிருஷ்டசாலியான பெர்ரியைக் கூட்டாளியாகச் சேர்த்துக்கொண்டு ஒரு மளிகைக்கடை வைத்தார். அங்கு விஸ்கி வியாபாரமும் உண்டு. ஆனல் கடையி

விருந்த விஸ்கி முழுவதையும் பெர்ரியே குடித்துத் தீர்த்துவிட்டான். கடையும் திவாலாகி விட்டது. அதனால் ஏற்பட்ட நஷ்டங்களை யெல்லாம் ஆபியே ஏற்றுக் கொண்டார். அவரது இந்தப் பண்பினால் தான் அவரை நாங்கள் ஒரு உன்னத புரு ஷராகக் கருதுவது, மிஸ்டர் எட்வர்ட்ஸ்.

**நினியன் :** உங்களுடைய இந்த அபிப்பிரா யத்தை நான் முழுமனதுடன் ஏற்றுக் கொள்கிறேன்.

**ஆபி :** உங்களுடைய பாராட்டுக்கு எனது நன்றி. அதற்காக ஓகோவென மிகைப் படுத்தவேண்டாம். அப்படிச் செய்தால் நாளொன்றுக்கு மூன்று டாலர்கள் போதாதென்ற நிலைக்கு வந்துவிடுவேன்!

**ஜாஷ் :** ஆபி, தாங்கள் மிகமுக்கியமாக விரும்பு வது நல்ல படிப்பு. இந்த ஏற்பாட்டினால் தரமான புத்தகசாலையின் வசதி தங்களுக் குத் தாராளமாய்க் கிடைக்கும்; ராஜ்யத் திலுள்ள உத்திருஷ்டமான சட்ட நிபுணர் களுடைய தொடர்பு வாய்க்கும்.

**ஆபி :** ஏற்கனவே பிளாக்ஸ்டோன் எழுதிய நூல் என்னிடமிருக்கிறது. இந்த நூல் ஒரு பழைய கப்பல் பீப்பாயிலிருந்து எனக் குக் கிடைத்தது. தலைசிறந்த வழக்கறி ஞர்கள் என் சிநேகிதத்தை விரும்புவோர் கள் என்று நான் எவ்வாறு கூற முடியும்?

**நினியன் :** *நீங்கள் அதைப் பற்றி ஒன்றும் கவலைப்பட வேண்டியதில்லை. நீங்கள் அந்தப் போக்கிரிகளை எவ்வாறு அடக்கி னீர்கள் என்பதைத்தான் கவனித்தேன். மனிதர்களை சமாளிக்கும் திறமை உங்களி டம் இருக்கிறது.*

**ஆபி :** *கிளேரி குரோவ் பசங்களை நான் சமாளிக்க முடியும். மற்போரில் அவர்களை வெல்லும் சக்தி எனக்குண்டு. ஆனால் சங்கா மன் பிரதேசத்தில் உள்ள வாக்காளர்கள் அனைவருடனும் குஸ்தி போட்டுக் கொண் டிருக்க முடியுமா ?*

**பௌலிங் :** *அதையும் ஒரு கைபார்த்து விடலாம், ஆபி.*

**ஆபி :** *(நினியனைப் பார்த்து) உங்கள் அரசியல் கொள்கைகளும் என்னுடைய அரசியல் கொள்கைகளும் ஒத்துப்போகும் என்று எவ்வாறு கூறமுடியும்? ஒருகால் முரண் பட்டால் ?*

**நினியன் :** *மிஸ்டர் லிங்கன், உங்களுடைய அரசி யல் கொள்கைகள் என்ன ?*

**ஆபி :** *யூனியனிலிருந்து வெளியே யிருப்பது தான் என் கொள்கை உங்களுக்குப் பிடித் தமான கொள்கை எது ?*

**நினியன் :** *யூனியனுக்கு விசுவாசமுள்ளவர்க ளாக உள்ள ஒரு சந்ததி இப்போது*

தேவை. ஆண்டி ஜாக்ஸன் பாதையில் சென்று ஆர்ப்பாட்டக் கிளர்ச்சி செய்யும் ஆட்களை எதிர்ப்பதற்கு, பழைய பண்பை ஆதரிக்கும் கூட்டம் வேண்டும்.

**ஆபி :** நான் பழமைவாதியாதலால், சட்டசபைக் குத் தேர்ந்தெடுக்கப் பட்டால் பெருத்த சீர்திருத்தங்களுக்காகவோ, முன்னேற்றத் திற்காகவோ தீவிரமாக முற்படமாட்டேன். ஏன் ? வாயைத் திறப்பதற்குக் கூட அஞ்சுவேன்.

**ஜாஷ் :** [சிரிக்கிறான்] அப்போதே உன்னிடம் சொல்ல வில்லையா நினியன்? நீ தேடிக் கொண்டிருந்த தக்க அபேட்சகர் இவர் தான் என்று [நினியன் சிரித்துக்கொண்டு எழுந்திருக்கிறான்]

**நினியன் :** [ஆபி அருகில் சென்று] மிஸ்டர் லிங்கன், எங்களுடைய கட்சி பணக்காரர் களுடையது. செல்வாக்குடையவர்களது என்றெல்லாம் உலவும் வதந்தியை ஒழிக்க வேண்டும். இதற்காகவே பாமர மக்கள் சமூகத்திலிருந்தே அபேட்சர்களைத் தேர்ந் தெடுக்கிறோம். நீங்கள் போஸ்ட் மாஸ்டர் பதவி வகிப்பதால் மக்களோடு எப்போதும் உறவாட பல சந்தர்ப்பங்கள் உண்டு. எங்கள் தலைமைக் கட்சிக் காரியாலயம் அவ்வப்போது அனுப்பும் தேர்தல் விக் ஞாபனங்கள், சுற்றறிக்கைகள், பிரசார

விஷயங்கள் யாவையும் மக்களுக்கு தபால்களைக் கொடுக்கும்போதே எடுத்துக் கூறலாம்.

**ஆபி:** எனக்கு அழகான உடுப்புக்கள் கிடைக்குமா? அபேட்சகர் எளிமையாக தோற்றமளிக்கக் கூடாது.

**நினியன்:** இதென்ன பிரமாதம்! ஜட்ஜ் டௌலிங் அவர்களே, இதற்கும் ஏற்பாடு செய்துவிடலாமல்லவா?

**டௌலிங்:** ஓ! செய்து விடலாமே!

**நினியன்:** [பகட்டான தொனியில்] நன்றாக யோசித்துப் பாருங்கள், லிங்கன்! பின்னால் ஏற்படப்போகும் பல அதிஷ்டங்களுக்கு இது பெரியதொரு வாய்ப்பு. தெற்கே டெக்ஸாஸின் பரந்த எல்லைகளையும், மேற்கே கலிபோர்னியா ராஜ்யத்தைக் கடந்து பஸிபிக் மகா சமுத்திரக்கரையையும் வியாபித்துச் செல்லும் ஒரு மாபெரும் சமுதாயத்தின் புகழ் ஏணிப் படிகளைக் கடப்பதென்பது எவ்வளவு பெருமைக்குரியதென்பதை சிந்தித்துப் பாருங்கள். இது ஒரு தனிக் கண்டமாக மாறிக் கொண்டு வருகிறது மிஸ்டர் லிங்கன். இப்போது நமக்குத் தேவைப்படுவதெல்லாம் மக்கள் கூட்டம் தான் [தன் கைக்கடிகாரத்தைப் பார்க்கிறார்.] இன்று மாலை ஸ்பிரிங்பீல்டில் 'நடக்கப் போகும் தீவட்டி ஊர்வலத்தில்

நானும் கலந்துகொண்டாக வேண்டும். ஆகவே தயவு செய்து மன்னித்துக்கொள்ளுங்கள். நான் புறப்படுகிறேன். லிங்கன், வணக்கம், இந்தச் சந்திப்பு எனக்கு மிகவும் மகிழ்ச்சியை யளித்துள்ளது.

**ஆபி:** [கை குலுக்கியபடி] நன்றி மிஸ்டர் எட்வர்'ஸ். உங்களது போராட்ட இயக்கம் வெற்றியடையட்டும்.

**நினியன்:** அந்த வெற்றி தங்களையும் சாரும். [பின்புறத்தில் உட்கார்ந்துகொண்டு குடித்துக் கொண்டிருக்கும் பென் மாட்லிங்கைத் தவிர வலதுபுறம் வீற்றிருந்த அனைவரும் எழுந்து நின்று அங்கிருந்து செல்ல ஆயத்தமாயினர்.]

**ஆபி:** ட்ரம், இதோ உங்கள் பத்திரிகை.

**ட்ரம்:** அதைப் பூராவும் படித்து முடியுங்கள் எனக்கு அது இப்போது தேவையில்லை.

**ஆபி:** மிகவும் நன்றி ட்ரம். நான் இதை உங்கள் வீட்டில் சேர்த்து விடுகிறேன். [ட்ரமும், நினியனும் அங்கிருந்து செல்கின்றனர்.]

**பௌலிங்:** பிறகு சந்திக்கலாம். ஆபி நான் திரும்பி வரும்போது சாராயத்திற்குப் பணம் கொண்டுவந்து கொடுப்பதாய் ஆனிடம் சொல்லுங்கள்.

ஆபி: சரி, அவளிடம் சொல்லி விடுகிறேன். [பௌலிங் போகிறார். சிறிது நேரம் கழித்து ஆபி, ஜாஷ் பக்கம் திரும்பி]

ஆபி: ஜாஷ்! உன்னை என் அத்தியந்த நண்பனாகக் கருதிவந்தேன். ஆனால் நீ செய்த காரியம் என்னை திடுக்கிடச் செய்து விட்டது.

ஜாஷ்: தெரியும் ஆபி. இந்தப் பாழாய்ப்போன நியூசேலத்தில் தேர்தலுக்கு நின்று ஓட்டுப் பெறக் கூடியவர்கள் யாராவது இருக்கிறார்களா வென்று நினியன் எட்வர்ட்ஸ் என்னைக் கேட்டார். அப்படிப் பட்ட நபர் நீதான் என்பதே என் கருத்து. இந்த அபிப்பிராயத்தால் உனக்குத்தொந்தரவும், சங்கடமும் தான் ஏற்பட்டுள்ளதென்பது தெரிகிறது. ஆனால் நீங்கள் விரும்பினாலும் விரும்பா விட்டாலும் மேலும் மேலும் வளர்ச்சியடைந்தே ஆக வேண்டும். இப்பொழுது உங்களுக்குப் புகழைச் சம்பாதிக்கக்கூடிய ஒரு வாய்ப்புக் கிடைத்துள்ளது.

ஆபி: நான் என்ன அப்படி புகழை நாடிக் கொண்டு போகிறவனா?

ஜாஷ்: ஆபி, உங்களிடம் வினோதமான ஒரு போலி கௌரவம்—ஒருவித கர்வம்....குடி கொண்டுள்ளது. ஆனால் அது இல்லை

யென்று தான் சாதிப்பீர்கள். அதை இப்போது சரியானபடி ஊக்கிவிட வேண்டும். எனவே இந்த ஏற்பாட்டிற்கு நீங்கள் சம்மதித்தால் உங்களுக்கு எந்தவித வருத்தமோ, அல்லது ஏமாற்றமோ ஏற்படாது.

**ஆபி:** [லேசாகச் சிரித்துக்கொண்டு] ஜாஷ். அப்படி ஒன்றும் உன்மீது குற்றஞ்சாட்டவில்லை. [அங்கிருந்து கதவருகே சென்று வெளியே எட்டிப்பார்க்கிறார்] ஆனால் நினி எட்வர்ட்ஸ் பணக்காரர்; பிரபலஸ்தர், அதோடு உயர்ந்த கல்விமானுங்கூட. அவருக்கெல்லாம் அரசியல் என்பது ஒரு விளையாட்டுத்தான். எனக்கும் அவரைப் போலிருக்க வேண்டு மென்று விருப்பம். ஆனால் பைபிளைத் தவிர பிளாக் ஸ்டோன் புத்தகத்தைப் படிக்கையில் சட்ட மியற்றுவதில் ஒரு மாபெரும் பொறுப்புள்ள தென்பதை உணரலாம். விக் கட்சியை அதிகாரத்தில் அமர்த்துவதை விட அரசாங்க நிர்வாகத்தில் இன்னும் அதிகமான முக்கியத்துவமுள்ளது. [சேத்கேல் உள்ளே வருகிறார். அவரது கண்களில் மேற்கு ராஜ்யத்து சூரிய ஒளியின் பளபளப்பும், எல்லைப்புறத்தானின் தோற்றமும் தெரிகின்றன. வயதில் இளைஞன்தான்.]

**சேத்:** ஏய், ஆபி! எனக்கு வந்த ஒரு கடிதம் உன்னிட மிருப்பதாக பியார்கஸ் சொன்னார்.

ஆபி: [தன் பையில் கையை விட்டு துழாவிக் கொண்டே] ஆமாம், இருக்கிறது.

சேத்: ஓஹோ! வாருங்கள் மிஸ்டர் ஸ்பீட்.

ஜாஷ்: சௌக்கியமா, மிஸ்டர் கேல்?

ஆபி: இதோ இருக்கிறது, சேத் [அவனிடம் ஒரு கடிதத்தைக் கொடுக்கிறார். சேத் அதை வலப்பக்கமாய் எடுத்துக் கொண்டு போய் உட்கார்ந்து கொண்டு படிக்கத் தொடங்குகிறார்.]

ஜாஷ்: ஆபி, நான் ஸ்பிரிங்பீல்டுக்குத் திரும்பவும் இன்னொரு வாரத்திற்குள் திரும்பி வருகிறேன்.

ஆபி: ஜாஷ், நான் இங்குதான் இருப்பேன். [ஜாஷ் போகிறான். ஆபியின் வலது புறத்தில் அமர்ந்து பத்திரிகையை எடுத்து வைத்துக் கொள்கிறான். ஆனால் படிக்கவில்லை. பென், எழுந்து நின்று தள்ளாடிக் கொண்டு ஆபியை அணுகி வருகிறான்.]

பென்: (ஆத்திரத்துடன்) ஆபி! நீ சம்மதப் படுகிறாயா? அவர்கள் உன்னைத் தேர்தலில் மாட்டியதை ஒப்புக் கொள்ளுகிறாயா?

ஆபி: அதைப் பற்றி யோசிக்க எனக்கு அவகாசமே இல்லையே?

பென்: விஷயம் ரொம்பவும் முற்றுவதற்குள் நீ அதைப் பற்றி யோசிக்க வேண்டும்.

அவர்கள் இழுத்துப்போடும் உடுப்புக்குள் சிக்கிக் கொள்ளாதே. அந்த உடுப்புதான் இந்தப் பரிதாபகரமான தேசத்தின் அவல நிலையின் சின்னமாகத் தோன்றும். ஆபி, நீ ஒரு நேர்மையானவன். [கடனில் சிக்கிக் கொண்ட] அரசாங்கம் என்ற அந்தக் கொள்ளைக் கூட்டத்தினரின் குகையில் உனக்கேது இடம்? ஐக்கியநாடு முழுவதை யும் குட்டிச் சுவரடித்ததல்லாமல் உன்னை யும் லஞ்சப்பேய்க்கு ஆளாக்கி விடுவார்கள். இங்கே பார். (வாஷிங்டன், ஜெபர்ஸன், ஜான் ஆடம்ஸ், படங்களைக் காண்பிக கிருர்.) இவர்கள் இப்போது எங்கே? மறைந்துபோனர்கள். இவர்கள் எந்த லட்சியங்களுக்காகப் போராடி வெற்றிக் கொடி நாட்டினர்களோ அந்த லட்சியங் களும் புதைந்துவிட்டன. :[ஆன், மேஜை மீதிருந்த கோப்பைகளை எடுத்துச் செல்ல வருகிருள். ஆபி அவளைப் பார்க்கிருர்] நாம் அடிமைகளானல் கூட பரவாயில்லை. அவர்களுக்காவது நோயில் விழுந்த போதும், வயது முதிர்ந்தபோதும் ஆகார மும், பராமரிப்பும் கிடைக்கின்றன. (ஆன் போகிருள்) நீ கவலைப்படுவதாகவே தெரிய வில்லையே. நான் சொல்வதைத்தான் நீ காதில் போட்டுக் கொள்ளவே இல்லையே [கதவுப் பக்கமாக செல்கிருன்]

**ஆபி:** அப்படி யொன்றுமில்லை, பென், நான் கவனமாய்க் கேட்டுக்கொண்டு தானே இருக்கிறேன்.

பென் : நீ கேட்கவில்லை எனக்குத் தெரியும். நீ சட்ட சபைக்குள் சென்று சுதந்திரத்தின் சவத்தை உண்ணும் அந்த ஓநாய்க் கூட்டத்தோடு சேரப்போகிறாய். (அவன் போகிறான்.)

ஆபி : நீ கவலைப்பட வேண்டாம் நான் சட்ட சபைக்குச் செல்லப் போவதில்லை. (ஆன் பிரவேசிக்கிறாள். வலது புறம் சென்று கோப்பைகளை எடுத்துக் கொள்கிறாள். அவள் இப்போது மிகவும் அடக்கமாகக் காணப்பட்டாள். ஆபி அவளையே உன்னிப்பாகக் கவனிக்கிறார்.) பௌலிங் கிரீன் உனக்குச் சேர வேண்டிய பணத்தைப் பிறகு வந்து தருவதாகச் சொல்லச் சொன்னார்.

ஆன் : (அலட்சியமாக) ரொம்ப சரி, (ஆன் கோப்பைகளையும் புட்டிகளையும் ஒரு தட்டில் சேர்த்து வைத்துக் கொண்டு வேகமாகப் போகிறாள்.)

ஆபி : இரு, ஆன், நான் எடுத்து வருகிறேன்.

ஆன் : (கடுப்புடன்) வேண்டாம், நானே கொண்டு போகிறேன். (இடது புறமாகச் செல்கிறாள்)

ஆபி : என்னை மன்னித்துக் கொள், ஆன்.

ஆன் : (நின்று கொண்டே) நல்லது !

**ஆபி :** உன் வேலைகள் முடிந்த பின்பு திரும்பி வர முடியுமா? நான் உன்னோடு கொஞ்சம் பேசவேண்டும். [சேத் கடிதத்தைப் படித்துவிட்ட பிறகு வாட்டத்துடன் தோற்றமளிக்கிறான்]

**ஆன் :** உங்களுக்கு விருப்பமானால் பேச வருகிறேன். [ஆன் போகிறாள். சேத் ஆபி பக்கம் வருகிறார். அவர் பேசிக் கொண்டிருக்கும் போது ஆபி சமையலறைப் பக்கம் கவனித்துக் கொண்டிருக்கிறார்].

**சேத் :** ஆபி, மேரிலாண்டிலுள்ள என் உறவினர் களிடமிருந்து கடிதம் வந்துள்ளது. அதன் படி பார்த்தால் நாமெல்லோரும் ஹெப்பிராஸ்கா பிரதேசத்திற்குப் போக ஆசைப் படுவதை யெல்லாம் கைவிட வேண்டியதுதான்.

**ஆபி :** ஏன், என்ன நேர்ந்துவிட்டது?

**சேத் :** பெரியவருக்கு உடம்பு சரியாக இல்லை. மிகவும் பலவீனமா யிருக்கிறார்.

**ஆபி :** அப்படியா? பாவம்!

**சேத் :** என்னைத் திரும்பவும் வந்து அங்கே பண்ணையைக் கவனித்துக் கொள்ளச் சொல்லுகிறார்கள். முப்பத்தி நான்கு ஏகரா நிலம்—ஒரே மணற்பாங்கு பூமி.

மேற்கே செல்லுவதற்கு ஆசைப்பட எனக்கு ஒரே ஏமாற்றம்! அதுபோதா தென்று உன்னையும் ஏமாற்ற வேண்டி யிருக்கிறது.

**ஆபி :** (சமையலறையைக் கவனித்துக்கொண்டு) சேத், அதற்கொன்றும் கவலைப்பட வேண்டாம் நானும் கொஞ்ச நாளைக்கு இங்கிருந்து கிளம்ப முடியாது. உன் தகப் பனுருக்கு சௌகரியமான பின்பு நீ திரும்பி விடலாம.

**சேத் :** இந்தத் தள்ளாத வயதில் அவருக்கு உடம்பு குணமாவது சிரமமான காரியம். அவரைப் போன்றே நானும் அங்கேயே காலந்தள்ள வேண்டியதுதான். மலேரியா ஜுரத்திற்கு ஆளாகி குறுகிக் குன்னிப் போய் வாழ்நாள் முழுவதும் கழிக்க வேண்டியதுதான் இதைப்பற்றி நொந்து கொண்டுதான் என்ன பயன்? கிழக்குப் பக்கம் செல்லவேண்டுமென்ருல் செல்ல வேண்டியதுதான்.

(ஆன் திரும்பி வருகிருள்)

நான் போவதற்கு முன்பு உன்னிடம் விடைபெற்றுச் செல்லுகிறேன் ஆபி.

(அவர் போகிருர்; ஆபி ஆனைப்பார்க் கிருர். அவளும் அவரைப் பார்க்கிருள்)

**ஆன் :** என்ன சமாசாரம் ஆபி ?

ஆபி : (எழுந்து நின்று) நீ என்னுடன் பேச விரும்புகிருய் என்று நினைத்தேன்.

ஆன் : எதைப்பற்றிப் பேசவேண்டும்?

ஆபி : உனக்கு நியூயார்க் ராஜ்யத்திலிருந்து வந்த கடிதத்தைப்பற்றித்தான்.

ஆன் : அதைப்பற்றி உங்களுக் கென்ன தெரியும்?

ஆபி : நான் போஸ்ட்மாஸ்டர் ஆகவே பிற ருடைய அந்தரங்க விஷயங்களைப் பற்றி எனக்குச் சற்று அதிகமாகவே தெரியும். அந்தக் கடிதத்திலிருந்தது, மக்னீல் எழுதி யதாகும் என்று எனக்குத் தெரியும். இன்னும் உன் முகபாவத்திலிருந்து அந்தக் கடிதத்தில் சந்தோஷச் செய்தி இல்லை யென்றும், நீ பயந்து கொண்டிருந்த செய்தி தான் வந்திருக்க வேண்டு மென்றும் எனக்குத் தெரிந்துவிட்டது.

[ஆன் ஆபியை ஆச்சரியத்துடன் கவனிக் கிருள். அவள் எண்ணியதற்கு அதிக மாகவே ஆபி அதிக விஷயங்களைக் கிர கித்துள்ளார்]

ஆன் : கடிதத்தில் என்ன எழுதப்பட்டிருந்த போதிலும் அதைப் பற்றி உங்களுக்கு அக்கரை வேண்டியதில்லை, ஆபி.

**ஆபி :** *தெரிகிறது ஆன், ஆனல் நீ ஏதோ அழுதுகொண்டிருந்தாற்போல் தோன்று கிறது. அப்படி உன்மனதைப் புண்படுத் தியது எதுவா யிருக்குமென்பதே என் கவலை. தவிரவும் முதன்முதலாக உன்னைச் சந்தித்ததிலிருந்து என் மனம் எப்போதும் உன்னைப்பற்றிய சிந்தனைகளிலும், கவலை களிலும் ஆழ்ந்துள்ளது. தவிரவும் நீ கவலையில் ஆழ்திருக்கும் யாரிடமாவது உனது வேதனைகளை மனம் விட்டுச் சொல் லிக் கொள்வது சற்று ஆறுதல் அளிக்கு மல்லவா! அதனல் தான் கடிதத்தில் என்ன சேதி வந்துள்ள தென்று ஆவலாய்க் கேட்டேன்.*

*[அவளுக்கு இருந்த கோபம் தணிந்து முகத்தில்மென்னகை படருகிறது]*

**ஆன் :** *ஆபி, நீங்கள் உண்மையிலேயே ஒரு விசுவாசமுள்ள கிறிஸ்தவர்தான். (அமரு கிருள்.)*

**ஆபி :** *அதெல்லாமில்லை. நான் ஒரு பாமரன் தான்· என்னுடைய ஆடைகளிலிருந்தே அது உனக்குத் தெரியலாமே!*

**ஆபி :** *(நகைக்கிருள்) அது சரி, இப்படி என் அருகில் உட்காருங்கள். ரொம்ப சந்தோ ஷம். (ஆபி அவளருகில் உட்காருகிருர்.)*

**ஆன் :** *நீங்கள் எதையாவது சொல்லி மற்றவர் களை சிரிக்க வைத்து விடுகிறீர்கள் இல்லையா ?*

**ஆபி :** *அதற்கு அவசியமே இல்லை. எனது முகத்தைப் பார்த்தாலே போதும் யாரும் சிரித்துவிடுவார்கள்.*

**ஆன் :** *நீங்கள் அந்தக் கடிதத்தைப் பற்றி யூகித்தது சரியே. பல மாதங்களுக்குப் பிறகு இப்பொழுதுதான் அவர் கடித மெழுதியுள்ளார். இதிலும் குடும்பத் தொல்லைகளால் தான் இங்கு வரத் தாமத மேற்படுகிறதென்றும், திரும்பி எப்போது வரமுடியுமென்று நிச்சயம் சொல்வதற் கில்லை யென்றும் எழுதியுள்ளார். இதி லிருந்து அவர் இனி திரும்பமாட்டாரென்று தீர்மானிக்கவேண்டியிருக்கிறது.*

**ஆபி :** *நான் அப்படி நினைக்கவில்லை ஆன்.*

**ஆன் :** *எண்ணுவதில் தவறென்ன? [அவரை ஏறிட்டுப் பார்க்கிருள்] தான் மக்னீலை மணந்து கொள்வதாக வாக்குறுதி கொடுத்தது மடத்தனந்தான் என்பது உங்கள் அபிப்பிராயம் அல்லவா?*

**ஆபி :** *அதெல்லாமில்லை; இன்றும் நான் அவரை நேசிக்கிறேன். ஏதோ நல்ல தொரு நோக்கத்துடனேயே தன்பெயரை மாற்றிக் கொண்டிருக்கிருர். அழகும், அறிவும் நிறைந்தவர். அதனுல் அவரை எந்தப் பெண்ணும் காதலிப்பதில் தவறில்லை.*

**ஆன்** : (அழுத்தமாக) ஆபி; நான் அவரைக் காதலிக்கவில்லை. அவரைப் போன்ற நேர்மையுணர்வற்ற ஒருவரை எவ்வாறு நேசிப்பது ?

**ஆபி** : [அதை அதிகமாகப் பாராட்டிக் கொள்ளாமல்] அது சரி. அதிகமாக வருந்தத் தேவையில்லை. பாவம்! அந்த சேத் கேலுக்குக் கூடத்தான் தகப்பனுருக்கு உடல் நலம் குன்றியிருப்பதாகத் தகவல் வந்தது. அதனுல் அவர் மேற்கே சென்று குடியேற வேண்டுமென்ற அவரது திட்டத்தையே கைவிட வேண்டியதாயிற்று.

**ஆன்** : (அடரைப்பார்த்து) ஆபி, உங்களுக்குப் பெண்களைப் பற்றி அதிகம் தெரியாதென்று நினைக்கிறேன்.

**ஆபி** : ஆம்! பெண்களைப்பற்றி பலதடவை நான் சிந்தித்தபோதிலும் அவர்களுடை விஷயம் ஒன்றும் எனக்குத் தெரிவதில்லையென்பது உண்மைதான்.

**ஆன்** : [நீங்கள் ஒரு பெரிய மனிதர்; நீங்கள் எவரையும் அறிந்து விடுவீர்கள். ஆனுல் நீங்கள் எவருடைய பலவீனத்தையும் அறிந்துகொள்ள முடியாது. நானே ஒரு பெண். இந்த ஊரிலுள்ளோர் என்னைப் பற்றி என்ன வம்பளப்பார்க்களென்பதைப் பற்றிச் சிந்திக்காமலிருக்க முடி

யாது. அவர் என்னை வேண்டாமென்று தள்ளி விட்டதாக வம்பளப்பார்கள். என்னைக் கண்டால் அனுதாபப் படுவது போல் நடித்துவிட்டு மறைமுகமாக நகைத்துக் கேலி செய்வார்கள்.

[எழுத்திருந்து வலதுபுறம் நகருகிறுள்]

ஆபி: ஆமாம் அப்படித்தான் சொல்வார்கள். அதனுல் நீ மனம்குன்றிவிடுவாயா என்ன?

ஆன்: (எழுந்திருக்கிறுள்) நான் தான் முன்பே சொன்னேனே —அது ஒரு பலவீனம்— வீண் ஜம்பம் என்று ஆபி! இவற்றையெல்லாம் உங்களால் உணர முடியாது. [ஜன்னலருகில் சென்று வெளியே விறைத்துக் கவனிக்கிறுள். ஆபி அவளுக்கு எதிராக நாற்காலியில் திரும்பி உட்கார்ந்து கொள்கிறுர்]

ஆபி: ஏன்? என்னுல் புரிந்துகொள்ள முடிகிறது, ஆன். என்னிடமே வீண் ஜம்பம் குடி கொண்டுள்ளது என்று ஜாஷ் ஸ்டீட் குறிப்பிட்டது சரியாக உள்ளது........ உன்னிடம் எனக்குள்ள ஆசையை வெளியிடமுடியாமல் அடக்கிவைத்ததும் இந்த வீண் கர்வம்தான்.

(ஆச்சர்யத்துடன் ஆன் அவரைத் திரும்பிப் பார்க்கிறுள்)

எனக்கும் இந்தக் கேலிப் பரிகாசம் எல்லாம்பிடிக்காது. எனது அழகும், தகுதியும் எனக்குநன்ருகத் தெரியும். மேலும், நான் காதலிக்கும் பெண்ணுக்கு• என்னுல் பிரமாதமாகஒன்றும் அளித்துவிட முடியாது என்பதும் தெரியும்.

**ஆன் :** ஆபி, நீங்கள் என்னைக் காதலிப்பதாகவா சொல்லுகிறீர்கள் ?

**ஆபி :** (ஆழ்ந்த உணர்ச்சிவசமாக) ஆம். அப்படித்தான் சொல்லுகிறேன்.

(எழுந்திருந்து அவளெதிரில் நிற்கிருர். ஆன் அவரையே கூர்ந்து பார்க்கிருள்.)

நீண்டகாலமாகவே நான் உன்னை மனமாரகாதலித்து வருகிறேன். ஆன், நீ ரொம்ப அழகாக இருக்கிருய். உன்னிடம் புத்திசாலித்தனம், தைரியம் ஆகிய இரண்டு அரிய பண்புகளும் குடிகொண்டுள்ளன. அவற்றை நான் பெரிதும் பாராட்டுகிறேன். மேலும் உன்னிடம் அலாதியானதொரு கவர்ச்சியும், வசீகரமும் நிரம்பியிருக்கின்றன. அதனுல் உன்னிடம் நான் விசேஷ ஆர்வம் கொண்டுள்ளது இயற்கையே. ஆனுல் அதற்காகநான் உன்னை வற்புறுத்தமாட்டேன். நீ என்னுடன் தோழமை கொள்ளுவதனுல் வம்புக்காரர்களின் வாய்க்கு ஆப்புவைத்து விடலாமென்று கருதியே இதைக் குறிப்பிட்டேன்.

யாரோ ஒருவருக்காக மக்னீலே விட்டுவிட்டாய் என்று கருதுவார்கள்.

**ஆன்:** (அவர் அருகில் சென்று) நான் உங்களைத் தெளிவாக அறிந்து கொண்டுவிட்டேன் என்று நினைத்தது பிசகு என்று இப்போது உணர்கிறேன்.

**ஆபி:** (வேதனையுடன்) எதற்கு அப்படிக்கூறுகிருய்? நான் உன்னிடம் மிகவும் தாராள மனம் விட்டுப் பேசியிருக்கக் கூடாதென்று கருதுகிருயா?

**ஆன்:** அப்படி இல்லை ஆபி, உங்களிடம் எனக்கு அளவுகடந்த மதிப்பு உண்டு. ஆனுல் உங்களுக்கும் எனக்கும் காதல் என்ற நிலைமையில் ஒன்றும் புரிபடவில்லை. ஒரு புதிய மனிதரை முதன் முதலில் பார்த்த அனுபவம்தான் இப்போது ஏற்படுகிறது.

**ஆபி:** (நிதானமாக) நீ என்னைப் பற்றி எவ்வித உணர்ச்சி கொள்ளுகிருய் என்பதைக் குறித்து நான் எதிர்பார்க்கவில்லை. அது விஷயம் நான் கனவுகூட காண மாட்டேன்.

**ஆன்:** உங்களைப் பற்றி எனக்குத் தெரியும் ஆபி, பிரதிபலன் ஒன்றும் கருதாது தங்கள் பொருள்கள் யாவையும் தந்துவிட நீங்கள் சித்தமாயிருப்பீர்களென்பதை

நான் அறிவேன். இவ்விஷயத்தில் நான் தெரிந்து கொண்ட மனிதர்கள் யாவரினும் நீங்கள் முற்றிலும் வேறானவர். உங்கள் மீது நான் காதல் கொள்வதனால் பெரு மகிழ்ச்சியே கொள்வேன்; இது உண்மை. ஆபி, தங்கமான குணமும், கௌரவமும் வாய்ந்த உங்களைப் போன்ற ஒரு கண்ணி யமானவரின் காதலியானால் நான் அதிருஷ்டக்காரிதானே.... ஆனால் இதைப் பற்றிச் சிந்திக்கச் சிறிது அவகாச மளியுங்கள்.

ஆபி: (மிகவும் ஆச்சரிய மடைந்து) • சில தினங்கள் கழிந்த பிறகுதான் நான் உன்னைப் பற்றி நினைப்பது போல் நீயும் என்னைப் பற்றி நினைக்க இயலும் என்கிறா யல்லவா?

ஆன்: (மிகுந்த பரிவோடு) என்ன சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை, ஆபி. [ஆன் அவர் சட்டையைப் பிடித்துக் கொள்கிறாள்] ஆனால் ஒன்று நிச்சயம். நீங்கள் எவள் இதயத்திலும் வீற்றிருந்து அங்கே மகிழ்ச்சி பொங்கும் இன்ப மயமான வாழ்க்கையை யளிப்பீர்கள். [ஆபி அவள் கையைப் பிடித்துக் கொள்கிறார்]

ஆபி: இந்த நாட்டில் "எல்லோரும் சமம்" யாவரும், "சரிநிகர் சமானம்" என்று சொற்பொழிவாளர்கள் அடிக்கடி செய்யும் பிரசங்கங்களை என்னால் நம்ப முடியவில்லை.

எல்லோரும் ஆண்டவன் கருணைக்கு முன்பு சமம் என்பதைத்தான் என்னால் ஒப்புக் கொள்ள முடிகிறது. ஆனால் ஒன்று. ஆன், உன்னுடைய கரம் பிடிக்கும் பாக்யம் மட்டும் எனக்குக் கிட்டிவிட்டால் பிறகு, இந்த உலகில் நான் கண்ணாரக் காணக்கூடிய யாவும் வெறும் மாயை என்றே சொல்லத் துணிவேன். பிறகு நான் இதுவரை சுவைத்துள்ள அற்புதக் கற்பனைக் காவி யங்களைத்தூமே உண்மை என நம்பத் தயார். [இடையே ஒரு விநாடி மௌனம் ஆன் புறப்படுகிறாள்] ஆனால் இப்போதே பதில் கூறவேண்டு மென்று நான் கேட்க வில்லை. இதைக் கேட்பதற்குரிய நாள் வரும் போதுதான் கேட்பேன். [தன்னு டைய தபால் பையை மாட்டிக் கொண்டு வேகமாக வாசற் புறத்தை நோக்கிச் செல்கிறார்]

**ஆன் :** ஆபி, எங்கே போகிறீர்கள்?

**ஆபி :** நன் பௌலிங் சீரினைத் தேடிப்பிடித்து அவனிடம் ஒரு ஆச்சரியப் படத்தக்க செய்தி ஒன்று சொல்லப் போகிறேன். [வெளி வாயிலில் நின்றபடி லேசாகச் சிரிக்கிறார்.]

**ஆன் :** அதென்ன அப்படிப்பட்ட விஷயம்?

**ஆபி :** நான் இலியயஸ் ராஜ்ய சட்ட சபைத் தேர்தலில் நானும் ஒரு அபேட்சகன்.

*என்ற குட்டை வெளியிடப் போகிறேன்.*
*[அவர் போகிருர். வெளிச்சம் மங்குகிறது.]*

*(இரண்டாவது காட்சி முற்றிற்று)*

## காட்சி 3

நியூசேலத்திற்கு அருகாமையிலுள்ள பௌலிங் கிரீனின் இல்லம்.

அங்குள்ள சிறிய அறையின் சுவர் நெடுகிலும் வரிசையாக குடும்பப் படங்கள் மாட்டப்பட்டிருக் கின்றன. புத்தகங்களும் வரிசையாக அடுக்கப்பட் டிருக்கின்றன. மத்தியில் போடப்பட்டிருக்கும் மேஜை யின்மேல் விளக்கு வைக்கப்பட்டுள்ளது. வலதுபுறத் திலுள்ள பீரோவின் மீது கண்ணுடி உருண்டைக்குள் பொருத்தப்பட்ட மெழுகுவர்த்தி விளக்கு ஒன்று உள்ளது. மேஜையின் இருபுறத்திலும் இரண்டு நாற் காலிகள் உள்ளன. இடது பக்கத்தில் ஸோபா ஒன்று போடப்பட்டுள்ளது.

பின்னுல் இடது பக்கமாக வெளிக்கதவு உள்ளது. கதவுக்குப் பக்கத்தில் துப்பாக்கி ஒன்று சுவரின் மீது சாய்த்து வைக்கப்பட்டிருக்கிறது. வலது பக்கச் சுவரில் மற்ருெரு கதவு உள்ளது. பின்புறச் சுவருக்கு நேராக மாடிப்படி ஒன்றிருந்தது.

இரண்டாவது காட்சி நிகழ்ந்து ஓராண்டு காலத் திற்குப் பிறகு ஒரு நாள் பின் மாலைப்பொழுது. வெளியே பெரும் புயற்காற்று வீசிக்கொண்டிருக் கிறது.

ஏதோ ஒரு துண்டுப் பிரசுரத்தை வைத்துக் கொண்டு பௌலிங் இரைந்து படித்துக்கொண்டிருக்கிறார். வாழ்க்கை வசதிகள் நிறைந்த அவரது மனைவி நான்ஸி, தையல் வேலையில் ஈடுபட்டுக்கொண்டே அவர் படிப்பதைக் கேட்கிறாள்.

**பௌலிங் :** *"தனது ஆதரவாளர்களனைவரும் ஒரு முகமாக 'பிக்விக்கை' விரும்பி அழைத்தவுடன் அவர் முழு விறுவிறுப்புடனும், வேகத்துடனும் சென்று, வின்ட்ஸர் நாற்காலியில் மெதுவாக அமர்ந்த காட்சி பார்ப்பதற்கு ரொம்பவும் அழகாகவும் ரஸமாகவும் இருந்தது. தானே ஆரம்பித்து வைத்த சங்கத்தில் முன்பொரு சமயம் தான் அமர்ந்திருந்த அதே நாற்காலியில் அமர்ந்து பிரசங்கம் செய்தார்." [பௌலிங், ஒருவித திருப்தியுடன் தனக்குள் சிரித்துக் கொள்கிறார், நான்ஸியும் சிரிக்கிறாள்.]*

**நான்ஸி :** *அவர் உங்களைப் போலவே பேசுகிறார், பௌலிங், (கதவு தட்டப்படும் சப்தம் கேட்கிறது. நான்ஸி நடுக்கத்துடன் :) அது ஆபி தட்டுவது போல் இல்லையே வேறு யாராக இருக்கலாம்?*

**பௌலிங் :** *(எழுந்துகொண்டே) அது யாரென்று நமக்குப் புரியவில்லை, கண்ணே.*

**நான்ஸி :** *நேரங்கெட்ட நேரத்தில் யாரோ வந்து கதவை இடிக்கிறார்களே. எதற்கும் நீங்கள்*

*அந்த துப்பாக்கியைத் தயாராக வைத்துக் கொள்ளுங்கள். [பௌலிங் தாழ்ப்பாளை இழுத்து கதவைத் திறக்கிருர். ஜாஷ்ஸ்பீட் வந்துள்ளார்]*

**பௌலிங்:** *என்ன, ஜாஷ் ஸ்பீட்!*

**ஜாஷ்:** *வணக்கம், பௌலிங்.*

**பௌலிங்:** *உங்களைப் பார்த்து வெகு நாளாயிற்றே.*

**நான்ஸி:** *வணக்கம், மிஸ்டர் ஸ்பீட்.*

**ஜாஷ்:** *ஸ்ரீமதி கிரீன், வணக்கம், இந்த அகால வேளையில் வந்து உங்களுக்குத் தொந்திரவு கொடுப்பதற்கு என்னை மன்னிக்க வேண்டுகிறேன்.*

**நான்ஸி:** *நீங்கள் இப்பொழுது வந்ததில் மிக்க சந்தோஷம். உங்களது மேற்போர்வையைக் கழற்றுங்கள்.*

**ஜாஷ்:** *நன்றி, நான் இப்பொழுது தான் ஸ்பிரிங்பீல்ட்டிலிருந்து வருகிறேன். ஆபிலிங்கன் இந்தப் பட்டணத்திற்கு வந்துள்ளதாகவும் இங்கு வந்தால் பார்க்கலாம் என்றும் கேள்விப்பட்டேன்.*

**பௌலிங்:** *அவர் மேல் மாடியிலேதான் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்.*

**நான்ஸி:** ஆனல் இப்பொழுது அவர் ஏழைப் பெண்ணை ஆன்னுக்குச் சிகிச்சை செய்வதற்காக ரட்லட்ஜ் பண்ணைக்குச் சென்றுள்ளார்.

**ஜாஷ்:** குமாரி ரட்லெஜ்ஜுக்கா? அவளுக்கு என்ன உடம்பு?

**நான்ஸி:** அவளுக்கு மூளை நோய் கண்டுள்ளது. அது ரொம்பவும் பயங்கரமானது. அந்த வியாதியால் பலர் செத்துள்ளனர்.

**பௌலிங்:** ஆனல் ஆன் இளம் பெண். அவ் வியாதியிலிருந்து பிழைத்துக்கொள்வாள். உட்காருங்கள் ஜாஷ்.

**ஜாஷ்:** மிக்க நன்றி. [அவர் உட்காருகிறார். பௌலிங் அங்கு இருக்கும் புத்தக அலமாரிக்கு மேலாக அந்த துண்டுப் பிரசுரத்தை வைத்துவிட்டு நின்றபடி புகை பிடிக்கும் குழாயை நிரப்புகிறார்]

**நான்ஸி:** ஆன் உடல் நலமின்றி இருக்கிறுள் என்று கேட்டதுமே ஆபி வான்டலியாவிலிருந்து விழுந்தடித்துக் கொண்டு இங்கு வந்து சேர்ந்தார் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். மேலும் அவளிடம் அவர் ஆழ்ந்த காதல் கொண்டுள்ளார்.

**பௌலிங்:** அது சரி, நான்ஸி-ரொம்பவும் மிகைப் படுத்தாதே. (இவைகளை யெல்லாம்

கவனமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறார், ஜாஷ்.)

ஜாஷ்: ஓஹோ, ஆபி அவளைக் காதலிக்கிறாரா? சில நாட்களாகவே அவரிடம் ஒருவித மாறுதல் ஏற்பட்டிருந்ததைக் கண்டு ஆச்சரியப்பட்டு வந்தேன்.

நான்ஸி: ஏன், அதன் காரணம் தான் அவரது சாந்தமான முகத்திலேயே தெளிவாக எழுதப் பட்டிருப்பது போல் காணப்படுகின்றதே.

ஜாஷ்: கடைசியாக நான் அவரைப் பார்த்த பொழுது ஏதோ கவலையில் ஆழ்ந்திருந்தார். காரணம் என்ன வென்று கேட்ட பொழுது அவர் தன் ஈரலில்தான் கோளாறு என்று சொன்னார்.

பௌலிங்: (சிரித்துக் கொண்டே) அது அநேகமாக உண்மையாக இருக்கலாம்....அவரது சட்டசபை நடவடிக்கைகளெல்லாம் நல்ல முறையில் இருந்தனவா?

ஜாஷ்: இல்லை. அங்கு அவர் தினசரி மூன்று டாலர்களையும் வாங்கிக் கொண்டு பேசாமல் உட்கார்ந்து கொண்டுதான் இருந்தார். சபை நடவடிக்கைகளில் அக்கறையே காட்டுவதில்லை. குமாரி ரட்லெஜ் ஜானுக்கு— ஆனுக்கு—அவரிடம் ஏதாவது மதிப்பு இருந்தது என்று கருதுகிறீர்கள்?

**நான்ஸி :** ஆம் உண்மையிலேயே அவள் அவரி
ளிடம் அக்கறை கொண்டுள்ளாள்! ஆபி
யிடம் அவளுக்கிருந்த ஆசையினுல் மக்
நீலுக்கு அளித்திருந்த வாக்குறுதியையும்
மீறிவிட்டாள் அவள்.

**ஜாஷ் :** அவர் அவளை மணப்பதாக இருந்தாரா?

**நான்ஸி :** அவளை மணந்து கொள்ளவேண்டு
மென்பது ஒன்றுதான் இப்போது அவரது
வாழ்க்கையின் முக்கிய நோக்கம். எவ்
வளவு சீக்கிரம் அவர்களிருவரும் மணந்து
கொள்கிருர்களோ அவ்வளவும் நல்லது
அவர்களிருவருக்கும்.

**பௌலிங் :** (பின்னுல் உட்கார்ந்து கொண்டு)
ஆம் அவளுக்கு நல்லது தான்....ஆனுல்
அவருக்குத் தான் தீங்கு.

**நான்ஸி :** (தைப்பதை முடித்துக் கொண்டு)
ஏன்; மட்டமான குடும்பத்தைச் சேர்ந்த
ஹேறன்சீஸ் குடும்பத்தாரையும் லிங்கன்
குடும்பத்தாரையும் விட ரட்லஜ் குடும்பத்
தார் பன் மடங்கு சிறந்தவர்களல்லவா?

**பௌலிங் :** ஜாஷ்! நீயும் என் போன்றே தான்
அபிப்பிராயப் படுகிருய் என்று நினைக்
கிறேன். ஆபி தன்னிஷ்டப் படி நடக்க
லாம். அழகும் இனிமையும் வாய்ந்த ஆன்

ஆபியை மணந்தால் ஆபிக்குத் தொந்தர வாகத் தானிருக்கும்.

ஜாஷ்: ஆபிக்கு அவள் இதுவரை அனுபவித் திராத சந்தோஷத்தை அளிப்பது ஒன் றும் பெரிய காரியமாகாது என்று நான் யூகிக்கிறேன்.

நான்ஸி: (எழுந்து கொண்டு) பௌலிங் அது தான் சரி, நானும் ஆபியைப் பற்றி அவ் வாறே கருதுகிறேன். ஆனல் ஆபியின் ஏழ்மையைப் பற்றியும் வியாபாரத்தில் அவன் நஷ்ட மடைந்ததைப் பற்றியும்— இன்றும் சட்ட சபையில் ஒரு வருஷமாக இருந்து முக்கியமான காரியம் ஒன்றையும் சாதிக்காதது பற்றியும் நாம் மறுப்பதற் கில்லைதான்........[அவள் புத்தக அலமாரி பக்கம் தையல் கூடையை வைக்கச் செல் கிறாள்]

பௌலிங்: ஆபி ஸ்பிரிங்க் பில்டுக்குச் சென்று வக்கீல் தொழிலை ஆரம்பித்து நன்றாகச் சம்பாதிக்கலாம். இதற்கு நினியன் எட் வர்ட்ஸ் அவருக்கு உதவி செய்வார். இதற் குள் அவர் ஆனை மறந்து விடலாம். அவள் மீது ஊன்றியுள்ள காதலைக் குறித்து எதேதோ அழகுறச் சித்திரித்துக் கற்பனை யுலகில் திளைத்துக் கொண்டிருக்கிறார். மணமான பிறகு தெரியும் அவர் படும்பாடு. எல்லையற்ற துன்பம் ஏற்படும் அவளால் இவருக்கு.

நான்ஸி : (உட்கார்ந்து கொண்டு) பௌலிங் கூறுவதை நீங்கள் ஒத்துக்கொள்கிறீர் களா மிஸ்டர் ஸ்பீட்?

ஜாஷ் : (வருத்தமாக) நான் ஒன்றும் சொல்ல முடியாது கிரீன் அம்மையே. ஆபி லிங்கன் எதிர் காலத்தைப் பற்றி முன் கூட்டி கூறு வதை நிறுத்தி விட்டேன். "டாலிஸ்மன்" என்ற நீராவிப் படகை ஆபி லிங்கன் செலுத்திக் கொண்டிருந்த போது தான், அவரை நான் முதன் முதலாகப் பார்த்தது. அணைக்கட்டருகில் அந்தப் படகுக்கு ஏற்படவிருந்த ஆபத்துபற்றி ஞாபக மிருக்கலாம் உங்களுக்கு. படகில் என் தந்தையாரின் கடைக்காக ஏராளமான விலை உயர்ந்த பொருள்கள் ஏற்றப் பட்டிருந்தன. அந்த நீராவிப் படகு, இந்தச் சாமான்கள் யாவும் தொலைந்தன என்று நான் நிச்சயித்து விட்டேன். ஆனல் ஆபி படகை சாமர்த்தியமாகக் கரை சேர்த்து விட்டார். மிகவும் பாராட் டத்தக்க வேலை அது. உடனே நான் இவர் ஒரு பொறுப்புள்ள மனிதர் என்றே முடிவு செய்து கொண்டேன். ஆகவே ஆபி யினுடைய நட்பைப் பெற்று அவரை பிரபலஸ்தராகவும், பணக்காரராகவுமாக்கி விடலாம் என்று கர்வங் கொண்டேன். ஆனல் சீக்கிரத்தில் அவ்வெண்ணம் தவறெனத் தெரிந்தது. அவரிடம் அசா தாரணமான தைரியமும் உடல் வன்மையு

மிருந்தனவே ஒழிய தீர்மானமான திட சித்தமில்லை யென்பதை கண்டு கொண்டேன். அவர் நாள் முழுவதும் தண்டவாளங்களை உடைக்கலாம்; ஏரைப் பிடிக்கலாம் வேடிக்கையாகப் பேசலாம்; நிசி முழுவதும் உட்கார்ந்து ஷேக்ஸ் பியரின் நாடகமான 'ஹாம்லெட்' டைப்பிடித்துக் கொண்டு அதில் வரும் உற்சாக மற்ற இளவரசனைத் தனக்கு ஒப்பிட்டுக்கொண்டு மனோ ராஜ்யத்தில் திளைக்கலாம். அவர் பெரிய வேதாந்தியாகவும் மிருக்கலாம். பெரிய முட்டாளகளு மிருக்கலாம் எனக்கு அவரைப் பற்றி என்ன முடிவு கூறுவதென்றே தோன்றவில்லை!

**பௌலிங்:** (சிரிக்கிறார்) ஜாஷ்; ஆபியைப்பற்றி நீங்கள் பழகித் தெரிந்து கொண்டுள்ள அளருக்கு ஆனுக்குப் புரிந்துகொள்ளும் திறமை இருக்கும் பட்சத்தில் அவனைக் காதலிப்பதற்குப் பதிலாகப் பீதியுற்றிருப்பாள். மறுபடியும் யாக் ராஜ்யத்திற்கே ஓடிச்சென்று மக்னீலைத்தேடி அடைந்திருப்பாள். ஆபியைப் போல் சிக்கலான மனம் படைத்தவனல்லவே அவன்.

**நான்ஸி:** (உணர்ச்சியுடன்) ஏதோ புத்தகங்களில் வரும் குழப்பம் நிறைந்த ஒரு கதாநாயகனை ஆபியையும் நினைத்துப் பேசுகிறீர்கள்! கேட்பதற்கும் சுவையாகத்தான் உள்ளது. அவரும் மனிதன் தானே. துன்பங்களுக்கு உட்பட்டவரே. ஆனல் அவரு

டைய கஷ்டங்களை நிவர்த்திக்க நீங்கள் என்ன செய்கிறீர்கள்? அவரது பரிகாசம் நிறைந்த கோமாளிப்பேச்சுக்களைக் கேட்டு ஆனந்திக்கிறீர்கள். தேர்தல் தினத்தன்று அவருக்கே ஓட்டு போடுகிறீர்கள். தேவைப் படும்போது தங்க இடமும் உணவும் கூட அளிக்கிறீர்கள். ஆனல் இவைகளெல்லாம் அவரது ஆத்மாவுக்குத் திருப்தியைத் தராது. ஏனெனில் வாழ்க்கையின் கஷ்டங் களை அவருடன் பகிர்ந்து செயல்புரியக் கூடிய மன உறுதிபடைத்த நல்ல பெண் மணிதான் அவரது முக்கியமான தேவை.

**பௌலிங்:** அப்படி யென்ருல் வாழ்க்கைத் தொல்லைகளைத் தனித்து அவரால் சமா ளிக்க முடியாது என்ற கருத்தா?

**நான்ஸி:** ஆமாம், தனிமையை விரும்பும்போ தெல்லாம் அவர் பிறந்து வளர்ந்த காட் டுக்குச் செல்லுகிருர். இளமை பிராயத் தில் காலஞ்சென்ற அவருடைய தாயும் தாயுக்குத் தாயும் மொழிந்த வார்த்தை களைப் பற்றி அவர் அடிக்கடி தனக்குள் சிந்திக்கிருர். அவருடைய பாட்டியாரும் அப்படி ஒன்றும் சிறந்த வாழ்க்கை நடத்திவிடவில்லை. இப்போது அவரு டைய காதில் ஒலிக்கும் அவர்களுடைய மெல்லிய மொழிகள் என்ன கட்டளையிடு கின்றன வென்பதையோ, அவற்றின் பொருளையோ, அவரால் அறிந்துகொள்ள

*முடியவில்லை. அதனல் அவருக்கு அலாதி யானதொரு பீதிதான் ஏற்படுகிறது. அந்த நிலைமையில் நாம் எவ்வளவுதான் அவருக்கு ஊக்கமளிக்க முயன்றாலும் அந்தப் பயம் அவரைவிட்டு மறையவே மறையாது. உண்மைாகவே இவர்மீது காதல்கொண்டு நம்பிக்கையுடன் நேசிக்கும் ஒரு பெண்ணல் தான் அப்பீதியிலிருந்து அவரை விடுவிக்க முடியும்.*

[*கதவு தட்டப்படுகுறது*]

**பௌலிங்:** *வத்திருப்பது ஆபிதான் (அவர் எழுந்திருந்து கதவைத் திறக்கிறார்.)*

[*புயற்காற்று மழையில் நனைந்து ஈரத் தோடு காட்சியளித்தார். உயர்ந்த ரக மான கருப்பு "சூட்" அணிந்திருந்தார். தோற்றத்திலே ஒரு முதுமையும், கடுமை யும் இழையிட்டிருந்தன.*

**பௌலிங்:** *வாருங்கள், ஆபி, உங்களுக்காகத் தான் காத்துக்கொண் டிருக்கிறோம். மேலும் அதிகமாக நனையாமல் உள்ளே வாருங்கள்.*

[*ஆபி உள்ளே வந்தபிறகு பௌலிங் கதவை மூடுகிறார்.*]

**நான்ஸி:** *ஸ்பீட் வந்த பொழுது நாங்கள் 'பிக்விக் கிளப்'பின் காலஞ்சென்ற ஆசிரி*

யர் ஒருவர் எழுதிய காகிதங்களைப படித்துக்கொண்டிருந்தோம்.

ஆபி : வாருங்கள் ஜாஷ். உங்களைப் பார்த்ததில் ரொம்ப சந்தோஷம்.

ஜாஷ் : வாருங்கள், ஆபி.

(ஆபி நான்ஸியின் பக்கம் திரும்புகிறார்)

ஆபி : நான்ஸி...........

நான்ஸி : என்ன ஆபி.

ஆபி : அவள் இறந்து விட்டாள்.

பௌலிங் : என்ன, ஆ? அவளா செத்து விட்டாள் ?

ஆபி : ஆமாம், இன்றிரவு திடீரென்று ஜுரம் அதிகமாகியது. அதற்கு அவர்களால் ஒரு பரிகாரமும் செய்ய இயலவில்லை.

(நான்ஸி வேகமாக பௌலிங்கின் பக்கம் பார்வையைச் செலுத்தி விட்டு பிறகு பரபரப்புடன் ஆபியின் அருகில் சென்று அவரது கையைப் பற்றிக்கொள்கிறாள்)

நான்ஸி : ஐயோ, பாவம்! ரொம்ப வருத்தமாகயிருக்கிறது, ஆபி. எப்படிப் பட்ட அழகான இளம் பெண். அவளை அறிந்தவர்கள் ஒவ்வொருவரும் அவளுடைய மரணத்திற்கு வருந்தாமல் இருக்க மாட்டார்கள்.

**ஆபி:** ஆமாம், உண்மை. ஆனால் இனி துக்கப்பட்டு என்ன பயன்? ஆனால், மாண்டவள் மீண்டு வரப் போவதில்லை.

**பௌலிங்:** ஆபி, இப்படி உட்கார்ந்து சற்று ஓய்வு பெறுங்கள்.

**ஆபி:** யாருடனும் கலந்து பழகுவதற்கு நான் தகுதியற்றவன். அதனால் நான் இங்கிருந்து போவதே நல்லது. (வாயிற் கதவை நோக்கித் திரும்புகிறார்.)

**ஜாஷ்:** (அவரைத் தடுத்து நிறுத்தி) ஆபி, நீ போகக் கூடாது. இங்குதான் தங்க வேண்டும்.

**பௌலிங்:** ஜாஷ் சொல்லுகிற படியே நீங்கள் செய்வது நல்லது.

**நான்ஸி:** தயவு செய்து இப்படி வந்து உட்காருங்கள் ஆபி. (ஆபி அங்குள்ளவர்களை ஒவ்வொருவராகத் திரும்பிப் பார்த்து விட்டு பிறகு பணிவாக ஒரு நாற்காலியில் போய் உட்காருகிறார்) உங்களது படுக்கை மாடியில் தயாராக உள்ளது. எப்பொழுது நீங்கள் விரும்பினாலும் போய்ப் படுத்துக் கொள்ளலாம்.

**ஆபி:** (சோகத்துடன்) இந்த உலகத்திலேயே நீங்கள்தான் எனது உண்மையான நண்பர்கள். எனக்கு நீங்கள் செய்துள்ள உதவி

களுக்கெல்லாம் நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேனே தெரியவில்லை. இப்பொழுதும் இங்கு வந்து உங்களுக்குத் தொல்லை தான் கொடுக்கிறேன்.

**பௌலிங்:** *ஆபி, உன்னை எப்பொழுதும் விரும்பி வரவேற்கும் இல்லம் இது.*

**ஆபி:** *உண்மை, சந்தேகமேயில்லை. பௌலிங் உங்களையும் நான்ஸியையும் நான் நேசிக்கிறேன். ஆனல் ஆன் மீது நான் வைத்திருந்த அன்புக்கும் நேசத்திற்கும் ஈடு இணை இல்லவேயில்லை.*

**நான்ஸி:** *அது எனக்குத் தெரியும், ஆபி.*

**ஆபி:** *தனிமையில் இருப்பதுதான் நல்லது என்று நான் நினைப்பது வழக்கம். அப்படித் தனிமையிலிருக்கும் போதெல்லாம் எனக்கு அலாதியான ஒரு நிம்மதி ஏற்படுவதுண்டு. மற்றவர்களோடு அதிகமாக நெருங்கிப் பழகினல் அவர்களுடைய உண்மையான சுபாவத்தை—அவர்களெல்லாம் வெறும் பித்தர்களென்ற உண்மையை நன்கு புரிந்து கொள்ள முடியும். நம்மைப் பற்றியும் அவ்வாறே அவர்கள் புரிந்து கொள்வார்கள். நான் முதன் முதலாக அவளைப் பார்த்தபொழுது மக்களிடையே ஒப்பற்றதொரு பரிசுத்தமும் அழகும் ஒருமிக்கப் பின்னிப் பிணைந்திருக்க முடியும் என்பதை யறிந்திருந்தேன்*

நள்ளிரவு வானத்தில் தோன்றும் அமா னுஷ்யமான பரிசுத்தத்தைப் போல. அது போலவே முதன் முதலாக அவளது கரத்தைப் பற்றும் பாக்கியம் கிட்டிய போது என்னிடமிருந்த அத்தனை மனக் கிலேசங்களும் பயங்களும் பறந்தோடின. ஆண்டவன் கருணையில் நம்பிக்கையுள்ள வன் நான். வாழ்க்கையில் அவள் கோரும் எதையும் சாதித்து கொடுப்பதற்காக என் மூச்சுள்ளளவும் ஆர்வத்துடன் உழைக்கத் தயாராக இருந்தேன். எதை ஒன்றை என்னால் சாதிக்க முடியுமென்று எண்ணி விட்டால் உடனே சாதித்து விடுவேன். இது நான் கொண்டிருந்த நம்பிக்கை........ பிறகு வெள்ளச் சுழலில் சிக்கித்தவிக்கும் சிறு குச்சியைப் போல வேறு வழியின்றி மரணப் படுக்கையிலிருந்த அவளருகில் நின்றிருந்தேன். உன்னிப்பாக நான் அவளையே பார்த்துக் கொண்டிருக்கையில் அங்கிருந்த அவளுடைய தாய் தந்தையரும் அந்த ஜீவனைக் காப்பாற்றும்படி ஆண்ட வனைப் பிரார்த்தனை செய்து கொண்டிருந் தார்கள். கொடுப்பதும் பறிப்பதும் ஆண்ட வனது திருவுள்ளம். ஆண்டவனின் திரு நாமம் வாழ்க! இதைத்தான் அவர்கள் இடைவிடாது கூறிக்கொண்டிருந்தனர். ஆனால் என்னால் அவர்களோடு சேர்த்து பிரார்த்தனை செய்ய முடியவில்லை. மரண மென்னும் ஆயுதத்தையும் படைத்திருந்து அதைப் பிரயோகமும் செய்பவரை—அந்த

ஆண்டவனை—என்னால் வணங்க இயல வில்லை [அவர் எழுந்திருந்து அளவற்ற ஆர்வத்துடன் பேசுகிறார்] உங்கள் முன் னிலையில் நான் ஏதோ பைத்தியக்காரனைப் போல் நடக்கிறேன்—அதற்காக என்னை மன்னிக்கவும்—ஆனால், என்னால் அதைத் தவிர்க்க முடியவில்லை. இனிமேல் தனியாக என்னால் உயிர்வாழவே முடியாது. நான் மரணத்தின் மூலம் அவளை மறுபடியும் சென்றடைந்தாக வேண்டும். இல்லையென்றால் நான் பித்தனாக வேண்டியதுதான் (அங்கிருந்து சென்று கதவைத் திறக்கிறார். வெளியே புயலும் மழையும் இன்னும் ஓய்ந்த பாடில்லை.) இங்கிருந்தபடி தனிமையில் என்னால் அவளைப்பற்றிய நினைவுச் சுமைகளை என்னால் தாங்க முடியவில்லை! [பரிதாபத்துடன் நான்ஸி பௌலிங்கைப் பார்க்கிறாள் அவர் வெளியே பார்த்தபடி கதவருகில் நிற்கும் ஆபியிடம் செல்கிறார்.]

**பௌலிங்:** [மிகக் குழைவுடன்] ஆபி, மாடிக்குச் சென்று சிறிது நேரமாவது நீங்கள் தூங்க வேண்டுமென்று விரும்புகிறேன்............... என்னையும் நான்ஸியையும் திருப்தி செய்வதற்காவது தயவுசெய்து இதைச் செய்ய வேண்டும் நீங்கள்.

**ஆபி:** [ஒரு கணத்திற்குப் பின்] அப்படியே செய்கிறேன் பௌலிங் [கதவருகிலிருந்து திரும்பி மாடிப்படிக்குச் செல்கிறார்.]

நான்ஸி: *ஆபி, இந்தாருங்கள் விளக்கு. [அவரிடம் ஒரு மெழுகுவர்த்தி விளக்கைக் கொடுக்கிறார்கள்.]*

ஆபி: *நான்ஸி! ரொம்ப நன்றி.......வணக்கம் [படியேறி மாடிக்குச் செல்கிறார்]*

*[அங்குள்ள அனைவரும் அவரையே பார்க்கின்றனர்]*

நான்ஸி: *[கண்ணீர் மல்க] பாவம்! யாருமற்ற அனாதை [பௌலிங் பேசாமலிருக்கும்படி எச்சரிக்கிறார்]*

ஜாஷ்.: *நான்ஸி! அவரை எங்கும் போகவிடாமல் இங்கேயே உங்கள் கண் பார்வையிலேயே வைத்துக்கொள்ளுங்கள்.*

பௌலிங்: *அதெல்லாம் விடமாட்டோம் ஜாஷ்!*

ஜாஷ்: *வணக்கம் [தனது தொப்பியையும், மேல் சட்டையையும் எடுத்துக்கொண்டு போகிறார்]*

பௌலிங்: *வணக்கம் ஜாஷ்! போய்வாருங்கள் [அவர் கதவை சாத்தி தாளிட்டுக் கொண்டு மேஜையருகில் சென்று விளக்கை யெடுக்கிறார்.]*

*[நான்ஸி அவரையும் ஏறிட்டுப் பார்த்து விட்டு வலது பக்கம் செல்கிறாள். பௌலிங்*

*கையில் விளக்குடன் அவளைப் பின் தொடருகிறார். இப்போது அரங்கத்தில் மேல்மாடியிலிருந்து மெல்லிய ஒளி ரேகைகள் மட்டுமே படர்ந்து உள்ளன.*

[திரை]

முதலாவது அங்கம் முற்றிற்று.

# இரண்டாவது அங்கம்

## காட்சி 4

[முந்திய காட்சிக்குப் பிறகு ஐந்தாண்டுகள் கழித்து]

இல்லினுயிஸ் ஸ்பிரிங் பீல்ட் கோர்ட் ஹவுஸ்' இரண்டாவது மாடி, வழக்கறிஞர்களான ஸ்டூவர்ட்—லிங்கன் காரியாலயம்—ஒரு கோடைக்கால பிற்பகல் வேளை.

சிறிய அறை—இரண்டு ஜன்னல்களும் ஒரு கதவும் கொண்டது. ஹாலும் மாடியுமுண்டு. வலது பக்கத்தில் ஒரு நாற்காலியும் மேஜையும் போடப்பட்டிருக்கின்றன.

இடது பக்கத்தில் ஒரு சாய்வு மேஜை—அதன் மீது ஏராளமான வழக்கு தஸ்தாவேஜுகள் ஒரு பழைய படுக்கை.

ஜன்னல்களுக்கு கீழே கரடான அலமாரித் தட்டுகளில் சட்ட புத்தகங்கள். மூலையில் ஒரு மர 'ஸ்டவ்.'

சாய்வு மேஜைக்கு மேலே சுவரில் 26 நட்சத்திரங்கள் தாங்கிய ஒரு கொடி தொங்கவிடப் பட்டிருக்கிறது.

ஜன்னல்களுக்கிடையில் தேர்தல் அபேட்சர்கள்-ஜாரிசன், டைலர் இவர்களுக்கான தேர்தல் விளம்பர சுவரொட்டியும் (வாக்காளர் ஜாபிதாவுடன்) காணப்படுகிறது. அதில் சாங்காமனைச் சேர்ந்த ஆபிரஹாம் லிங்கனின் பெயர் கடைசியில் காணப்படுகிறது.

பில்லி ஹேண்டர்ஸன் மேஜைக்கு எதிரே அமர்ந்து வேலை செய்துகொண்டிருக்கிறார். அவர் இளைஞர், அலட்சிய சுபாவமும், எரிச்சல் குணமும், தீவிரமாய் சிந்திக்கும் மனமும் படைத்தவர். ஆபி வருவதை நோக்குகிறார்.

ஆபி லேசானதொரு அல்பாகா கோட்டும், கிழிந்த தொப்பியும் அணிந்து, முரட்டுத்துணியால் நெய்த, நைந்துபோன ஒரு மிகப் பழைய பையைக் கையில் ஏந்திக்கொண்டு வருகிறார். அவரைப் பார்த்தாலே கலகலப்பாக பேசுபவர் போலத் தோன்றவில்லை. பூட்ஸுகளில் சேர் படிந்து கிடந்தது. முப்பத்தோரு வயதே ஆகியிருந்தபோதிலும் அவரது இளமையெல்லாம் ஆன்ரட்லெஜ்ஜுடன் மாண்டு மறைந்து விட்டது.

காரியாலயக் கதவைத் திறந்து வைத்தபடி விடுகிறார். அந்தக் கதவில் ' 4 என்ற எண், அந்த ஸ்தாபனத்தின் பெயராகிய ' ஸ்டூவர்ட்டு அண்ட் லிங்கன் வழக்கறிஞர்கள் '—என்று எழுதப்பட்டிருந்தது.

**பில்லி :** *சௌக்கியம்தானா? லிங்கன், திரும்பவும் உங்களைக் காணுவதில் சந்தோஷம்.*

**ஆபி :** *வணக்கம், பில்லி. [அவர் கையிலிருந்து பையைக் கீழே வைத்துவிட்டு தொப்பியைக் கழற்றி மேஜைமீது வைக்கிறார்.]*

**பில்லி :** *உங்கள் சுற்றுப் பிரயாணம் எவ்வாறிருந்தது?*

**ஆபி :** *எப்போதும்போல் தானிருந்தது.*

**பில்லி :** *உங்கள் உடல் நலம் எப்படி?*

**ஆபி :** *ஓரளவு சௌக்கியக் குறைவுதான். இருந்தாலும் நான் மேலும் மேலும் பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்துவதற்கு உதவியாக அவ்வப்போது டாக்டர் ஹென்றி மருந்து கொடுத்துக் கொண்டேயிருந்தார்.*

*[அவர் தனது மேஜைக்கருகில் அமர்ந்து தனது பிரயாணத்தின்போது அங்கு வந்து குவிந்திருந்த கடிதங்களையும், வழக்கு தஸ்தாவேஜுகளையும் படித்துப் பார்க்கிறார். பிரிக்கப்படாத கடிதங்களை உடைத்துக்கொண்டே அவற்றை மேலெழுந்தவாரியாய்ப் பார்க்கிறார்]*

**பில்லி :** *அரசியல் பிரசங்கங்கள் செய்யும் வாய்ப்பு ஏதாவது உங்களுக்கு ஏற்பட்டதா?*

**ஆபி :** *ஓ! கிடைத்தது. பலமுறை அவர்கள் என்னை அரசியல் மோதல்களுக்கு உட்படுத்திவிட்டார்கள் ஸ்டீபன் டக்ளஸ் பிரசாரம் செய்து கொண்டு வந்தார். அவருக்கும் எனக்கும் போட்டிப் பிரசங்கங்கள் நிகழ்ந்தன. பொது மேடைகளிலேயே சில சமயம் நாங்கள் விவாதம் நடத்*

**பில்லி :** *(மிக்க ஆர்வத்துடன்) ரொம்ப நல்லது, அப்படி எந்தெந்த பிரச்னைகளைப் பற்றி நீங்களும் டக்ளஸும் விவாதித்தீர்கள்.*

**ஆபி:** அதைப் பற்றி ஒன்றும் அதிகம் உணர்ச்சி வசப்படாதே! நாங்கள் அப்படி யொன்றும் உண்மையான தீவிரத்துடன் விவாதிக்கவில்லே. அடிதடி ரத்தக்களறி ஒன்றும் ஏற்படவில்லே........அதிருக்கட்டும் இவ்விடத்து விசேஷம் என்ன?

**பில்லி:** ஜட்ஜ் ஸ்டுவர்ட் தான் வாஷிங்டனுக் குப் பத்திரமாக வந்து சேர்ந்துவிட்டதாக வும், அங்கு சீதோஷ்ண நிலேயைப்போல் தேர்தல் பிரசாரம் நாளுக்குநாள் சூடு பிடித்து வருவதாகவும் எழுதியுள்ளார். தவிர உங்களுக்குத் தரவேண்டிய சன் மானத் தொகையை கொஞ்ச காலத்திற் குக் கொடுக்க முடியாமலுள்ள தென்பதை யும் திருமதி ப்ரேம் இங்கு வந்து சொல்லி விட்டுச் சென்ருள்.

**ஆபி:** அவளிடத்திலிருந்து நான் எதுவும் எதிர் பார்ப்பதற்கில்லே. ஏனெனில் ஏழையான அவளது கணவனுக்காகத்தான் நான் வாதாடினேன். ஆயின் பயனில்லே; அவன் தூக்கிலிடப்படான்.

[பில்லி அவரிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து அவர் படிப்பதையே கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டு இருக் கிருர்.]

**பில்லி:** இந்தக் கடிதம் நேரடியாகக் கொண்டு வந்து கொடுக்கப்பட்டது. தவருமல்

அதைப்பற்றி ஞாபகமாகத் தங்களுக்கு நினைவூட்டுவதாக வாக்குறுதியளித்தேன். “எலிஜா. பி. லவ்ஜாய் சுதந்தர மக்கள் கழகம்” எழுதிய கடிதம் அது. அடுத்த வியாழனன்று நடைபெறும் நீக்ரோ அடிமைக் கொள்கையை சட்ட பூர்வமாக அடியோடு ஒழிக்கும் இயக்கத்தவர்கள்? நடத்தும் அணிவகுப்பு நிகழ்ச்சியில் நீங்கள் பேசவேண்டு மென்று விரும்புகின்றனர். அது ரொம்பவும் முக்கியமான நிகழ்ச்சியாகத் தானிருக்கும்.

ஆபி: இது மிகவும் வேடிக்கையாயிருக்கிறது பில்லி. முன்பு ஒரு சமயம் நான் ‘லவ்’ ஜாய் கழகத்தைப் பற்றிச் சிந்தித்துப் பார்த்தேன். தான் ஒரு தியாக புருஷனுவதில் மனிதனுக்கு ஏற்படும் சந்தோஷத்திற்கு காரணம் என்ன வென்பதையும் ஆராய்ந்து பார்த்தேன். குவின்ஸியிலிருந்து ஆல்டனுக்கு வந்து கொண்டிருந்த படகில் நான் இருந்தேன். அந்தப் படகில் பன்னிரண்டு நீக்ரோக்களுடன் ஒரு கனவானிருந்தார். அவர்களை அவர் விக்ஸ்பர்க்குக்கு விற்பனைக்காக கொண்டு வந்திருந்தார். அவர்கள் அறுவர்கொண்ட இரு கோஷ்டிகளாகச் சங்கிலியால் கட்டப்பட்டிருந்தனர், பாவம்! அந்த அப்பாவி நீக்ரோ கூட்டத்தினர் அவரவர் குடும்பத்தை விட்டே—தந்தை, தாய், மனைவி, மக்களை விட்டே—என்றென்றும் பிரிக்கப்

பட்டு விட்டனர். இனிமேல் அவர்கள் யாதொரு கேள்விக்கு மிடமின்றி செக்கு மாடுகளைப் போன்று திரும்பத் திரும்ப அடிமைத் தொழிலே செய்தாகவேண்டும். அவர்களைப் பார்த்தது ஒரு அதிர்ச்சியளிக் கும் காட்சியாகவே இருந்தது.

**பில்லி :** [உணர்ச்சி வசமாக,] அப்படியானல் நீ லவ்ஜாய் அணி வகுப்பில் ஒரு பிரசங் கம் செய்வாய் அல்லவா ?

**ஆபி :** (அலுப்புடன்) அது சந்தேகம்தான். அந்தக் கழகத்தார் வெறும் வெறியர்கள். கூச்சல் நிறைந்த படு நரகம்—போன்றது அந்தக் கழகம். அவர்களிடம் நியாயத் தைப் பற்றிப் பேசினல் சாத்வீகமான பிரசங்கிகளென்று நம்மை வெறுத்து ஒதுக்குவர். அதனல் அவர்களே தங்க ளுக்குள் கத்திக் கொள்ளட்டும் [ஆபி ஒரு கடிதத்தைப் பிரித்துப் படிக்கிறர். கசப் பான ஏமாற்றத்துடன் பில்லி அவரைப் பார்க்கிறர். அவருடன் எந்த விதமான விவாதமும், பயன்படாததென்று நன்ருக உணர்ந்தவர். எனவே தனது வேலையில் மீண்டும் ஈடுபடுகிறர் ஒரு விநாடி கழித்து ஜாஷ்ஸ்பீட் பின்தொடர பௌலிங் கிரீன் உள்ளே பிரவேசிக்கிறர்]

**பௌலிங் :** வழக்கறிஞருக்கு இடையூருக நாங் கள் குறுக்கிடுகிறேமா !

**ஆபி :** (மகிழ்ச்சியுடன் எழுந்து தாவி பௌலிங் கின் கையைப் பற்றுகிருர்.) எப்படி இருக் கிறீர்கள், பௌலிங் ?

**பௌலிங் :** அநேகமாக நன்ருகவே இருக்கி றேன் ஆபி, உங்களைப் பார்த்ததில் சந் தோஷம்.

**ஆபி :** நியூ சேலத்தைச் சேர்ந்த ஸ்குயர் கிரீன் பில்லி ஹெர்ன்டான் இவர்தான்—ஓஹோ! வாருங்கள் ஜாஷ்.

**ஜாஷ் :** சௌக்கியமா ஆபி ?

**பில்லி :** (பௌலிங்குடன் கைக்குலுக்கியபடியே) தங்களைத் தெரிந்து கொண்டதில் மிக்க பெருமையடைகிறேன். லிங்கன் அவர்கள் உங்களைப்பற்றி அடிக்கடி கூறுவார்.

**பௌலிங் :** மிக்க நன்றி, மிஸ்டர் ஹெர்ன்டான், நீங்களும் ஒரு வழக்கறிஞர் தானே ?

**பில்லி :** (முறுக்காக) வழக்கறிஞராகத்தான் பார்க்கிறேன் ; இப்பொழுது ஜட்ஜ் ஸ்டு வர்ட் இல்லாத சமயத்தில் அவருக்குப் பதிலாக குமாஸ்தா வேலை செய்து வரு கிறேன்.

**பௌலிங் :** ஆகவே இப்போது தங்கள் தொழில் நுட்பங்களைப் பிறருக்குக் கற்றுத் தருகிறீர் கள் அல்லவா ? ஆபி !

**ஆபி :** *என் வழியைப் பின்பற்றினல் மோச மாய்த்தான் முடியும்.*

**பௌலிங் :** *தெரிகிறதே! நீங்கள் மேஜையை வைத்திருக்கிற ஒழுங்கைப் பார்த்தாலே வெட்கம்!*

**ஆபி :** *இன்னும் ஒரு வருடம் நான் வக்கீல் தொழில் புரிந்தால் அப்போது பாருங் களேன். எனக்கு பெரிய கிடங்கு தேவை யாயிருக்கும்—தஸ்தாவேஜுகளை வைப்ப தற்கு........அது சரி, பௌலிங் அமருங்கள், நீங்கள் ஸ்பிரிங்பீல்ட் வந்ததற்குக் காரணம் என்னவோ?*

*(பௌலிங் உட்காருகிருர் ஜாஷ் சோபா வில் அமர்ந்து குழாயில் புகை பிடிக்கிருர். பில்லி மேஜையண்டை மறுபடியும் தன் வேலையில் கவனம் செலுத்துகிருர்.)*

**பௌலிங் :** *நான் மிச்சிகான் ஏரியில் மீன் பிடிக்கச் சென்றிருந்தேன். ஆகா! அங்கே வந்திருந்த மோட்டார் வண்டிகள் என்னை வெருளச் செய்துவிட்டன. நீங்கள் எப் படி இருக்கிறீர்கள்! ஆபி சௌக்கியந் தானே? நீங்கள் இன்னமும் மனமுடைந் திருப்பதாக ஜாஷ் கூறுகிருர். ஆனல் நீங்கள் சமூகத்தில் முன்னுக்கு வந்துள்ளீர் கள்.*

**ஆபி :** *இரண்டும் உண்மைதான், சிறப்பான வைபவங்களிலெல்லாம் நான் கலந்துகொள்*

ளாமலிருப்பதற்கில்லை; அவ்வளவு வற்புறுத்துகிருர்கள். நின்னியன் எட்வர்ட்ஸ் உங்களுக்கு ஞாபகமிருக்கிறதா?

பௌலிங்: நன்ருய் ஞாபகமிருக்கிறதே!

ஆபி: அவரது மாளிகையில் நான் எப்போதும் விருந்தாளி. அவரது மாளிகையிலுள்ள உபசரிப்பு ஹாலில் ஒரு குதிரைப் பந்தயமே நடத்தலாம்; அவ்வளவு பெரியது. அவரது மனைவி கெண்டகியிலுள்ள டாட் குடும்பத்தைச் சேர்ந்தவர். மிகவும் உயர்ந்த மனிதர்கள். நாம் கடவுளைக் கூறும்போது 'GOD' என்னும் சொல்லில் உள்ள ஒரு 'D' போதும் என நினைக்கிறோம். ஆனல் அவர்களோ தங்கள் குடும்பப் பெயரைக் கூறும்போதுகூட 'TODD' என்று இரண்டு 'DD' க்கள் போட்டு அழைக்கிருர்கள். அதுவும் கவர்ச்சியாகத் தான் இருக்கிறது.

ஜாஷ்: பௌலிங், ராஸ்செஸ்டரில் யாரைச் சந்தித்தீர்கள்?

ஆபி: ஐக்கிய நாட்டின் ஜனதிபதியை.

பௌலிங்: என்னிடம் அப்படி சொல்லவில்லையே!

ஆபி: இந்தக் கையைப் பாருங்கள் (அவர் தனது வலது உள்ளங்கையை மேலே தூக்கிக் காண்பிக்கிருர்.)

பௌலிங்: அதைப் பார்த்தேன்.

**ஆபி :** *இந்தக் கை மார்டின் வான் பரன் கையைக் குலுக்கியிருக்கிறதாக்கும்!*

**பௌலிங் :** *(சிரித்துக் கொண்டு) ஜனாதிபதி உம்மிடம் மரியாதை காண்பித்தாரா, ஆபி.*

**ஆபி :** *ஆம். அவர் என்னிடம் "வாஷிங்டனில், உங்களைப் பற்றி ரொம்ப கேட்டிருக்கிறோம்" என்று கூறினார். அவர் சந்திக்கும் எதிர்க் கட்சிக்காரர்களிடமெல்லாம் சொன்னவற்றையே தான் திருப்பித் திருப்பிச் சொல்கிறாரென்பதை அறிந்தேன். (அவர் சிரிக்கிறார்) ஆனால் நான் தவறான மனிதர்களுடன் சாவகாசம் வைத்திருப்பதுபற்றி என்னிடம் பில்லி ஹெர்ன்டன் மிகவும் வெறுப்படைந்துள்ளார். பில்லி ஒரு எரிகொள்ளி; உண்மையான தீவிர நிறவெறி எதிர்ப்பாளர். அரசியல் சட்டத்தைக் கண்டு பயந்து வாயை மூடிக் கொண்டிருக்கும் யாரையும் சகிக்க முடியாது அவரால். ஆம்! பில்லி! இவரது போக்கில் இவர் சென்றால் யூனியன் தீக்கிரையாகி நாமும் தூள் தூளாகச் சிதற வேண்டியதுதான்.*

**பில்லி :** *ஆம், லிங்கன், என்னைக் கேட்டால் நீங்கள் உங்களிடம் சுரந்துள்ள தீவிரமான ஆவேச உணர்ச்சியைச் சற்று வெளிப்படுத்துவீரானால் மக்களுக்கு சேவை செய்தவராவீர்கள்.*

ஆபி : *கவனித்தீர்களா, பௌலிங்? அவர் கொடுமையும், அநியாயமுமே உருவான கோஷ்டியுடன் போராடி ரத்தந்தோய்ந்த செருகளத்தில் இறக்கச் சொல்கிருர்.*

பௌலிங் : *ஹொர்ன்டான் அவர்களே! என் மனமார்ந்த பாராட்டுக்கள் தங்களுக்கு.*

பில்லி : *(எழுந்திருந்து தொப்பியை எடுத்துக் கொண்டு) வணக்கம், ஐயா! (பௌலிங் குடன் கை குலுக்கிவிட்டு ஆபி பக்கம் திரும்புகிருர்) வில்காக்ஸ் வழக்கைப் பற்றிய பத்திரம் தயாரித்துள்ளேன். கோர்ட் குமாஸ்தாவிடம் அதைத் தாக்கல் செய்வதற்கு எடுத்துச் செல்லப்போகி றேன்.*

ஆபி : *ரொம்ப சரி, பில்லி.*

பில்லி : *(பௌலிங்கிடம்) ஸ்குயர்கிரீன்—லிங்கன் அவர்கள், உங்களையும் ஸ்டீடையும் மிகவும் ஆப்த நண்பர்களாக மதிக்கிருர். அவர் முன்னிலையில் ஆண்டவன் பேரால் உங்களை மிகவும் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். அவர் வெகு வேகமாக விழுந்து வரும் மலினமாகத் தேங்கிக் கிடக் கும் குட்டையிலிருந்து அவரை விடுவியுங் கள். வணக்கம் ஐயா, வணக்கம் மிஸ்டர் ஸ்டீட்.*

ஜாஷ் : *வணக்கம், பில்லி.*
*(பில்லி போய்விட்டார்)*

பௌலிங்: அவர் ஒரு சூடிகையான இளைஞர் ஆபி, எல்லாவற்றையும் நன்கு புரிந்து கொள்கிறார்.

ஆபி: (பில்லியைப் பார்த்துக் கொண்டே) அவர் கீழே, கோர்ட் குமாஸ்தா காரியால யத்திற்கு போய்க் கொண்டிருக்கிறார். ஆனால் தொப்பியையும் எடுத்துக்கொண்டு போயுள்ளாரே! ஆகவே இங்கே வேலைக் குத் திரும்புவதற்கு முன்பு சென்னரி ஹவுஸ் சலூனுக்குச் சென்று வருவார் போல் தோன்றுகிறது.

பௌலிங்: அவர் குடிப்பதுண்டா?

ஆபி: ஆம். அவர் நிரம்ப ஆற்றல் சுடர் படைத்தவர்தான். ஆனால் அதைப் படு வேகமாக அவித்துக்கொண்டு வருகிறார்.... ....சரி. இப்போது நியூ சேலத்தைப்பற்றி சொல்லுங்கள். [ஜன்னலை யொட்டிய சுவரின் மீது சாய்ந்துகொள்கிறார்]

பௌலிங்: அங்கு எல்லாம் ஒரே சூன்யமாக இருக்கிறது.

ஆபி: உங்களுடைய மனைவி சௌக்கியமாக இருக்கிறாளா?

பௌலிங்: நான்ஸி எப்போதும் முன்னைவிட அதிக சுறுசுறுப்பாயிருப்பதோடு உங்கள் உள்ளுறை சிந்தனைகள் பற்றியும், அபி லாஷைகளைப் பற்றியும் அறிய மிகவும்

ஆவலுள்ளவளாயிருக்கிறாள். மேலும் சொல்லப்போனால் உங்களைப் பற்றிய தகவலை யெல்லாம் என்னை அறிந்துவரவும் கூறியிருக்கிறாள்.

**ஆபி :** (சிரிக்கிறார்) நீங்கள் அவளிடம் நன்றாகக் கூறலாம். என்னுடைய கடன்களில் டாலருக்கு 7 சதம் விகிதம் திருப்பிக் கொடுக்கப்பட்டு விட்டதென்று தோலும் எலும்புமாக சுகமாய்த்தானிருக்கிறேன் என்றும் கூறலாம்.

**பௌலிங் :** உங்களுடைய யோக க்ஷேமததைப பற்றி அடிக்கடி ஏன் எங்களுக்கு அறிவிப்பதில்லை?

**ஆபி :** ஜாஷுக்குத் தெரியுமே! நான் அதிக ஜோலியாயிருக்கிறேனென்று.

**பௌலிங் :** எதைப்பற்றி அவ்வளவு ஜோலி?

**ஆபி :** நான் ஒரு அபேட்சகன்.

**ஜாஷ் :** (தேர்தல் போஸ்டரைக் குறித்து காண்பித்துக்கொண்டு) அவரது பெயரை நீங்கள் கவனிக்கவில்லையா? விக் கட்சி டிக்கட்டுள்ள வாக்காளர் ஜாபிதாவில் அவர் பெயர் அடியிலிருக்கிறது பாருங்கள்.

**ஆபி :** அடுத்த தேர்தலில் அந்தக் கிழவர் டிப்பிகெனோ வெற்றி பெறுவாரானால் எலெக்டரல் காலேஜில் (அமெரிக்க பிரசி

டெண்டையும் வைஸ் பிரசிடெண்டையும் தேர்ந்தெடுக்கும் பொறுப்புள்ள குழு) அங்கத்தினரில் ஒருவனுக எனக்கு இடம் கிடைக்கும்.

**பௌலிங்:** எலெக்டரல் காலேஜா! நீங்கள் சிறப்பாகச் சாதிக்கக் கூடியதெல்லாம் அவ்வளவுதானே?

**ஆபி:** ஆம்! எனக்குக் கிடைத்துள்ள கால வரம்புக்குள் அதுதான் இயலும். எனக்கு சேத்கேலிடமிருந்து ஒரு கடிதம் வந்துள் ளது. அவர் நியூ சேலத்தில் தான் தங்கி யிருந்தார்; எப்போதும் அவருக்கு மேற் குப் பக்கம் குடிபுக வேண்டுமென்ற ஆவல். இது எனக்கு ஞாபகமிருக்கிறது. அவர் இப்போது மேரிலாண்டில் குடியேறியுள் ளார்; அவருடன் அவர் மனைவியும் ஒரு குமாரனுமிருக்கின்றனர். பின் கிழக்குப் பிரதேச வாசிகள் டெக்ஸாஸ் பிரதேசத் தையும் ஆக்கிரமித்துக் கொள்வார்களோ என்ற கவலையுற்றவர்களாயிருக்கின்றன ரென்று அவர் கூறுகிருர்.

**பௌலிங்:** வாஸ்தவமே! அப்படி ஆக்கிர மிக்காவிட்டால் கன்ஸாஸ்—நெப்ராஸ்கா முதல் ஓரிகான்—காலிபோர்னியா வரை உள்ள ராஜ்யங்களிலெல்லாம் அடிமை ஆதிக்கக் கொள்கை வலுப்பட்டு விடும் தெற்குப் பிரதேசத்தில் சர்வாதிகார

ராஜ்யம் நிலையூன்றிவிடும். மற்ற சுதந்திர ராஜ்யங்களிலுள்ள நம்மை ஆண்டவன் தான் காப்பாற்றவேண்டும்!

**ஜாஷ்:** ஆம்! ஆம்! அந்த நிலை கேவலமானது தான். அது உள்நாட்டுக் கலகம் போன்ற குழப்பங்களுக்கு வித்துக்கள் விதைப்ப தாய்விடும்.

**ஆபி:** அம்மாதிரியானால் அது நிறவெறி எதிர்ப்பு கோஷ்டியாரின் தவறே. அவர்கள் செய்து வரும் ஆர்பாட்டங்கள் தான் எங்கு கொண்டு போய் விடுமென்று அவர்க ளுக்குத் தெரிந்திருந்தும் அவர்கள் கிளர்ச்சி செய்து கொண்டே வருகின்றனர். அமைதி யைக் குலைக்கும் அவர்கள் யாவரையும் சிறையில் தள்ளவேண்டும்.

**பௌலிங்:** ஆபி, நீங்கள் அடிமைத்தனத்திற்கு விரோதி என்று நினைத்திருந்தேன். உங்கள் அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டு விட்டீர்களா?

**ஆபி:** (இருகால்களையும் ஒரேயடியாய்த் தூக்கி சோபாவில் பாய்ந்து கால்களை நீட்டிக் கொள்கிறார்) இல்லை. நான் அடிமைத் தனத்தை எதிர்ப்பவன்தான்; ஆனால் அதையும்விட சண்டைக்குப் போவதை அதிகமாக எதிர்ப்பவன். எல்லாவற்றிற்கும் மேலாக நீங்களிருவரும் என்ன கருத்தோடு என் விஷயத்தில் இவ்வளவு சிரத்தையோ

டிருக்கிறீர்கள் என்பதுவும் எனக்குத் தெரியும். (அவர்களோடு மிகவும் அன் பொழுகப் பேசுகிறார்.) இதுவரை நான் ஒன்றும் பெரிதாக சாதிக்கவில்லையே என்று நீங்கள் என்னைப்பற்றி கவலை கொண்டு இருக்கிறீர்கள். பில்லி ஹொர்ன் டனின் கருத்தைப் பின்பற்றியே உங்க ளுக்கும் இந்தக் கவலை இல்லையா?

**பௌலிங்:** இல்லை, ஆபி! உங்கள் வாழ்க்கைப் போக்கில் நான் இப்படியெல்லாம் குறுக் கிடமாட்டேன்.

**ஜாஷ்:** நானும் அப்படித்தான் ஆபி! அம் மாதிரி நாங்கள் நினைத்திருந்தால் நீங்கள் எங்களுக்கு ஒரு ஏமாற்றமாய்த் தானிருந் திருப்பீர்கள். அந்த மாதிரி எண்ணத்தை நாங்கள் வெளியிடவும் மாட்டோம்.

**ஆபி:** (சிரிக்கிறார்.) என் சக்தி, சுபாவம், மனப் பான்மை என்னவென்பதை நான் நன்கறி வேன். அதுவேபோல் நீங்களும் என்னைப் பற்றித் தெரிந்து கொள்வது நலம். சண்டையிடும் சுபாவம் என்னிடமில்லை; நான் ஒரு போர் வீரனுமல்ல. ப்ளாக் ஹாக் யுத்தத்திலிருந்து நான் அதை உணர்ந்து கொண்டேன். அப்பொழுது எங்கே நாம் யாராவது ஒரு இந்தியனைச் சுட வேண்டியதாகி விடுமோ என்று ஒரே பீதியாக இருந்தது. நல்ல காலமாக இந்

தியர்களும் அவ்வறே எண்ணியதால் அவர் களில் ஒருவர் கூட என் கண்ணில் தென் படவில்லை. சண்டையிடுவதில் விருப்ப முள்ளவர்கள் ஏராளமாக இருக்கிறர்கள் என்பது எனக்குத் தெரியும். அவர்கள் கொலை செய்யவும் அஞ்சார். தாங்கள் கொலை செய்யப்படுவோம் என்பதிலும் அவர்களுக்குப் பயமில்லை. போகட்டும். ஆனல் அவர்கள் போட்டே தீரவேண்டிய சண்டையில் அவர்களே ஈடுபடட்டும்.

பௌலிங்: சமாதானத்தை விரும்புபவர்களும் சில சமயம் தங்கள் தேசத்திற்கு நன்மை செய்திருக்கிறர்கள்.

ஆபி: ஆரம்பத்தில் அவர்கள் சமாதானத்தை விரும்பியவர்களாக இருந்திருக்கலாம். ஆனல் அரசியல் என்னும் மாபெரும் குழப்பத்தில் ஆழ்ந்த பிறகு அவர்கள் தொடர்ந்து நீண்ட நாளைக்கு அப்படியே இருப்பதில்லை. (அவர் எழுந்து உட் கார்ந்து கொள்ளுகிறர்.) நான் காங்கிரஸ் சபைத் தேர்தலுக்கு நின்று வெற்றி பெற்றுவிட்டதாக வைத்துக்கொள்வோம். பிறகு நானும் நீங்கள் சொல்லிவந்தது போல அந்தக் கீழ்த்தரமான சூழ்நிலையில் வகையாகச் சிக்கிக்கொண்டு விடுவேன். பிறகு யுத்தமா அல்லது சமாதானமா என்ற பயங்கரப் பிரச்னையின் மீது நானும் எனது வாழ்க்கை அளித்தாக வேண்டி

*வரும். அது டெக்ஸாஸுக்காக மெக்ஸி வுடனே, ஒரிகான் விஷயமாக இங்கிலாந் துடனே, அல்லது ஓஹியே நதிக்கு அப் பாலுள்ள நம்மவருடனேயோ, யாருடன் நடத்தவேண்டிய யுத்தமாக இருந்தாலும் அதில் நான் எப்படி வாக்கு அளிக்க வேண்டும் என்பதைப் பற்றி தீர்மானித் தாக வேண்டும். லிபரல் கட்சி சார்பில் தான் ஓட்போட வேண்டியிருக்கும். ஆனல் லிபரல் கட்சியின் போக்கு எப்படிப் பட்டது? ஒரு சிறு பிரதேசத்திற்காக யுத்தம் செய்வதா? அல்லது நேர்மையான நீதிக் கொள்கைக்காக யுத்தம் செய்வதா? அல்லது என்ன நேர்ந்தாலும் யுத்தத்தைத் தவிர்ப்பதா? இப்படியெல்லாம் பிரச்னை கள் எழும். இந்தத் தொல்லேகளெல்லாம் வேண்டவே வேண்டாம், நண்பரே. எலக் டரல் காலேஜில் அங்கத்தினனக இருப் பதையே நான் விரும்புகிறேன். மக்களால் பொதுவாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரசி டென்ட் சார்பில் நான் ஓட் அளிப்பது ஒன்றுதானே என் கடமை.*

**பௌலிங்:** *சரிதான் ஆபி—தந்திரமாய்த் தப் பித்துக் கொள்வதில் நீங்கள் எப்பொழுமே கை தேர்ந்தவர். உங்கள் மனச்சாட்சியின் பிடிப்புக்கு எப்பொழுதுமே உட்படாமல் நீங்கள் கடைசிவரை வாழ்க்கையை நடத்தி விட முடியும். [நினியன் எட்வர்ட்ஸ் உள்ளே வருகிறார். முன்னேவிட அவர்*

பருமனுகவும் செழிப்பாகவும் காணப்படு கிருர்.

**ஆபி:** ஜாஷ் (இருவரும்) வாருங்கள் வாருங்கள் நினியன்.

**நினியன்:** சென்னறி ஹவுஸில் பில்லி ஹென்டனைப் பார்த்தேன். அவர் நீங்கள் சுற்றுப் பிரயாணத்திலிருந்து திரும்பி வந்துவிட்டதாகக் கூறினுர். (அவர் பௌலிங்கைப் பார்க்கிருர்) ஓஹோ! என் அரிய நண்பர் ஸ்கெயர் கிரீன் அவர்களா? சௌக்கியந்தானே? ஸ்பிரிங்பில்ட் தங்களை வரவேற்கிறது. (பௌலிங்குடன் கைகுலுக்குகிருர்)

**பௌலிங்:** மிக்க நன்றி, மிஸ்டர் எட்வர்ட்ஸ்.

**நினியன்:** எங்களுடன் உணவருந்த உங்களை அழைக்கவே வந்தேன்; ஆபி, ஸ்குபர், எட்வர்ட்ஸ் சீமாட்டி இருவரும் நீங்கள் விருந்தில் கலந்து கொள்வதில் பெரு மகிழ்ச்சி கொள்வார்கள்; நீங்களும்தான் வரவேண்டும் ஜாஷ்.

**ஜாஷ்:** மெத்த சந்தோஷம்!

**நினியன்:** கெண்டகிலிருந்து வந்துள்ள ஏங்கள் மைத்துனி மேரிடாடை எல்லோருக்கும் பெருமிதத்துடன் அறிமுகம் செய்துவைக்கும் பொருட்டே இந்த விருந்து ஏற்பாடு. அவள் மிகவும் உல்லாசமான ஒரு இளம்

வனிதை. பிரஞ்சு பாஷையைப் போன்றே வெகு சரளமாகப் பேசுகிருள்; இமைக்கும் நேரத்திற்குள் கவிதைமாரி பொழிகிருள்; எல்லா மலர்களைப் பற்றியும் அவற்றின் தன்மைகளைப் பற்றிய தகவல் பூராவையும் அறிந்துள்ளாள். தான் ஸ்டீடல்டக்ளஸை யும் இன்னும் சில மரியாதை மனிதர்களை யும் அவளைக் சந்திக்கச் சொல்லியிருக் கிறன். நீக்களும் விரைவில் வந்து கலந்து கொள்ளுங்கள்.

**பௌலிங்:** எட்வர்ட்ஸ் சீமாட்டிக்கு என் பாராட் டுக்கள்; என்னுடைய மனைவி எனக்காக ஆவலுடன் வீட்டில் காத்திருக்கிருள் என்று நினைக்கிறேன்.

**ஆபி:** நான் இதில் ஆச்சரியப்படமாட்டேன்!

**நினியன்:** நல்லது; நீங்கள் ஒரு ஒய்யாரமான சீமாட்டியைச் சந்திக்கப் போகிறீர்கள். யாரை மணந்தால் தனது வாழ்க்கை பிர காசமாகத் திகழும் என்பதையெல்லாம் பற்றி ஆரதீர ஆலோசித்து அங்குவரும் இளைஞர்களில் மிகவும் தகுதியான ஒரு வரைத் தேர்ந்தெடுக்கப் போகிருளென் பதை எச்சரிக்கிறேன், ஆபி. தனித்து சுதந்தரமாய் வாழக் கருதியுள்ள தங்கள் விருப்பத்திற்கு ஊறுவிளையக் கூடுமோ என்பதையும் பற்றி ஜாக்கிரதையாயிருங் கள்!

**ஆபி :** உங்கள் எச்சரிக்கைக்கு மிக்க நன்றி; நினிறன்.

**நினியன் :** விடை பெற்றுக் கொள்கிறேன், ஸ்குயர்! ஜாஷ், உங்களைப் பிறகு பார்க்கிறேன், (அவர் வெளியே போகிறார்.)

**ஆபி :** என் காரியங்கள் எப்படி யிருக்கின்றன கவனித்தீர்களா, பௌலிங். அழகும் நாகரிகமும் நிறைந்ததோடு மட்டுமின்றி வெகு சமத்காரமாகவும் உரையாடக் கூடிய யாராவது ஒரு மங்கையைச் சந்திப்பதற்கு நாள்தோறும் எனக்கு அழைப்பு வரா திருப்பதில்லை.

**பௌலிங் :** உன்னுடைய காதல் லீலைகளை பிரெஞ்சு மொழியில்வாரிக் கொட்டும் போது அதை நான் கேட்டு அநுபவிக்க இயலாமலிருப்பது பெரியவருத்தம்தான், ஆபி. [ஆபி அவரை ஆச்சர்யத்துடன் பார்க்கிறார்]

**ஆபி :** பௌலிங் ஜாஷ் — உங்களிருவரிடமும் நான் என்றும் மட்டமாய் நடந்து கொள்ள வில்லை. உங்களை நான் ஏமாற்றுவ தென்பது என்னை நானே ஏமாற்றிக் கொள்வதாகத்தான் முடியும். நீங்கள் என்னைப் பற்றி என்ன எண்ணிக் கொண் டிருக்கிறீர்களென்று எனக்குத் தெரியும் நானும் அப்படியேதான் என்னைப் பற்றி

எண்ணிக் கொண்டிருக்கிறேன். ஆனால் என்னுடைய குற்றங் குறைகளைக் கண்டு மனமிரங்கி நீங்கள் மன்னிப்பதுபோல அவ்வளவு எளிதாக அவற்றை நான் அலட்சியம் செய்ய இயலுவதில்லை. நீங்கள் உள்நாட்டு யுத்தத்தைப் பற்றிப் பேசுகிறீர்கள். என் உள்ளுக்குள்ளேயும் அப் படிப்பட்ட ஒரு போராட்டம் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது. இதில் இரு சாரரிடத்திலும் நேர்மையிருக்கிறது; தவறு மிருக்கிறது. இருசாராரும் சரி சமபலம் வாய்ந்தவர்களே. நான் இந்தப் போராட் டங்களைப் பொருட்படுத்தாமல் தனித்து நிற்க விரும்புகிறேன் - ஆனால் - தனக்குள் ளேயே பிரிவினை பட்டிருக்கும் இல்லம் நீடித்திருக்க முடியாது என்று விவிலிய நூல் சாற்றுகிறது. எனவே நான் நிராசை யுடன் இருக்கிறேன். நான் என்றோ ஒரு நாள் மனம் நொந்து உயிரை மாய்த்துக் கொள்ளவும் கூடும் எனக்கும் நல்லது, நாட் டிற்கும் நல்லது. அது சரி, புறப்படுங்கள், போகலாம். [தனது தொப்பியை எடுத்துக் கொள்கிறார்.] பௌலிங், நீங்கள் நான்ஸி யிடம் விரையுங்கள். தங்களை எதிர் பார்த்துக் காத்துக் கொண்டிருப்பாள். ஜாஷுவும் நானும் அந்த விருந்துக்குச் சென்று கெண்டகி நங்கை குமாரி மேரிடா டிடம் எங்கள் பெருமையை புலப்படுத்தி அவளுடைய நன்மதிப்பைப் பெற முயல வேண்டும். [அவர்கள் கதவைத் தாண்டிச்

*செல்லும்போது கை ஆட்டி வழியனுப்பு கிருர். அத்துடன் வெளிச்சம் மங்குகிறது.*

(நாலாம் காட்சி முற்றிற்று)

## காட்சி 5

ஸ்பிரிங்பீல்டிலுள்ள எட்வர்ட்ஸ் வீட்டின் வரவேற்பு அறை. நவம்பர் மாதத்தில்—ஒரு தினம் மாலை. முந்தின காட்சிக்குப் பிறகு ஆறு மாதங்கள் கழித்து.

அறையின் வலது பக்கத்தில் கணப்பு அடுப்பு. இடப்பக்கத்தில் திரையிடப்பட்ட ஜன்னல் முன் ஹாலுக்கு வரும் வாயிற் கதவு பின்புறமாக அமைந்துள்ளது. வலது புறமுள்ள கணப்பு அடுப்புப் பக்கத்தில் ஒரு சாய்வு நாற்காலியும் ஒரு சிறு சோபாவும் உள்ளன. இடப்புறத்தே மற்ருெரு சோபாவும் பின்ஞல் மேஜை—நாற்காலியும போடப்பட்டுள்ளன. சுவர்களில் குடும்பத்தினரின் புகைப்படஙகள் காட்சியளித்தன. அவை ஏறத்தாழ அவ்விடம் காண்பதற்கு அழகாகவே திகழ்கிறது. தன் மனைவி எலிசபெத்துடன் உரையாடியவாறு கணப்பு அடுப்புமுன், நினியன் நிற்கிருர். அவள் உயர்ந்த குல ஸ்திரீ; கண்ணியமானவள்; சற்றுப் பகட்டு அதிகம். ஓரளவு மனக் கலக்கத்துடன் காணப்படுகிருள்.

**எலிசபெத்:** *அதை என்ஞல் நம்ப முடியாது. எனது சகோதரியின் நல்லெண்ணத்திற்கு மாசு கற்பிப்பதாகும்.*

**நினியன் :** அதைப்பற்றி எனக்கும் அவ்வளவு நிச்சயமாகத் தெரியாது. மேரிக்கு ஆபி யைப் பல மாதங்களாகத் தெரியும். அதனால் அவருடன் நெருங்கிப் பழகி அவரைப் புரிந்து கொள்ளும் வாய்ப்புக்கள் அவளுக்கு ஏற்பட்டிருக்கின்றன.

**எலிசபெத் :** நம்மைப் போலவேதான் அவளை யும் வரவேற்றார். ஆனால் அவள் எட்வின் வெட், ஸ்டீபன் டீக்ளஸ், இன்னும் பல தகுதி வாய்ந்தவர்களிடமே கவனம் செலுத் தினாள்.

**நினியன் :** உன்னைவிட அதிகமாக ஆபியைப் பற்றி அவளால் தெரிந்து கொள்வது ஓரளவு சாத்தியமாயிருக்கக் கூடுமல்லவா?

**எலிசபெத் :** இது சுத்த மடமை. லிங்கனிடமுள்ள விசேஷ குணமென்னவென்றால் அவர் எல்லோரிடமும் ஒளிவு மறைவின்றி திறந்த மனத்துடனேயே பழகுவார்; மேலும் சொல்லப்போனால் பழகுவதற்கு அவர் மிகவும் இனிமையானவர். ஆனால் செல் வாக்குள்ள ஒரு குலத்தில் பிறந்து வளர்ந்து உயர் நோக்கங்கள் கொண்ட ஒரு வனிதையின் கணவன் என்ற முறை யில்........

**நினியன் :** நீ சொல்லுவது முற்றிலும் சரி, எலிசபெத்! மேரி உயர் நோக்கங் கொண்

டவள் என்கிற காரணத்தினல் ஆபியை வசப்படுத்த முனைகிருள்.

[எலிசபெத் அவரைச் சற்று கூர்ந்து நோக்கிவிட்டுப் பிறகு சிரிக்கிருள்]

**எலிசபெத்** : *நினியன், என்னைக் கேலி செய்கிறீர்கள் ஒன்றுமில்லாத விஷயத்திற்கு என்னை வேண்டுமென்றே ஆத்திரமூட்டுகிறீர்கள்,*

**நினியன்** : *இல்லை எலிசபெத், உன்னை' ஒரு அதிர்ச்சிதரும் செய்திக்குக் தயாராக்குகிறேன்; அவ்வளவுதான்; கெண்டகி பாங்குத் தலைவரின் அருமை மகள். அழகும் சீலமும் வாய்ந்தவள்; மிகப் பண்டைய ஆங்கில சீமான்களின் பரம்பரையில் பிறந்தவள் என்கிற காரணங்களுக்காக ஒரு வனிதையை மணந்து மகிழப்போகிருர் என்றல்லவா நீ நினைக்கிருய்? உன் அபிப்பிராயம் தவருனது....[மேரி டாட் பிரவேசிக்கிருள், இருபத்திரண்டு பிராயமுள்ள அவள் குட்டையானவள்; அழகு சுந்தரி; மிகமிகச் சூடிகையானவள். கதவருகில் சிறிது தயங்கி நின்று சந்தேகப் பான்மையுடன் எலிசபெத்தையும் நினியனையும் உற்று நோக்குகிருள்.]*

**மேரி** : *நீங்கள் இருவரும் எதைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?*

**நினியன்:** பசங்கள் பாடிக்கொண்டிருக்கும் பாடல்களைப் பற்றித்தான் உனது சகோதரியிடம் சொல்லிக் கொண்டிருந்தேன்.

**மேரி:** (சிறிது நிஷ்டூரமான சிரிப்புடன்) உங்களுடைய புத்தி கூர்மை இவ்வளவு வேகமாக ஓடுவது பற்றி நான் உங்களைப் பாராட்டுகிறேன், நினியன். ஆனால் என்னைப்பற்றித்தான் நீங்கள் ஏதோ பேசிக் கொண்டிருந்தாற் போலிருக்கிறதே! [தன் சகோதரியின் உறுதியைக் கண்டு சிறிது அஞ்சும் எலிசபெத்தை மேரி பார்க்கிருள்].

**எலிசபெத்:** ஆம் மேரி, நீ சொன்னதை போலத்தான் நாங்கள் பேசிக் கொண்டிருந்தோம்.

**மேரி:** அதுவும் மிகவும் தீவிரமாயப் பேசிக் கொண்டிருந்ததாக அறிகிறேன்.

**நினியன்:** நமது அருமை எலிசபெத் அநாவசியமாக பீதியடைந்திருக்கிருள்........

**எலிசபெத்:** (அவரை முறைத்துப் பார்த்து) நான் சொல்லவந்ததைச் சொல்லிவிடுகிறேன்! (மேரி பக்கம் திரும்புகிருன்) மேரி! நீ என்னிடம் உண்மையைச் சொல்லி விட வேண்டும். ஆபிரஹாம்லிங்கனை நீ மணந்து கொள்வதைப் பற்றி ஒரு கணமாவது நீ தீர்க்கமாக சிந்தித்ததுண்டா? [மேரி கண்ணில் பொறிபறக்க இருவரையும் பார்க்கிருள்]

நான் உறுதியாகக் கூறுகிறேன், மேரி! இந்த மணம் நடப்பதென்பது எளிதில் நம்பக்கூடிய விஷயமன்று, நீ வந்து அவருடைய........

மேரி: *நினியன் இந்த அருவருப்பான விஷயத்தைப் பற்றி பேசத் துவக்கி விட்டார் அவர். இந்த தீங்கான அக்கப்போரை பகிரங்கமாகக் கொணர்ந்து விட்டார், இதை நாம் அஞ்சாமல் சமாளிக்க வேண்டியதுதான். உடனே இதில் சிரத்தை எடுத்துக் கொள்வோம். உன் கேள்விக்குப் பதில் கூறுகிறேன்; எலிசபெத் நீ கேட்ட விஷயத்தைப் பற்றி தீர்க்கமாக ஆலோசித்து முடிவுக்கு வந்திருக்கிறேன். நான் லிங்கனின் மனைவியாவதற்குத் தீர்மானித்து விட்டேன்.*

*[இவ்வாறு கூறிக் கொண்டே சோபாவில் அமருகிருள்]*

*நான் அப்போதே சொல்லவில்லையா?'' என்று கூற வாயெடுத்த நினியன் சந்தர்ப்பத்தை அனுசரித்து அடக்கிக் கொண்டார். எலிசபெத் விழிவிழியென்று விழித்துப் பெருமூச்சு விட்டாள்]*

*அக்கம் பக்கத்திலுள்ள இளைஞர்களையும், சற்று வயது முதிர்ந்தவர்களையும் பற்றித் தீர ஆலோசித்தேன். அவர்களுடைய தன்மையைக் குறித்து மதிப்பிட்டுப் பார்த்*

*தேன். அவர்கள் எல்லாரையும்விட லிங்கன் தான் சிறந்தவர் என்ற தீர்மானத்திற்கு வந்து விட்டேன். ஆகவே அவரையே நான் மணம் புரிய நிச்சயித்து விட்டேன்.*

**எலிசபெத் :** *உன்னுடைய இந்த விசித்திரமான முடிவிற்காக என்னுடைய பாராட்டுக்களை நீ எதிர்பார்க்கிறாயா ?*

**மேரி :** *இல்லை பாராட்டையோ அனுதாபத்தையோ நான் கோரவில்லை.*

**எலிசபெத் :** *(திரும்பிக் கொண்டு) அப்படியென்றால் நான் ஒன்றும் தெரிவிக்கவில்லை.*

**நினியன் :** *உன்னைத் துருவித் துருவிக் கேட்பதில் என்னை மன்னித்துக்கொள் மேரி. அப்படியென்றால் உனது முடிவை நீதேர்ந்தெடுத்துள்ள கனவானுக்குத் தெரிவித்து விட்டாயா ?*

**மேரி :** *(நினையனைப்பார்த்து இளநகை புரிந்து கொண்டு) இன்னும் தெரிவிக்கவில்லை. ஆனால் இன்றுமாலை அவர் இவ்விடம் வருகிறார். அப்போது அவர் என்னை மணந்து கொள்ளும் விருப்பத்தை அடக்கத்துடன் தெரிவிப்பார். நான் அப்போது ஆச்சரியமும் வெட்கமும் குழப்பமு மடைந்தவள் போல் பாசாங்கு செய்து, அடக்கத்துடன் என் சம்மதத்தைத் தெரிவிப்பேன்.*

**எலிசபெத் :** (*பரிதாபகரமாக*), *நீ இதைப்பற்றி மிகவும் உற்சாகமாக வேடிக்கை செய்கிறாய், ஆனால் எனக்கு உன் முடிவு வேதனையும் பெரும் அதிர்ச்சியும் தருகின்றன. எனக்கு உன்னிடம் என்ன சொல்வதென்றே புரியவில்லை. நான் உன்னுடைய மூத்த சகோதரி என்ற ஹோதாவிலும் காலஞ்சென்ற நம் தாயாருக்காகவும் தந்தைக்காகவும் உனது நலனில் அக்கறை கொண்டு உன்னை நான் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்....*

**மேரி :** (*கொஞ்சம் குழைவுடன்*) *எலிசபெத், என்னை கெஞ்சியும் கேட்டுக் கொள்ள வேண்டாம். அதிகாரமும் செய்ய வேண்டாம் நான் தீர்மானித்து விட்டேன்.*

**நினியன் :** *மேரி உன் தைரியத்தை நான் மெச்சுகிறேன். ஆனால் நான் சொல்ல விரும்புவது.*

**எலிசபெத் :** *நினியன் இதைப்பற்றி விவாதிக்க வேண்டியது நானும் என் சகோதரியுந் தானே.*

**மேரி :** *நான் நினியன் என்ன சொல்கிறார் என்பதை அறிய விரும்புகிறேன்,* (*நினியனைப் பார்த்து*) *நீங்கள் என்ன கூறுகிறீர்கள்.*

**நினியன் :** *நான் உன்னை வேறொரு கேள்வி கேட்கலா மென்பதைப் பற்றித்தான் யோசிக்கிறேன்.*

**மேரி :** (*நிதானமாக*) கட்டாயம் கேட்கலாம்.

**நினியன் :** நான் உன்னுடன் சண்டை போட வில்லை யென்று நினைக்கிறேன். ஆபியின் மீது எனக்குள்ள அன்பு நிரந்தரமானது. ஆனால் அவரை நீ கணவராக வரிப்பதற்கு அவரிடம் நீ கண்ட விசேஷ குணம் என்ன என்பதை அறிய ஆவலாயிருக்கிறேன்.

**மேரி :** (*திடமாக என்ன பதில் சொல்வதென்று மேரி சற்றுத் தயங்கியவாறே,*) நினியன் அவர்களே, உங்களுக்குச் சுருக்காக நேரான விடை கொடுக்கத்தான் விரும்பு கிறேன். ஆனால் என்னால் இயலவில்லை.

**எலிசபெத் :** (*உடனே குதித்தெழுந்து*) உன்னால் முடியாது தான். கண்மூடித்தனமாய் நீ காரியம் செய்கிறாய், உனக்கு இதன் பிற்கால விளைவைப் பற்றி ஒன்றும் தெரியாது.

**மேரி :** நீ சொல்வது தவறு எலிஸ்பெத். நான் அவர் மீது கண்மூடித்தனமாக காதல் வெறிபிடித்து அலையவில்லை. லிங்கனும், இளைய லோச்சின்வாரைப் போல ஒரு மேற்குப் பிரதேசத்தினர் என்பதைத் தவிர இருவருக்குமிடையே வேறு யாதொரு ஒற்றுமையும் கிடையாது. இது வரை எனக்கு அறிமுகமானவர்களில் அவரது சுக துக்கங்களில்தான் என் மனம் பெரிதும் பங்குகொள்ள விழைகிறது.

**எலிசபெத் :** அவரோடு ஒரு பொழுதும் சந்தோஷமாக நீ வாழ முடியாது என்பதை உன்னால் அறிந்து கொள்ள முடியவில்லையா? அவரது பிறப்பு வளர்ப்பு, சூழ்நிலை, பழக்க வழக்கங்கள் குணநிசயம், குறிக்கோள் யாவுமே........?

**மேரி :** உலகத்தில் கருதப்படுவது போல் சந்தோஷகரமான திருமணத்தால் மட்டும் எனக்கு மன நிறைவு ஏற்பட்டுவிடாது. கவலையற்று சுகபோக வாழ்க்கையில் திருப்தி யடைய நான் துடிக்கவில்லை.

**எலிசபெத் :** வேலையாட்களே இல்லாத ஏழ்மையான இல்லறத்தையும், கண்ணியமான சமூகத்தினருக்கு ஏற்ற ஆடை ஆபரணம் இல்லாத வாழ்க்கையையும்தான் நீ விரும்புகின்றாயா?

**மேரி :** (உரத்த குரலில்) இதுவரை நான் வறுமையில் அடிப்பட்டதில்லை. அப்படி ஏற்பட்டால் எப்படி நான் அதை ஏற்கப்போகிறேன் என்பதைப் பற்றி இப்பொழுது சொல்ல முடியாது. ஆனால் இதுவரை நான் அனுபவித்தவைகளைவிட வறுமையையே நான் பெரிதும் வேண்டி வரவேற்கிறேன்—வாழ்க்கையில் தீரமான செயல்களை சாதிக்கும் உன்னத வாய்ப்புகள் ஏராளமாக இருக்கும் வரை, நானும் என் கணவரும் வாழ்க்கையெனும் பரந்த இன்ப வெளியை நோக்கிச் செல்லும் நெடிய பாதையில் செல்லும் வரையில் நான் வறு

மையைப் பற்றிக் கவலைப்படவே தேவை யில்லை [கடைசி மொழிகளைச் சற்றுத் தீவிரமான குரலில் அழுத்திச் சொல்லு கிருள்]

**எலிசபெத்:** சோம்பேறியான ஆபிலிங்கன் வாழ்க்கையையே ஒரு விளையாட்டாகவும் கேலியாகவும் கருதுபவன். முன்னேற் றத்தை மறந்துவிட்டு கேலி வார்த்தைகளில் ஈடுபடுபவனுயிற்றே. அவனுடன் நீ வாழ்க் கைப் பயணத்தில் எவ்வளவு தூரம் ஒற்று மையாக முன்னேற முடியப் போகிறது?

**மேரி:** (ஆத்திரத்துடன் எழுந்து) அவர் இடையே சோம்பி நின்று விடாமல் அவ்வப்பொழுது தூண்டுதல் செய்யும் உறுதி எனக்கு இருக் கும் வரை அவரும் நிற்காமல் என்றும் ஒத்து வருவார். அவரைத் தூண்டுதல் செய்து அழைத்துச் செல்லும் அளவிற்கு என்னிடம் மன உறுதி இருக்கிறது. நீ என் விஷயத்தில் என்ன எதிர் பார்க்கிருய் என்பது தெரிகிறது. நீ மணந்து கொண் டது போல நானும் நினியனைப் போன்ற ஒருவரை மணந்து கொள்ள வேண்டு மென்று விரும்புகிருய். ஆனல் அவரைப் போன்ற பலரை நான் பார்த்திருக்கிறேன். உனது மைத்துனரான அவரிடம் நான்வைத் துள்ள மரியாதையுடனே சொல்லிக் கொள் கிறேன். நான் அப்படிப்பட்ட ஒருவரை ஒரு பொழுதும் மணக்க விரும்பவில்லை; மணக்கவும் மாட்டேன். சாதாரணமாக நீ

தூய்மையான உனது வீட்டிற்குள் பொது மக்கள் யாவரும் அனுவசியமாக நுழைந்து விடாமல் காத்துக் கொள்ள சுற்றிலும் முள் வேலி போட்டுக் கொள்கின்றாய். ஆனால் உண்மையாகப் பார்க்கப் போனால் நாமே நமது குறுகிய வாழ்க்கையிலிருந்து தப்பித்து வெளியே செல்ல முடியாதபடி தடை விதித்துக் கொள்ளுகிறோமே தவிர வேறு ஒன்றுமில்லை. ஆப்ரஹாம் லிங்கனோ மற்றவர்கள் பாதுகாப்புக்கு வேலி போட்டுக் கொள்ளச் சாதகமாக தண்ட வாளங்களைப் பிளந்து கொடுத்துள்ளாரே தவிர தன்னைச் சுற்றி அவர் ஒருபொழுதும் வேலி போட்டுக் கொண்டதில்லை! அவரிடம் உள்ள தனி விசேஷம் இதுதான்.

எலிசபெத்: என்ன சொல்லுகிறாய் மேரி? பொறுப்புணர்ச்சியே சிறிது மில்லாமல் பைத்தியக்காரி போல் பேசுகின்றாயே.

மேரி: (வெறுப்புடன்) உனக்குத்தான் பைத்தியம் பிடித்திருக்கிறது என்று எண்ணுகிறேன். கஷ்டங்கள் என்பதே இல்லாமல் வசதியான சொத்து சுதந்திரங்களுடன் நிரந்தரமாக வாழ்க்கை நடத்தும் ஒரு வரை நீ மணந்து விட்டாய். உனது நிலையை மாற்றிக் கொள்ளவோ அபி விருத்தி செய்து கொள்ளவோ நீ யாதொரு முயற்சியும் செய்யவில்லை. உனது வாழ்க்கையில் முன்னேற்றம் விரும்புவதற்கு என்ன குறையிருக்கிறது என்று நீ நினைக்கின்றாய்.

தற்பொழுதைய நிலையே உன்னதமான தாக உனக்குத் தோன்றுகிறது. ஆனால் எனக்கு அப்படித் தோன்ற வில்லை? எனது கணவருக்கும் எனக்கும் புத்தம் புதியதொரு வாழ்க்கையை உருவாக்கி அமைத்துக் கொள்ளக்கூடிய சந்தர்ப்பத் தை எதிர் பார்க்கிறேன். இதைப் பொறுப் பற்ற தன்மை என்று சொல்ல முடியுமா? (வேலைக்காரி ஒருத்தி வருகிறாள்)

**வேலைக்காரி:** லிங்கன் வருகிறார், அம்மா.

**எலிசபெத்:** இதோ வாயிலில் வந்துவிட்டார்.

**மேரி:** (உறுதியுடன்) நான் அவரை எதிர் கொண்டு வரவேற்கிறேன்.

**வேலைக்காரி:** உள்ளே வாருங்கள்! (புத்தம் புதிய ஆடை அணிந்து தலையை அழகாகவாரி விட்டபடி உள்ளே வருகிறார் ஆபி)

**ஆபி:** வணக்கம் எட்வர்ட்ஸ் அம்மையே; நல் வாழ்த்து. குமாரி நினியன் அவர்களே எனது வணக்கம்.

**எலிசபெத்:** வணக்கம்.

**மேரி:** வணக்கம், லிங்கன். (இடது பக்கத்தி லிருக்கும் சோபாவில் அமருகிறாள்.)

**நினியன்:** ஆபி, உங்களைப் பார்த்ததில் மிக்க சந்தோஷம் [அந்த அறையில் இதற்கு முன் ஏதோ சூடான விவாதம் நடந்த அறி குறிகள் தென்பட்டன ஆபிக்கு. ஆயினும்

சுமுகமாக நடந்து கொள்வதற்குப் பெரிதும் முயல்கிருர்.]

**ஆபி :** நியூசேலத்தின் முதன்மையான போக்கிரியான ஜாக் ஆம்ஸ்ட்ராங்கின் மனைவியை—எனது பழைய சிநேகிதியை—வழியில் சந்திக்க நேர்ந்தது. அதனுல் தான் நான்சற்றுத் தாமதமாக வர நேர்ந்தது. ஜாக் ஆம்ஸ்ட்ராங்கைப் பற்றி உங்களுக்கு ஓரளவு தெயுந்திருக்குமே நினியன்.

**நினியன் :** (சிரித்துக் கொண்டே) ஆஹா, ரொம்பவும் நன்ருக ஞாபக மிருக்கிறது. இப்பொழுது அவர் என்ன செய்வதில் ஈடுபட்டிருக்கிருர்!

**ஆபி :** (கணப்படுப்புக்கு எதிரில் நின்று கொண்டு) இப்பொழுது அவர் நல்லமுறையில் தான் நடந்து வருகிருர். ஆனல் அவருமி மனைவி ஹன்னுதான் இப்பொழுது பயங்கரமான தொரு கஷ்டத்தில் சிக்கியிருக்கிருள். அவளது மகன் டப் கொலைக் குற்றத்திற்கு ஆளாயிருக்கிருன். நான் அவன் தரப்பில் வாதாட வேண்டுமென்று அவள் என்னைக் கோருகிருள். அவனைக் கண்டு பேசுவதற்காக சிறைச் சாலைக்குச் சென்றிருந்தேன். அவன் குற்றவாளியே தான் என்று என் மனத்திற்குப்பட்டது. கோலிகுண்டு விளையாட்டில் நான் அவனுக்குபாடம் கற்றுக் கொடுப்பது வழக்கம்.

அந்த சமயங்களில் அவனது தாயார் என் நிஜார்களைப்பழுது பார்த்துத் தருவார் அதனுல் கடந்த நாட்களை மனத்திற் கொண்டு அவனது வழக்கை நான் ஏற்று நியாயமன்றத் தீர்ப்பை அனுகூலமாக்கிக் கொள்வதற்கு என்னுல் முடிந்த மட்டும் பிரயத்னம் செய்ய வேண்டியது என்னுடைய கடமை என்று உணர்ந்தேன்.

**நினியன்:** (கொஞ்சம் கவலை நீங்கி சிரிக்கிருர்) அந்தப் பையனை விடுதலை செய்துவிடுவார்கள் இல்லையா? உங்களைப்போன்ற வழக்கறிஞர்கள் இல்லாதிருந்தால் இந்த நாடு சட்டத்திற்குக் கட்டுப்பட்டு அமைதியாக இருக்கும். சரி குழந்தைகள் இரவில் பிரார்த்தனை செய்து முடிந்தவுடன் நானும் எலிஸபெத்தும் அவளைப் பத்திரமாக படுக்க வைக்க வேண்டும். எங்களை மன்னிக்கவும், விடைபெற்றுக் கொள்கிரும்.

**ஆபி:** ஏன் அவர்களுடைய பிரார்த்தனையைக் கேட்க எனக்கும் தான் ஆசை.

**நினியன்:** வேண்டாம். நீங்கள் அவர்களைத் தூங்கவிடாமல் இரவு முழுவதும் கதை சொல்லிக் கழித்து விடுவீர்கள். வா, எலிஸபெத் நாம் போகலாம். (எலிஸபெத்துக்கு அங்கிருந்து செல்ல இஷ்டமில்லை. ஆனுல் அதைத் தவிர்க்கவும் வழி தெரியவில்லை.)

**ஆபி:** (எலிஸபெத்திடம்) எனது வாழ்த்துக்களை அவர்களுக்குத் தெரிவியுங்கள்.

**நினியன் :** நீங்கள் இங்கு வந்திருக்கிறீர்கள் என்பதையே அவர்களுக்குச் சொல்லப் போவதில்லை. தெரிந்துவிட்டால் ரொம்பவும் பரபரப்படைவார்கள்.

**எலிசபெத் :** (கடைசி முறையாக) மேரி! நீ எங்களுடன் வந்து குழந்தைகளைக் கண்டு வாழ்த்துச் சொல்லிவிட்டு வரமாட்டாயா?

**நினியன் :** மேரி வரவேண்டாம். அவள் இங்கு ஆபியுடன் சந்தோஷமாக அளவளாவிக் கொண்டு இருக்கட்டும். (எலிஸபெத்தைப் பின் தொடர்ந்து வெளியே செல்கிறார்.)

**மேரி :** (புன்னகையுடன்) குழந்தைகளெல்லாம் உங்களிடம் கொள்ளை ஆசையுடனிருப்பதால்தான் அவர்களிடம் உங்களை நெருங்கவிடாமல் நினியன் தடுத்தார் என்று தெரிகிறது.

**ஆபி :** உண்மைதான். பொதுவாக எந்தக் குழந்தைகளும் என்னிடத்தில் தனியான பற்றுதலும் ஆசையும் கொண்டுவிடுகின்றன. காரணம் நான் பேசுவது அவர்களுக்குத் தமாஷாகவும் விளையாட்டாகவும் இருக்கிறதுபோலும்.

**மேரி :** நீங்கள் குழந்தையின் சுபாவத்தை நன்கு புரிந்து கொண்டிருக்கிறீர்கள். அதுதான் முக்கிய காரணம். சரி, உட்காருங்கள் லிங்கன். (சோபாவில் தனக்குப் பக்கத்தில் அவரை உட்காரும்படி சைகை காட்டுகின்றாள்.)

ஆபி : *சரி, உட்காருகிறேன். (அவளுக்குப் பக்கத்தில் போய் உட்காருகிறுர். நீர்த்திவலைகள் நிறைந்த கண்களால் மேரி அவரைப் பார்க்கிறுள். விளக்கொளி மங்குகிறது.*

(ஐந்தாம் காட்சி முற்றிற்று)

## காட்சி ஆறு

அதே சட்ட அலுவலகம். முந்தைய காட்சிக்குப் பிறகு சில வாரங்கள் இடையே கழிந்தோடி விட்டன. புத்தாண்டு தினத்தின் பிற்பகல்.

ஆபி நாற்காலியில் உட்கார்ந்து தீர்க்க சிந்தனையில் ஆழ்ந்து எதிரேயுள்ள மேஜையை விரைத்துப் பார்த்துக் கொண்டிருக்கிறுர். தலையை தொப்பியும் மேலே நீண்ட கோட்டும் அணிந்திருக்கிறுர். கழுத்தில் சிறு குட்டை ஒன்று கட்டப்படாமல் தொங்கிக் கொண்டிருக்கிறது.

வலது பக்கத்திலிருக்கும் மேஜை மீது சாய்ந்து உட்கார்ந்திருக்கிறுர் ஜாஷ் ஸ்பீட், அவர் நீண்டதொரு கடிதத்தைத் தீவிர கவனத்துடன் படித்துக்கொண்டிடிருக்கிறுர். படித்து முடிந்தவுடன் திரும்பவும் அதை மடித்து வைத்துவிட்டுத் தரையை உற்று நோக்கியபடி ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறுர்.

ஆபி : *படித்து முடித்துவிட்டீர்களா ஜாஷ்?*

ஜாஷ் : *முடித்துவிட்டேன்.*

ஆபி : *அது சரியாக இருக்கிறது என்று உங்களுக்குப் படுகின்றதா?*

ஜாஷ்: இல்லை ஆபி. எனக்கு அது சரியென்று படவில்லை. (ஆபி மெதுவாகத் திரும்பி அவரைப் பார்க்கிறார்) இந்தக் கடிதத்தை அனுப்புவது மிகக் கொடியதவறாகும்—இது விஷயத்தில் 'மிகக் கொடிய' என்று நான் சொன்னது வெகு சாமானிய மொழிகளே; சொல்லற்கரிய அவ்வளவு குரூரமானது.

ஆபி: ஏன் நான் எழுதியுள்ளது மிகக்கொடுமையாகத் தோன்றுகிறதா? (ஆபி ஆழ்ந்த மனத்துயரத்தில்இருக்கிறார் என்பது நன்கு புலனாகிறது. ஆனால் அவர் அதை வெளிக்காட்டிக்கொள்ள விரும்பவில்லை. ஏதோ தனக்குச் சம்பந்தமில்லாத ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசுவதுபோல் பாசாங்கு செய்யப் பெரிதும் முயல்கிறார்.

ஜாஷ்: நீங்கள் உபயோகித்துள்ள வார்த்தைகளில் தப்பு எதுவும் இல்லை. சொல்லப்போனால் அவை மிகவும் பொருத்தமாகவே அமைந்துள்ளன. ஆனால் நீங்கள் அதில் குறிப்பிட்டுள்ள விஷயம்தான் வருத்தமளிப்பதாகவுள்ளது. இது சற்றும் இரக்கமேயற்ற மிருகத்தனமான செயல். உனது கௌரவத்திற்குச் சிறிதும் ஒவ்வாதது. நீ எப்படி இதுபோல் செய்யத் தீர்மானித்தாய் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

ஆபி: இதேபோல முன்பு நான் அபிமானித்ததாகக் கருதப்பட்ட ஒரு பெண்ணிடம்

இதையே செய்திருக்கிறேன். நான் செய்ததை அவளும் ஆமோதித்தாள்.

ஜாஷ்: அந்தப் பெண்ணைப்போலல்ல இவள். (ஜன்னலை நோக்கி நடந்து சென்று மறுபடி ஆபியின் பக்கம் வருகிறார்.) பெண்களும் நம்மைப்போல் பல்வேறு சுபாவம் படைத்த பிறவிகள்தான் என்ற உண்மையை நீங்கள் உணர்ந்ததாகத் தோன்றவில்லை. பெண்கள் எல்லோரும் ஒரே மாதிரியானவர்கள் தாம் என்ற தீர்மானத்தில் நீங்கள் செயலாற்றுகிறீர்கள். அது தான். இயற்கைக்கு ஒவ்வாத தீர்மானமாகும். இந்தக் கடிதம் மேரி டாட்டுக்கு எழுதியதல்ல—இது நீங்கள் உங்களுக்கே எழுதிக் கொண்டதாகும். அதிலுள்ள ஒவ்வொரு வரியும் உங்களது மனச்சாட்சிக்கு விமோசனம் அளிக்கக் கூடியதாகும்.

ஆபி: (உணர்ச்சியற்று எழுந்திருக்கிறார்) அப்படியானல் நீங்கள் எனக்காக அந்தக் கடிதத்தைக் கொண்டு மேரியிடம் கொடுக்க மாட்டீர்கள் அல்லவா?

ஜாஷ்: ஆமாம், நான் கொண்டு போய்க் கொடுக்கமாட்டேன்.

ஆபி: (கோபத்துடன்) நீங்கள் கொடுக்காவிட்டால் வேறு யார் மூலமாவது அனுப்ப முடியும்.

**ஜாஷ் :** சடங்குகளை நடத்துவதற்கு புரோகிதர் வருகையில் அவரிடம் கடிதத்தைக் கொடுத்து மணமகளிடம் கொடுத்துவிடச் சொல்லாம். ஆனல் நீங்கள் அதை மனம் சற்று சாந்தி யடையும் வரை அனுப்பமாட்டீர்கள் என்று நம்புகிறேன் ஆபி.

**ஆபி :** (வேகமாக ஜாஷின் பக்கமாகத் திரும்பி) இப்போதைய சிக்கல் வழியிலாவது முழுவதும் தீரும் வரை எனக்கு மன அமைதி என்பது எப்படி ஏற்படும்? ஏன் ஜாஷ் உனக்கென்ன கண்ணு தெரியவில்லை? நான் எப்படி நிர்க்கதியாய் நிற்கிறேன் என்பது தெரியவில்லையா?

**ஜாஷ் :** அது நன்ருகத் தெரிகிறது ஆபி, நீங்கள் நினைத்துக் கொண்டிருப்பதைவிட உங்கள் நிலை அதிக மோசமாகத் தான் உள்ளது. உண்மையிலேயே நீங்கள் நல்ல புத்திசாலித்தனமான வைத்தியரிடம் சிகிச்சைபெறவேண்டும் என்பது எனது கருத்து.

**ஆபி :** (பில்லியின் மேஜைமீது உட்கார்ந்து கொண்டு) வைத்தியரிடம் காட்டி நிவர்த்தி பண்ணிக்கொள்ளக்கூடிய கோளாறு என்னிடம் ஒன்றும் இல்லையே.

**ஜாஷ் :** டிரேக் என்ற ஒரு நல்ல வைத்தியர் இருக்கிருர், அவர் ரொம்ப நல்லவர். ஆபி, உன்னைப்போன்ற மனேவியாதி பிடித்தவர்களுக்கு வைத்தியம் செய்வதே அவருடைய விசேஷ சாமர்த்தியம்.

ஆபி : (மிக்க வேதனையுடன்) ஓ? என்னைப்பற்றி இந்த முடிவா செய்து வைத்துள்ளாய்? முன்பெல்லாம் நான் எதைச் செய்துவிடு வேன், 'என்று பயமுறுத்தி வந்தேனோ அதையே இப்பொழுது செய்துவிட்டேன். எனக்கு புத்தி மாறுட்டம் ஏற்பட்டுவிட்டது. ஜாஷ் மற்றவர்களை யெல்லாம் விட என்னை நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறாய் என்றே நம்புகிறேன். கயிற்று நுனியில் தொங்கி ஊசலாடிக் கொண்டிருக்கிறேன். இனி நான் அதை விட்டுவிட்டு கீழேவிழ வேண்டியதுதான். பாக்கி. எங்கு விழு வேன், விழுந்த பிறகு உயிருடன் இருப் பேனு என்பதெல்லாம் எனக்குத் தெரியாது ........ஆனல் இது ஒன்று மட்டும் எனக்கு நன்றாகத் தெரியும். இந்த வேதனை நிலை யிலிருந்து நான் விடுபட்டாக வேண்டும். இப்படியே நான் போய்க் கொண்டிருக்க முடியாது—இதிலிருந்து நான் விடுதலை அடைந்தாக வேண்டும்!

(ஜன்னலைப் பார்த்துக் கொண்டிருந்த ஜாஷ் திடீரென்று ஆபியின் பக்கம் திரும்புகிறார்.)

ஜாஷ் : கினியன் எட்வர்ட்ஸ் வருகிறார். அவ ரிடம் இந்தக் கடிதத்தைக் காட்டி அவரது அபிப்பிராயத்தைக் கேட்டால் என்ன?

ஆபி ; (பீதியுடன் இடைமறித்து) அவரிடம் இதைப்பற்றி யெல்லாம் ஒரு வார்த்தையும்

*சொல்லாதே! அந்தக் கடிதத்தை பைக்குள் போட்டுக்கொள். இப்பொழுது அவரிடம் இவ்விஷயத்தைப் பற்றியெல்லாம் கலந்து விவாதிக்க முடியாது.*

*(ஜாஷ் அந்தக் கடிதத்தைப் பைக்குள் போட்டுக்கொண்டு சோபாவை நோக்கிச் செல்கிறார்.)*

**ஜாஷ்:** *வாருங்கள் நினியன்.*

**நினியன்:** *தூரத்திலிருந்தே மனக்களிப்புடன் எனது புத்தாண்டு வாழ்த்துக்கள் ஜாஷ்! (அழகான நீண்ட ரோமக் கோட்டு அணிந்து வெள்ளிப் பூண்போட்ட இரண்டு பிரம்புகளுடன் உள்ளே நுழைகிறார். அந்தப் பிரம்புகளில் ஒன்றை ஒரு முரட்டுக் கம்பளிப் பையில் போட்டு வைத்திருக்கிறார் உள்ளே வந்ததும் வலதுபுறம் இருந்த மேஜையின் மேல் அதை வைக்கிறார்.)*

**நினியன்:** *சந்தோஷமான புத்தாண்டு வாழ்த்துக்கள் ஆபி—உங்கள் வாழ்க்கையில் இதுவே மிக்க மகிழ்ச்சி நிறைந்த புத்தாண்டும் கூட!*

**ஆபி:** *நன்றி. உங்களுக்கும் எனது புத்தாண்டு வாழ்த்துக்கள்,*

**நினியன்:** *(கோட்டைக் கழற்றியபடி) தங்கள் வாழ்த்துக்கள் உள்ளூர வெளிப்பட்டவையா? (குளிரால் மரத்துப் போயிருக்கும் 'தன் கைகளை உஷ்ணப்படுத்திக் கொள்*

வதற்காக கணப்படுப்பிற்கருகில் செல்கிறார்.) ஆபி, இருந்தாலும் உங்களை இன்று மன்னித்துவிடலாம். உங்களுக்கு இன்று சற்றுத் துருதுருப்பும், அச்சமும் இருக்கக் கூடும். (ஜாஷைப் பார்த்து ஜாடையாக சிரிக்கிறார்;) அட கடவுளே! இங்கு என்ன அவ்வளவு குளிராய் இருக்கிறது. நீங்கள் இந்தக் கணப்படுப்பை மூட்டுவதே கிடையாதா?

**ஆபி :** உங்களுக்கு வேண்டுமானால் அடுப்பை மூட்டிக்கொள்ளுங்கள். கரியெல்லாம் போட்டுத் தயாரர்கத்தான் உள்ளது.

**கினியன் :** (தீக்குச்சியைக் கிழித்துக்கொண்டே) சரளமாய்ப் பழகும் நிலையில் இன்று தாங்கள் இல்லையெனத் தோன்றுகிறது.

(அவர் கணப்படுப்பைப் பற்ற வைக்கிறார்)

**ஜாஷ் :** காலநிலை அவரைச் சற்று பாதிக்கிறது, ஆபி.

**கினியன் :** ஆமாம். அப்படித்தான் தோன்றுகிறது. ஏதோ சவ ஊர்வலத்தில் கலந்துகொண்டவர்போல் காட்சியளிக்கிறார்.

**ஆபி :** நான் ஒரு சாவுச்சடங்கில் கலந்து கொள்ளத்தான் போயிருந்தேன்....

**கினியன் :** (அவரது வார்த்தையில் நம்பிக்கையில்லாமல்) என்ன? உங்கள் திருமண நாளன்று ஒரு சாவுச்சடங்கா?

**ஜாஷ் :** ஆபியின் நீண்ட நாளைய நண்பர் பௌலிங் கிரீனின் சவ அடக்கம் இன்று காலை நடந்தது.

**நினியன் :** (அதிர்ச்சியுற்று) இந்தச் செய்தி என்னைப் பெரிய துக்கத்தில் ஆழ்த்துகிறது. நான் முதலில், நான் அதை அறிந்து கொள்ளாமல் இருந்ததற்கு நீங்கள் என்னை மன்னிப்பீர்களென்று நம்புகிறேன்.

**ஆபி :** பரவாயில்லை நினியன், அதனலென்ன !

**நினியன் :** ஆபி, நீங்கள் அந்தச் சவச்சடங்கில் கலந்து கொண்டது பற்றி நான் மகிழ்ச்சி அடைகிறேன். நீங்கள் அங்கு சென்றிருந்தது அவரது குடும்பத்தினருக்கு பெரும் ஆறுதலை அளித்திருக்கும்.

**ஆபி :** என்னல் யாருக்கும் ஆறுதல் ஏற்படவில்லை. இறந்து போனவரைப் பற்றிப் புகழ்ந்து பிரசங்கம் செய்ய வேண்டுமென்று அங்கிருந்த எல்லோரும் கேட்டுக் கொண்டார்கள். நானும் முயன்று பார்த்தேன்—என்னல் ஒரு வார்த்தைகூட பேச முடியவில்லை. இறந்துபோன சவமோ ஒரு மிகக் கொடிய காட்சி. அதன் மீது வக்கணையான மொழிகளை வாரிகொட்டி சொற்பொழிவாற்றும்படி என்னை • ஏன் எதிர் பார்த்தார்களோ! ஒரு வேளை பௌலிங் கிரீனின் ஆத்மா சாந்தியடைய அப்படிப்பட்ட புகழுரைகள் தேவையென நினைத்தார்களா! என்னைப் பொறுத்த

வரையில் அவர் ஒரு நேர்மையானவர், நல்லவர்—நான் அவரைப் பெரிதும் நேசித்தேன்—அவரோ இப்போது இறந்து விட்டார்.

**கினியன்:** அப்படியானல், இம்மொழிகளையே அப்போது சொல்லியிருக்கலாமே.

**ஆபி:** (எழுந்து நின்றபடியே) அவர்கள் என்னை ஒரு பிரசங்கம் அல்லவா செய்யச் சொன்ஞர்கள்.

**கினியன்:** மேரிக்கும் தங்களுக்கும் நடைபெறப் போகும் மங்கள நிகழ்ச்சியை முன்னிட்டு தங்கள் மனதில் எந்தக் கிலேசம் இருந்தாலும் அதை அகற்றும்படி தங்களைக் கோருவதற்கு முன் வந்திருப்பாரே. உங்களைப் போன்ற இரண்டு நல்ல தம்பதிகள் மணம் புரிந்து கொள்வதைக் கண்டு ஆனந்திக்கக் கொடுத்துவைக்காமல் நமது வயோதிக நண்பர் பாவம் இறந்துவிட்டார். (அவர் விவாக சம்பந்தமான விஷயங்களைக் கூறுவதற்கு முன் தனது பேச்சில் ஒரு குதூகலத்தை ஏற்படுத்திக் கொள்கிருர்.) பூஜ்யர் டிரெஸ்ஸரிடம் பேசி நான் எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டேன். எலிசபெத் தடபுடலான கல்யாண விருந்து ஒன்று தயார் செய்துகொண்டிருக்கிருள். விவாகச் சடங்கெல்லாம் யாதொரு கஷ்டமின்றி நல்லமுறையில் நடந்தேறுமென்று நீங்கள் திண்ணமாக நம்பலாம்.

*[பில்லி ஹெறர்ன்டான் உள்ளே வருகிறார். அவர் தன் கோட்டுப் பைக்குள் ஒரு புட்டி வைத்திருக்கிறார். குடித்திருந்ததால் சற்று மயக்க நிலையில் இருக்கிறார். மிக உணர்ச்சி வசமாகப் பேசுகிறார்.] ஏ பில்லி! புத்தாண்டு வாழ்த்துக்கள்!*

**பில்லி :** *உங்களுக்கும் எனது வாழ்த்துக்கள்! மிஸ்டர் எட்வர்ட்ஸ். [அவர் மது புட்டியை மேஜையின் மீது வைத்து விட்டு தனது கோட்டைக் கழற்றுகிறார்.]*

**நினியன் :** *ஆபி, நான் உங்களுக்கு கல்யாணப் பரிசு ஒன்று கொண்டு வந்துள்ளேன். முதன் முதலில் நீங்கள் மனைவியுடன் வெளியே வரும்போது சற்று கம்பீரமாக காட்சியளிக்க விரும்புவீர்கள் என நினைக்கிறேன். என்னுடையதை லூயிஸ்வில்லியில் எங்கு வாங்கினேனே அதே இடத்திலிருந்தே இதுவும் வந்துள்ளது. [அவர், தான் கொண்டுவந்த பிரம்புகளில் ஒன்றை எடுத்து பெருமையுடன் ஆபியிடம் கொடுக்கிறார். ஆபி அதை எடுத்துக் கொண்டு உற்றுப்பார்க்கிறார்.]*

**ஆபி :** *இது மிக அழகாக இருக்கிறது நினியன். உங்களுக்கு என்து நன்றி. [அவர் பிரம்பை எடுத்துக் கொண்டுபோய் தன் இடத்தில் அமருகிறார்.]*

**நினியன் :** *மேரிக்கு எப்பொழுதுமே அழகாகத் தோற்றமளிப்பதில் ஆசை உண்டு.*

அதை கருத்தில் கொண்டு தான் நான் இந்தப் பிரம்பை உங்களுக்கு கொண்டு வந்து கொடுத்துள்ளேன். இது சம்பந்த மாக நான் அந்தரங்க விஷயங்களை எடுத் துக் கூறவேண்டி யிருப்பதற்காக என்னை பில்லியும், ஜா ஷூம் மன்னிப்பார்கள் என்று கருதுகிறேன்.

**பில்லி :** இங்கிருந்து நான் செல்லவேண்டு மென்றுவிரும்பினுல் தாராளமாகப் போய் விடுகிறேன்....

**நினியன் :** தயவு செய்து வேண்டாம் பில்லி— ஆபியின் சிநேகிதர்களில் ஒருவராகவே நான் அவரிடம் ஓரிரு வார்த்தைகள் பேச விரும்புகிறேன். அவரது திருமணத்திற்கு முன் தனித்துப் பேசுவதற்கு எனக்குக் கிடைக்கக்கூடிய கடைசி வாய்ப்பு இது ஒன்றுதான். மேலும் மணந்துகொள்ளப் போகும் பெண் எனது மைத்துனி என்ப தனுல் வேறு இந்த திருமணத்தை வெற்றி கரமாக முடிப்பதில் சற்று அதிகமான பொறுப்பை ஏற்படுத்தியுள்ளது. [ஆபியை எதிர்நோக்கித் திரும்புகிருர்.] இது வெற்றி யாகவே முடியும் ஆபி. இந்த மண வாழ்க்கை வெற்றிகரமாக நடைபெறுவ தற்கு ஒரு முக்கிய விஷயத்தைத் தாங்கள் மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அவளுடைய ஆசைகளுக்கெல்லாம் இடம் கொடுக்காமல் அவளை அடக்கியாளவேண் டும். சிறு குழந்தையாக இருக்கையிலேயே

அவள் ஆடம்பரமான வாழ்க்கையைப்பற்றிப் பிரமை கண்டிருக்கிறாள் என்று என் மனைவி சொல்கிறாள்—தன்னை மணந்து கொள்பவர் ஐக்கிய அமெரிக்காவின் ஜனாதிபதியாக இருப்பார் என்று அவள் எல்லோரிடமும் முன்கூட்டியே கூறிவந்துள்ளாள். [அவர் ஜாஷின் பக்கம் திரும்புகிறார்.] இந்த நாட்டிலுள்ள ஒவ்வொரு சிறு பையனும் என்றாவது ஒரு நாள் ஜனாதிபதியாகத் திட்டமிடுகிறான். ஒவ்வொரு சிறுமியும் அவரைக் கல்யாணம் செய்துகொள்ளத் திட்டமிடுகிறாள். [மறுபடியும் ஆபியை நோக்கி] ஆனால் மேரியோ அப்படி இளவயதில் கண்ட கனவுகளையெல்லாம் மறக்காமல் இருக்கிறாள். அதனால் தான் நான் உங்களை ஜாக்கிரதையாக இருக்கச் சொல்கிறேன். எந்தவிதமான தீரம் நிறைந்த போராட்டங்களிலோ அல்லது முட்டாள்தனமான பேராசைகளிலோ உங்களை ஈடுபடும்படி அவளைப் பேசவிடவேண்டாம். கடவுள் அவளை எந்த ஆஸ்திபாஸ்திகளுக்கு உரிமையுள்ளவளாகப் பிறக்கச் செய்திருக்கிறாரோ அத்தோடு திருப்தியடையக் கற்றுக்கொள்ளச் செய். இத்தோடு நான் எனது புத்திமதிகளை நிறுத்திக்கொள்கிறேன். [தனது கோட்டின் பித்தான்களைப் போட்டுக்கொள்கிறார்.] உங்கள் எல்லோரையும் மறுபடியும் ஐந்து மணிக்குச் சந்திக்கிறேன். அதற்குள் ஆபிக்கு அழகான ஆடை அலங்காரங்கள்

அணிவித்து கவர்ச்சிகரமாகத் திகழச் செய்யுங்கள்.

**ஜாஷ்:** வணக்கம், நினியன். [நினியன் வெளியே போகிறார். ஆபி—மறுபடியும் மேஜைப் பக்கம் திரும்பி விரைத்துப்பார்த்துக் கொண்டிருக்கிறார். பில்லி மது புட்டியை யையும் ஒரு கோப்பையையும் தன் மேஜை யிலிருந்து எடுத்து அதில் மதுவை நிறைய ஊற்றிக்கொள்கிறார். அந்தக் கோப் பையை ஆபியை நோக்கி உயர்த்துகிறார்.]

**பில்லி:** லிங்கன் உங்களுக்கும், உங்களுக்கு மனைவியாகப்போகும் பெண்மணிக்கும் நல் வாழ்வையும், சந்தோஷத்தையும் வேண்டி இந்த கோப்பை மதுவை அருந்த என்னை அனுமதிக்கவேண்டுகிறேன். [ஆபி அதற்கு பதிலே சொல்லாமல் இருக்கிறார். பில்லி கோப்பை மதுவைக் குடித்துவிட்டு அதை மேஜைமேல் வைக்கிறார்.] எனது வாழ்த் துக்களை நீங்கள் ஏற்றுக்கொள்ள விரும்ப வில்லை. காரணம் அவை உண்மையா னவை அல்ல என்று நீங்கள் நினைப்பது தான். நீங்கள் இந்த விவாகத்தைப்பற்றி மேற்கொண்ட முடிவைக் கேட்டு வருந்தி னேன் என்பதை ஒத்துக்கொள்கிறேன். இந்தத் திருமணத்தின் மூலம் நீங்கள் உங் களையே தாழ்மைபடுத்திக் கொள்கிறீர் கள்—ஏதோ ஒரு உயர் குடும்பத்தின் சம் பந்தத்திற்காக நீங்கள் உங்கள் கௌரவத் தையே பணயம் வைத்துவிட்டீர்கள் என்று

நான் நினைத்தேன். அப்படி நினைத்ததற்காக உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள விரும்புகிறேன்..........

ஆபி: எந்தவித மன்னிப்புக் கோருதலும் தேவையில்லை.

பில்லி: நானும் குமாரி டாட்டும் ஒரு நாளும் சௌஜன்யமாகப் பழக முடியும் என்று நினைக்க முடியவில்லை. ஆனால் எங்கள் இருவரது குறிக்கோளும் ஒன்றுதான் என்பதை இப்பொழுது புரிந்துகொண்டு விட்டேன். அதுவும் குறிப்பாக அவளது மைத்துனர் வெளியிட்ட எச்சரிக்கைகளுக் களுக்குப் பிறகு நன்கு தெளிவாகிவிட்டது. [நினியனைப் பற்றிய அவரது அபிப்பிராயத்திற்கு ஒரு அளவு வெறுப்பே காரணம்.] நீங்கள் மிகப் பெரும்பதவிக்கு உயர வேண்டுமென்கிற பேரவா உண்மையில் அவளுக்கிருக்குமானல் அதைக் சாதிக்கும் பொருட்டுத் துங்களை இடையருது நச்சரித்துக்கொண்டே யிருப்பாள். கடவுளே அவளை வாழ்த்தித் தேவையான பலத்தைக் கொடுத்து ஆதரிக்கட்டும்! என்றுதான் நான் சொல்லமுடியும். [இவையனைத்தையும் அவர் ஆபியின் முதுகுப்புறத்தைப் பார்த்தபடியே சொல்லிவிடுகிருர். பில்லி மறுபடியும் கோப்பையில் மதுபானத்தைக் கொட்டிக்கொள்கிருர். ஆபி அவர் பக்கம் திரும்பிப் பார்க்கிருர்.

ஆபி: அந்த புட்டியில் இருந்ததையெல்லாம் இன்று நீங்கள் குடித்துவிட்டீர்களல்லவா?

பில்லி: இந்த புட்டியா?—ஆமாம் குடித்துவிட்டேன்.

ஜாஷ்: ஏன் குடிக்கக்கூடாது—இன்று புத்தாண்டு தினம்!

பில்லி: [ஜாஷைப் பார்த்தபடியே] ஸ்வீட், உங்களுக்கு நன்றி. எனக்காகப் பரிந்து பேசியதற்கு உங்களுக்கு நன்றி. மற்றும் ஒரு வாழ்த்துக் கூறி குடிப்பதற்கு நீங்கள் அனுமதிக்கவேண்டும். [ஆபியை நோக்கி ஒரு அடி எடுத்து வைத்து] அமெரிக்க ஜனாதிபதிக்கும் திருமதி லிங்கனுக்குமாக [அவர் குடிக்கிறார்]

ஆபி: [கோபக் குறியுடன்] பில்லி! இனி வாழ்த்துக் கூறிக் குடிக்கும் வேலை இருக்காது என நினைக்கிறேன்.

பில்லி: ஆமாம், ஆமாம்! விவாகம் முடிவதற்கு முன் இதுதான் கடைசி தடவை. அதன் பிறகு எட்வர்ட்ஸ் தம்பதியினர் நமக்கு மிக்கவிலை உயர்ந்த மது வகையை அளிப்பார்கள் என்பது திண்ணம். அப்பொழுது நான் அமைதியாக நடந்து கொள்வேனோ, மாட்டேனோ என்ற அச்சம் உங்களுக்கு எழக்கூடும். சந்தேகம் வேண்டாம். அங்குள்ள பிரபலஸ்தர்களுக்கு மத்தியில் நான் மிக நேர்த்தியாக நடந்து கொள்வேன்!

ஆபி: திருமணமே நடக்கப் போவதில்லையே. (பில்லி அவரை வெறிக்கப் பார்த்துவிட்டு பிறகு ஜாஷ்ஷை திரும்பிப் பார்க்கிறார். மறுபடியும் ஆபியையே பார்க்கிறார்.) குமாரி டாட்டிடம் கொடுப்பதற்காக ஒரு கடிதம் எழுதிவெத்துள்ளேன். அதைநீங்கள் அவனிடம் சேர்ப்பித்து விடவேண்டும்.

பில்லி: என்ன கடிதம்? அதில் என்னஉள்ளது?

ஆபி: ஜாஷ், அந்தக் கடிதத்தை அவரிடம் கொடுங்கள். [ஜாஷ் தனது பையிலிருந்து கடிதத்தை எடுத்து, காணப்படுப்பில் போடுகிறார்! (அதைக்கண்டு ஆபி துள்ளிக் குதிக்கிறார்.) அதை அப்படி அடுப்பில் போடுவதற்கு உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது?

ஜாஷ்: எனக்கு யாதொரு உரிமையும் கிடையாது என்பது தெரியும் ஆனாலும் நான் செய்து விட்டேன். (ஆபி ஜாஷ்ஷையே கோபமாக விரைத்துப் பார்த்துக்கொண்டிருக்கிறார்.) ஏதோ என் கழுத்தையே முறித்துப் போட்டு விடுவதுபோல் என்னையே விரைத்துப் பார்க்காதீர்கள். அப்படியும் உங்களால் செய்ய முடியும்-ஆனால் நீங்கள் செய்யமாட்டீர்கள் (ஜாஷ் பில்லியின் பக்கம் திரும்புகிறார்) அந்தக் கடிதத்தில் தன்னை விடுதலை செய்துவிடும் படிகுமாரி டாட்டுக்கு லிங்கன் எழுதிக் கேட்டிருந்தார். தவறுதலாக அதற்கு முன்பெல்லாம்

அவளிடம் ஆசை கொண்டிருந்ததாகச் சொல்லிவந்ததாகவும் அதில் குறிப்பிட்டிருந்தார். தங்கள் இருவருக்குமே முடிவற்ற வேதனையையும், கஷ்டத்தையும் அளிக்கக் கூடிய திருமணத்தை ஏற்றுக்கொள்ள இயலாது என்றும் குறிப்பிட்டிருந்தார்.

ஆபி: (ஆழ்ந்த துக்கத்துடன்) அது உண்மையில்லா விட்டால் பிறகு எதுதான் உண்மை?

ஜாஷ்: அது உண்மையல்லவென்று நான் மறுத்துச் கூறவில்லை. ஆனல் இதையெல்லாம் அவளிடம் நேரிலேயே சொல்லுங்கள் என்றுதான் கேட்டுக் கொள்கிறேன். அதுதான் ஆண்மைக்கு அழகு.

ஆபி: அப்படிச் செய்வது இன்னம் அதிகக் கொடுமையாக இருக்கும். அவள் மனத்தைப் பெரிதும் புண்படுத்திவிடும். ஆனல் இவற்றையெல்லாம் கடிதத்தில் பச்சையாக்கிவிடாமலும் இருக்க முடியவில்லை. அப்படியும் பயங்கரமான உண்மைகள் எதையும் கடிதத்தில் குறிப்பிட்டுவிடவில்லை (மிக உணர்ச்சி வசமாகப் பேசுகிருர்.) அவளுடைய பேய்த்தனமான பேராசைகளை நான் வெறுக்கிறேனென்று அவளுக்குத் தெரிவித்தேயாக வேண்டியிருந்தது. வாழ்க்கையில் என்னையாரும் முன்னேக்கி விரட்டிச் செலுத்துவதை நான் விரும்பவில்லை. அவளது சாட்டை அடிகளுக்கெல்லாம் பணிந்து ஓடுவது என்பது என்னல் முடியாது. வாழ்க்கை

யில் பிராமுக்யத்துவத்தை அடைய அவள் பெரிதும் ஆசைப் படுவாளேயானல் அதற்கு ஸ்டீபன் டக்ளஸ்ஸையே மணந்து கொள்ளட்டும். அவரும் உன்னதமான வாழ்க்கையில் பேரவாக் கொண்டவர் தாம். என்னை இப்படியே தனியாளாக விட்டுவிட்டால் அதுவே எனக்குப் போதும் (அவர் மறுபடியும் உட்கார்ந்து மேஜை மீது சாய்ந்துகொள்கிருர்.)

ஜாஷ்: (கசப்புடன்) சரி அப்படியே செய்யுங்கள். இவற்றையெல்லாம் அவளிடமே சொல்லி விடுங்கள். அவளிடம் தங்களுக்கு இருந்த ஆசை தணிந்துவிட்டது என்று எழுதி அவளைத் கைவிடுவதைவிட அவளை மணந்து கொள்ள பயப்படுகிறீர்கள் என்பதை நேரிலேயே ஒப்புக்கொள்வது மிகவும் மரியாதையான செயல் ஆகும். (இந்த சம்பாஷணையில் தானும் கலந்து கொள்ள வேண்டும் என்று பில்லி மிக்க ஆவலுடன் குடித்துக்கொண்டிருக்கிருர். இப்பொழுது அவரும் குறுக்கிடுகிருர்.

பில்லி: நான் எனது அபிப்பிராயத்தைச் சொல்லலாமா?

ஆபி: நீங்கள் ஏதோ நல்ல யோசனை கூறப் போகிறீர்கள் என்றே நான் நினைக்கிறேன்.

ஜாஷ்: நீங்கள் என்ன சொல்லப் போகிறீர்கள் பில்லி?

**பில்லி :** (காரசாரமாக) லிங்கன், நான் சொல்ல விரும்புவது இதுதான். நீங்கள் அடியோடு மேரியை வெறுத்து ஒதுக்கி விடவில்லை. நீங்கள் அவளை ஒரு தியாகம் செய்யும் பொருளாகத்தான் உபயோகிக்கிறீர்கள். அதன் சீரிய கடமையை நீங்கள் செய்யத் தவறியதற்காக கடவுளின் மன்னிப்புக் கிட்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள்.

**ஆபி :** ஆமாம் அது நான் செய்யவேண்டிய சிறந்த கடமைதான். ஒவ்வொருவரும் அதைப்பற்றி எனக்கு ஞாபகமூட்ட வேண்டுமென்று உணர்கிறார்கள். ஆனால் அந்தக் கடமைதான் என்னவென்பதை ஒருவராலும் எனக்குச் சொல்ல இயல வில்லை.

**பில்லி :** (கண்களில் நீர் ததும்ப) அதை என்னால் சொல்ல முடியும். அமெரிக்கன் என்று சொல்லிக் கொள்ளும் ஒவ்வொருவரது கட மையும் என்னவென்று என்னால் சொல்ல முடியும். அதாவது, முன்பு எவை பிரத்தி யட்ச சித்தமான உண்மைகள் என்று கரு தப்பட்டனவோ அவற்றை நிலை நிறுத்த வேண்டும். இதன் விளக்கம் : எல்லா மனி தர்களும் சரிசமானமாகவே படைக்கப்பட் டிருக்கிறார்கள் இயற்கையாய் அமைந்த சில உரிமைகள் அவர்களுக்குண்டு ; அவற்றை அவர்களிடமிருந்து பறிக்க முடியாது. உயிர் வாழும் உரிமை, சுதந்திரம், இன்ப கிளர்ச் சியை நாடுதல் அவற்றில் அடங்கியவை.

ஆபி: (கோபமாக) அந்த உரிமைகள் எனக்கு மட்டும் மறுக்கப்பட்டு விட்டனவா என்ன?

பில்லி: இருபது லட்சம் நம் சகோதர மக்கள் இந்நாட்டில் அடிமைகளாக வாழ்கிறார்கள். என்ற கொடூரமான உண்மையை நீங்கள் ஐயமின்றி உணர்ந்து இருக்கும் போது மேற்கூறிய உரிமைகளை உங்களால் எப்படி அனுபவிக்கமுடியும்? உங்களது மேஜை மீதிருக்கும் கொடியில் காணும் பத்து நட்சத்திரங்களும் தங்கள் ராஜ்யத்து அடிமைகளின் மீது உள்ள சொத்து உரிமைகளை விட்டுக் கொடுக்க மறுத்து ராஜ்யங்களின் ஐக்கியத்தையே குலைக்கத் தயாராக இருக்கும் பத்து ராஜ்யங்களைக் குறிப்பிடுவனவாகும். எதிர்காலத்திய ராஜ்யங்களின் கதி என்ன? பசிபிக்மஹா சமுத்திரத்தின் ஓரமாக இருக்கும் மேற்கு ராஜ்யங்கள் சுதந்திரமான பிரஜைகள் வாழும் நாடாக இருக்குமா? இந்தக் கேள்விக்குத்திருப்திகரமான பதிலையா நீங்கள் சொல்லுகின்கின்றீர்கள்? அங்கே யிருப்பது உங்களது கொடி. அதைப் பார்த்து நீங்கள் பெருமிதம் கொள்கிறீர்கள், லிங்கன். ஆனல் அந்தக் கொடி சிறு துண்டு துண்டுகளாகக் கிழிக்கப்படாமல் காப்பாற்றப்படுவதற்காக நீங்கள் என்ன செய்கிறீர்கள்? (ஆபி குதித்து எழுந்து உணர்ச்சிவசமாயிருப்பினும், ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு ஆவேசத்துடன் பேசுகிறார்)

ஆபி : நான் எனது காரியத்தில் மட்டுமே கவன மாக இருந்து வருகிறேன். இது தான் நான் செய்வது. இதுபோல் எல்லோரும் செய்தால் இந்த ஐக்கியக் கூட்டமைப்புக்கு யாதொரு அபாயமும் இருக்காது. அடி மைத் தனத்தை வெறுத்து தர்ம நியாயம் எடுத்துக் காட்டுகிறவர்களின் பேச்சுக் களைக் கேட்டுக்கேட்டு எனக்கு மனம் அலுத்துப்போய்விட்டது. நீங்கள் குறிப் பிட்ட சொத்து உரிமைகளெல்லாம் அரசி யல் சட்டத்தில் திட்டவட்டமாக அளிக்கப் பட்டுள்ளன என்பதை சட்டங்களைப் பற்றி அதிகம் தெரிந்து கொள்ளும் வகையில் நீங்கள் புரிந்து கொள்வீர்கள். அந்த அர சியலமைப்புச் சட்டத்தின்படி அரசாங்கம் நடக்க முடியாவிட்டால் அது வீழ்ந்து மடி யட்டும்!

பில்லி : அரசியலமைப்புச் சட்டத்தில் இடி விழட்டும்! உயிரோடு வாழ்பவர்களுக்கு உரிய அடிப்படையான சுதந்திர உரிமை களைப் பற்றிய விஷயம் இது. இவை அரசியலமைப்புச் சட்டத்தைவிட மிக முக் கியமானவை. இந்த உரிமைகளைச் சட்டம் மறுக்குமாயின் அந்தச் சட்டமே தவறாகும். பிறகு நேர்மையான வழிகளின் மூலமோ, அல்லது பலாத்காரத்தின் மூலமோ அது மாற்றியமைக்கப்பட வேண்டும்! சுதந்திரத் தைப் பாதுகாக்கும் செயலில் எந்தவித வழி முறைகளும் நேர்மையானவைகளா

கவே கருதப்படும். இதை உலகத்திலுள்ள வர்களில் எவருமே உன்னைவிட நன்றாகத் தெரிந்து கொண்டிருக்க மாட்டார்கள். நீங்கள் எலிஜா லவ்ஜாயின் ஞாபகார்த்த மாகவும் மற்றபடி அதே லட்சியத்திற்காக உயிர் நீத்தவர்களின் ஞாபகத்தையும் பெரிதும் போற்றி மரியாதை செய்கிறீர் கள், லிங்கன்.

ஆபி : (அவனிடத்திலிருந்து வேறு புறமாகத் திரும்பிக் கொண்டு) ஆம்-நான் அவர்களை மதிக்கிறேன். பாராட்டுகிறேன் — அவர் களைப் பற்றிப் பொறாமைப்படுகிறேன். காரணம், அவர்கள் மேற்கொண்டிருந்த லட்சியங்களுக்காக உயிரையும் தியாகம் செய்யலாம் என்ற நம்பிக்கை கொண்டிருந் தனர். (அவர் ஜாஷ்ஷின் பக்கம் திரும்பி அளவற்றதொரு சலிப்புடன் பேசுகிறார்) அப்படியானால் சரி, ஜாஷ்—நான் இப் பொழுதே மேரியிடம் சென்று நேரில் பேசப் போகிறேன். அதன் பிறகு அங் கிருந்து எங்காவது சென்றுவிடப் போகி றேன்........

ஜாஷ் : எங்கே போகப் போகிறீர்கள், ஆபி ?

ஆபி : (மந்தமாக) எனக்கே தெரியாது. அவர் வெளியே செல்லுகையில் பின்னால் கதவை யும் மூடிச் செல்கிறார். ஒரு கணத்திற்குப் பிறகு, பில்லி வேகமாகச்சென்று கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து ஆபி யைக் கூவியழைக்கிறார்.)

**பில்லி :** லிங்கன் நீங்கள் இந்த இடத்தைவிட்டே போய் விடப்போகிறீர்களா? விண்ணுலகத்தில் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பது எவ்வளவு உண்மையோ அப்படியே நீங்களும் கடவுளுக்கு ஆற்ற வேண்டிய உங்களது கடமைகளிலிருந்தும், நாட்டு மக்களுக்கு ஆற்றவேண்டிய கடமைகளிலிருந்தும், உங்களது அழிவற்ற நித்யமான ஆத்மாவுக்குச் செய்ய வேண்டிய கடமைகளிலிருந்தும் நீங்கள் தப்பி ஓடுகிறீர்கள் என்பது உண்மையாகும்!

**ஜாஷ் :** " (பில்லியைக் கதவுக் கருகிலிருந்து உள்ளே இழுத்தபடியே) பில்லி, பில்லி— அவரைத் தனியாக விட்டு விடுங்கள். அவர் மனம் நொந்திருக்கிறார்.

**பில்லி :** (மேஜையருகில் உட்கார்ந்தபடி) ஸ்பீட், அவருக்காக நாம் என்ன செய்யலாம்? என்ன செய்ய முடியும்? (பில்லி கண்ணீர் வடிக்கிறார்.)

**ஜாஷ் :** எனக்குத் தெரியவில்லை, பில்லி, (அவர் ஜன்னலுக்கு அருகில் சென்று வெளியே பார்க்கிறார்) அவரது மனதிற்குள் ஒரு பெரும் புயல் வீசுவதால் தான் அவர் நீண்ட நாட்களுக்குத் தனியாகச் சென்றிருக்க விரும்புகிறார். பாவம் அந்தச் சிறுமி ஆன்ரட்லெட்ஜ் இறந்த பிறகு செய்ததுபோலவே இப்போதும் செய்ய நினைக்கிறார். அவர் இங்கிருந்து பரந்த புல் வெளியே அடைந்து அங்கு அலைந்து

*திர்வார். பிறகு, தான்வந்த காட்டை நோக்கித் தட்டுத்தடுமாறி திரும்பிச் செல்லுவார். அவருக்காக நாம் செய்யக் கூடியது ஒன்றுமில்லை, பில்லி. அதை அவரேதான் செய்து கொள்ளவேண்டும்.*

**பில்லி :** *(உருக்கத்துடன்) கடவுள்தான் அவருக் குத் துணையிருக்க வேண்டும்!*

(ஆறுவது காட்சி முற்றிற்று)

## காட்சி 7

நியூ சேலத்திற்கு அருகாமையில் உள்ள புல் வெளி, முதல் காட்சி நடந்து ஏறத்தாழ இரண்டு ஆண்டு காலத்திற்கு பிறகு ஒருநாள் குளிர்ந்த மாலை வேளை. நிலவொளி வீசிக் கொண்டிருக்கிறது.

புல் வெளியின் மத்தியிலே குளிர்காய தீ மூட்டப் பட்டிருக்கிறது. அதைச் சுற்றிலும், சாமான்கள் வைக்கும் மரப் பெட்டிகளும், கம்பளிப் போர்வைகளும் ஒரு பழைய தகரப் பெட்டியும் இருக்கின்றன. அதற்குப் பின்னால் மூடுபோட்ட சுமை வண்டி ஒன்று ஒரு மூலையில் நிற்கிறது. அதற்குப் பின்னால் திறந்து இருக்கும் பகுதி அவையோர்களுக்கு நன்றாகத் தெரி யும்படி இருந்தது.

ஸெத்கேல் தனது ஏழுவயது பிள்ளையைக் கையில் பிடித்துக்கொண்டு நெருப்பிற்கு அருகில் நிற் கிறார். அந்தப் பையனுக்கு ஒரு கம்பளி போர்க்கப்பட் டிருக்கிறது.

**ஜிம்மி :** நெருப்பிற்கருகில் நிற்க நான் விரும்ப வில்லை அப்பா. உடம்பெல்லாம் எரிகிறது. என் மீது உள்ள கம்பளியை எடுக்கமாட்டீர் களா அப்பா?

**ஸேத் :** வேண்டாம் அப்பா, போர்த்திக் கொண்டிருந்தால் உனக்கு உடம்புக்கு ஒன்றுமில்லாமல் இருக்கிறது.

**ஜிம்மி :** எனக்குக் கொஞ்சம் தண்ணீர் வேண்டும் அப்பா? சிறிது தண்ணீர் கிடைக்காதா?

**ஸேத் :** கிடைக்கும் பேசாமல் இரு ஜிம்மி! உனக்காக கோபே தண்ணீர் கொண்டு வருகிறார். [அவர் வலது பக்கம் திரும்பிப் பார்க்கிறார். ஜாக் ஆம்ஸ்ட்ராங்க் வரு கிறார்] வா! ஜாக், நீ எங்கே காணமற் போய்விடுவாயோ என்றுதான் நான் பயப்பட்டுக் கொண்டிருந்தேன்.

**ஜாக் :** [உள்ளே வந்தபடி] நியூ சேலத்தைச் சுற்றி எங்குபோனாலும் நான் காணமற் போய்விடமாட்டேன். பையன் எப்படி இருக்கிறான்?

**ஸேத் :** [ஜாக்கை ரொம்ப ஜாக்கிரதையாகப் பார்த்தபடி] அவனா? அவனுக்கு இப் பொழுது சற்றுத் தாகமாக இருக்கிறது. நீங்கள் ஆபியைச் சந்தித்தீர்களா?

**ஜாக் :** பார்த்தேன்—ஆனால் சற்று நேரம் பிடித்தது. ஏனெனில் அவர் நதிக்கரைக்கு அப்பால் உள்ள பழைய இடுகாட்டில் ஆன்ரட்லெஜ் புதைக்கப்பட்ட கல்லறை யைப் பார்க்கச் சென்றிருந்தார்.

**ஸெத் :** அவர் இங்கு வருகிறாரா?

**ஜாக் :** வின்செஸ்டர் சாலையில் வசிக்கும் டாக்டர் சாண்ட்லரைப் போய் அழைத்து வருகிறேன் என்று சொன்னார். சிறிது நேரத்தில் வந்து விடுவார். [அவர் ஜிம்மியிடம் வருகிறார்] எப்படி இருக்கிறாய் ஜிம்மி?

**ஜிம்மி :** நான் எரிந்து கொண்டிருக்கிறேன்........ [ஆக்கி அங்கு வருகிறாள், ஜாக்கைப் பார்க்கிறாள்.]

**ஆக்கி :** அட, நீங்கள் திரும்பவும் வந்துவிட்டதைப் பார்க்க எனக்குச் சந்தோஷமாக இருக்கிறது மிஷ்டர் ஆர்ம்ஸ்ட்ராங்.

**ஜாக் :** இங்கு இன்னும் சிறிது நேரத்தில் ஒரு டாக்டர் வருவார், கேப் அம்மையே.

**ஆக்கி :** கடவுளுக்கு வணக்கம்! ஸெத் அவரை வண்டிக்குள் அழைத்து வாருங்கள். அவருக்காக அங்கு நல்ல அழகிய படுக்கை ஒன்று தயார் செய்து வைத்திருக்கிறேன்.

**ஸெத் :** ஜிம்மி, சொன்னது காது கேட்டதா? உன் தாயார் உனக்காக வசதியாகப் படுத்துறங்கக் கூடிய ஒரு இடத்தை அமைத்திருக்கிறாள்.

[ஆக்கி வண்டிக்குள் செல்லுகிறாள்.]

**ஜிம்மி :** கோபே எப்பொழுது வருவார்? எனக்கு ரொம்ப தாகமாக இருக்கிறதே. எப்பொழுது தண்ணீர் கொண்டு வருவார்?

**ஸெத் :** இப்பொழுது வருவார். உனக்குத் தேவையான தண்ணீரை கோபே கட்டா

யம் கொண்டு வருவார். [அவர் ஜிம்மியை வண்டிக்குள் தூக்கிவிடுகிறூர்.]

ஜாக்: பையனுடைய உடம்பு முன்பைவிடக் கடுமையாக இல்லையா?

ஸெத்: [நிராதரவானதொரு தொனியில்] ஆம், நீங்கள் போனதிலிருந்து ஜுரம் மிகவும் கடுமையாக அடிக்கிறது. ஆபி இங்கு வந்து சேர்ந்தால் அதுவே ஒரு பெரிய நிம்மதியாகும். உங்களை தைரியப்படுத்த அவர் ஏதாவது செய்வார்.

ஜாக்: ஸெத்! நீங்கள் ஆபியைப் பார்த்து எவ்வளவு வருஷம் ஆகிறது?

ஸெத்: எட்டு, ஒன்பது வருஷங்களுக்கு முன்னல் நான் இதைவிட்டு சென்ற பொழுதிலிருந்தே அவரை நான் பார்க்க நேரவில்லை. நாங்கள் கொஞ்சநாள் கடிதம் எழுதிக் கொண்டோம்.

ஜாக்: இப்பொழுது அவரைப் பார்த்தால் உங்களுக்கு ஆச்சரியம் உண்டாகும். அவர் ஸ்பிரிங் பீல்டுக்குப் போனபிறகு பெரிதும் மாறுதல் அடைந்துள்ளார். உயர்ந்த அந்தஸ்துக்கு விடுவிடென்று ஏறினர். ஆனல் அவர் சமீப காலத்தில் அங்கிருந்து நழுவி விழுந்து விட்டவரைப் போலக் காட்சியளிக்கிறூர். அவர் முன்பெல்லாம் போல கேலியாகப் பேசிச் சிரிப்பதில்லை.

ஸெத்: சரி, நாம் எல்லோருமே மாறுதல் அடையவேண்டும். [அவர் கோபே வரு

வதைக் கேட்டு எழுந்திருக்கிறார்.] ஆக்கி! [கோபேவே என்கிற நீக்ரோ இடது பக்கத்திலிருந்து ஒரு வாளி நிறைய தண்ணீர் எடுத்துக்கொண்டு உள்ளே வருகிறார். ஆக்கி வண்டிக்குள்ளிருந்து வெளியே தலை நீட்டுகிறார்.] இதோ கோபே தண்ணீர் கொண்டு வந்து விட்டார்.

**கோபே:** இதோ வந்துவிட்டேன் ஆக்கி, இதை வாங்கிக்கொள்ளுங்கள் [அவர் தண்ணீரை அவளிடம் கொடுக்கிறார்]

**ஆக்கி:** உனக்கு ரொம்ப நன்றி கோபே. [அவள் மறுபடியும் வண்டிக்குள் போகிறாள்]

**கோபே:** ஸெத், ஜிம்மி இப்பொழுது எப்படி இருக்கிறான்!

**ஸெத்:** அதே போலத்தான்.

**கோபே:** [தலையை ஆட்டிக்கொண்டே] சமையலுக்குத் தேவைப்படக் கூடிய தண்ணீரையும் கொஞ்சம் கொண்டு வருகிறேன். [அவர் ஒரு வென்னீர் கெட்டிலையும் ஒரு பானையையும் எடுத்துக்கொண்டு போகிறார்]

**ஸெத்:** [ஜாக்கிடம்] சரி போகட்டும்—பையனுக்கு நோய் வந்துள்ளது—இப்படிப்பட்ட ஒரு ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கையில் நமக்கு இப்படி நடந்தது ஒரு கெட்ட காலம்தான். அதனால்தான் பையனுக்கு நோய் பீடித்துள்ளது. இங்கு வைத்தியரே ஒருவரும் இல்லை அவரிடம் அழைத்துச் செல்ல சரியான வழியும் கிடையாது.

**ஜாக் :** *ஸெத் நீங்கள் எவ்வளவு நாளாக இப் படியே பயணமாக வந்துகொண்டிருக் கிறீர்கள் ?*

**ஸெத் :** *மூன்றுமாதங்களுக்கும் மேலாக. பென் ஸில்வேனியா மலைகளில் இருக்கையில் பயங்கரமான மழையும் மலை ஓடைகளில் வெள்ளமும் பெருக்கெடுத்து வந்தன. அங்கு வருகையில் நிலைமை தாங்க முடி யாமல் தான் இருந்தது. திட்டங்களைக் கை விட்டுவிட்டு அப்படியே திரும்பிச் சென்று விடலாமா என்றுகூட பல தடவைகள் எண்ணியதுண்டு. ஆனால் ஒருதடவை கிளம் பிய பிறகு திரும்புவது என்பது முடியாத காரியம். (அவர் வலதுபக்கம் பார்க்கிறார்) என்ன அது? அதோ வருவது ஆபியா ?*

**ஜாக் :** *(எழுந்து கொண்டே) ஆமாம். அவரே தான்.*

**ஸெத் :** *(ஆனந்தத்துடன்) அட கடவுளே ! அழுக்குத் துணியும் தொப்பியும் அணிந்து கொண்டு வருகிறாரே அவர் ! வாருங்கள் ஆபி !*

**ஆபி :** *என்ன ஸெத் (அவரிடம் வந்து அன் புடன் கைகுலுக்குகிறார்) உங்களை மறுபடி யும் பார்த்ததில் எனக்கு பரம சந்தோஷம்,*

**ஸெத் :** *எனக்கும் அப்படியே, ஆபி.*

**ஆபி :** *நீங்கள் மேற்கு நோக்கிப் பிரயாணமாகி யிருக்கிறீர்கள் என்று கேள்விப்பட்ட*

பொழுது சந்தோஷ மடைந்தேன். உன் மையன் எங்கே?

**ஸெத்:** அவன் அதோ வண்டிக்குள் இருக்கிறான்........(அப்பொழுது ஆக்கி வண்டிக்குள்ளிருந்து வெளியே வருகிறான்)

**ஆக்கி:** இவர் தான் டாக்டரோ?

**ஸெத்:** இல்லை ஆக்கி—நான் ஆவலுடன் பார்க்க வேண்டுமென்று உன்னிடம் சொல்லிக் கொண்டிருந்தேனே, அது இவர்தான். அது திருவாளர் ஆபிலிங்கன்—இது என் மனைவி ஸ்ரீமதி கேல்.

**ஆபி:** ஸ்ரீமதி கேல், உங்களைச் சந்தித்தது பற்றி ரொம்ப சந்தோஷம்.

**ஆக்கி:** லிங்கன்! நானும் உங்களைச் சந்தித்ததில் சந்தோஷப்படுகிறேன்.

**ஆபி:** டாக்டர் சாண்ட்லர் வீட்டில் இல்லை. அவர் போகர் பண்ணைக்கு நடுநிசி நேரத்திற்கு வந்து சேருவார் என்று எதிர்பார்ப்பதாகச் சொல்லிக் கொண்டார்கள். அப்பொழுது அங்குபோய் அவரை அழைத்து வருகிறேன்.

**ஸெத்:** அப்படிச் செய்தால் நல்லது, ஆபி.

**ஆக்கி:** நாங்கள் உங்களுக்கு கடமைப்பட்டவர்களாக இருப்போம், லிங்கன்.

**ஆபி:** சரி. அதற்கிடையே என்னால் செய்ய முடிந்ததை நான் செய்ய வேண்டும் என்று விரும்புகிறேன்........

**ஸேத் :** ஆபி, செய்யவற்கு ஒன்றுமே இல்லை. பையனுக்கு சேற்றில் அலைந்ததால் ஜுரம், வந்துள்ளது நாங்கள் அவனை நிம்மதியாக இருக்கச் செய்து வருகிறோம்.

**ஆக்கி :** (நிர்க்கதியான நிலையில்) இன்னும் ஒன்றே ஒன்றைத்தான் நான் செய்ய ஆசைப் படுகிறேன். இந்த ஜன சஞ்சார மற்ற பிரதேசத்தைச் சுற்றி அருகாமையிலுள்ள இடங்களில் எங்கேயாவது மதபோதகர் யாராவது இருக்கிறாரா?

**ஸேத் :** , (வருத்தத்துடன்) மதபோதகரா?

**ஆபி :** உங்களுக்கு யாரையாவது தெரியுமா ஜாக்?

**ஜாக் :** நியூ சேலத்திற்கு இருபது மைல் சுற்று வட்டாரத்தில் போதகரே யாரும் இல்லை.

**ஆக்கி :** அது சரி அப்படி யாராவது இருந்தால் இங்கு அழைத்து வந்து ஜிம்மிக்காக ஒரு பிரார்த்தனை நடத்தச் சொல்லலாம் என்று நினைத்தேன். அவ்வளவுதான். (அவள் மறுபடியும் வண்டிக்குள் சென்று விடுகிறாள். ஸேத் மிக்க பீதியுடன் அவளைப் பார்த்துக் கொள்கிறார்.)

**ஸேத் :** அவள் போதகர் யாராவது ஒருவர் இருந்தால் நலம் என்று விரும்புகிறாள். அதிலிருந்தே பையனைப் பற்றிய நம்பிக்கைகளை யெல்லாம் அவள் இழந்துவிட்டாள் என்று தான் அர்த்தம். இல்லையா?

**ஜாக் :** அது ஒரு வேளை அவளுக்கு மன ஆறுதலை அளித்தாலும் அளிக்கலாம்!

**ஆபி:** *ஸெத், உங்கள் பிள்ளைக்கு ரொம்ப ஜுரமாக இருக்கிறதா என்ன?*

**ஸெத்:** *ஆமாம் ரொம்ப ஜுரமாகத்தான் இருக்கிறது.*

**ஜாக்:** *ஆபி. நீங்களே ஏன் ஒரு பிரார்த்தனை செய்யக்கூடாது? பிரார்த்தனை செய்யும் வகையில் ஏதாவது உங்கள் மனதில் தோன்றுமே?*

**ஆபி:** *பிரார்த்தனை செய்வதில் எனக்கு அவ்வளவு திறமை போதாது. நிம்மதியளிக்கக் கூடிய அருள் வாக்குகள் எதையும் பற்றி என்னால் சிந்திக்க முடியாது.*

**ஸெத்:** *பரவாயில்லை. மத சம்பந்தமாக இது ஆக்கிக்குத் தோன்றிய கருத்து ஆபி. உட்கார்ந்து கொள்ளுங்கள்.*

**ஆபி:** *(வண்டியைப் பார்த்துக் கொண்டே) ஸெத் கடைசியாக உனது கனவு பலித்து விட்டது. நீயும் நானும் பேசிக் கொண்டிருந்ததையே இப்பொழுது செய்யத் துடங்கி விட்டாய். இருந்த இடத்தை விட்டு கிளம்பிப் போகிறாயாமே.*

**ஸெத்:** *ஆமாம் ஆபி. மேரிலாண்டில் கூட்டம் அதிகரித்துவிட்டது அந்த நகரம் நமது பண்ணைகளையும் தாண்டிப் பரவி வந்து விட்டது. அதனால் தாராளமாக இடம் எங்கே இருக்கிறது என்று தேடிக் கிளம்பி விட்டோம் நாங்கள் அங்கிருந்து கிளம்பிக் கொண்டிருக்கிறோம் என்றும், உங்களை இந்த இடத்தில் சந்திக்க விரும்புகிறேன்*

என்றும் நான்கு மாதங்களுக்கு முன்னல் கடிதம் எழுதியிருந்தேன். எங்களோடு நீங்களும் பிரயாணத்தில் கலந்து கொள்வீர்கள் என்று நினைத்தேன்.

ஆபி: ஸெத், உங்கள் கடிதம் என் கைக்குக் கிடைக்க நீண்ட நாட்களாகிவிட்டன. நான் எப்பொழுதும் இருக்கும் இண்டியானு, கெண்டகி ஆகிய பிரதேசத்தில் சுற்றி யலைந்து கொண்டிருந்தேன். (அவர் ஒரு பெட்டியின் மீது உட்காருகிருர்) நீங்கள் நெப்ராஸ்காவில் குடியேறி விடலாம் என்று யோசிக்கிறீர்களா?

**ஸெத்:** இல்லை, நாங்கள் அந்த இடத்தில் நிற்கப் போவது கிடையாது. நாங்கள் இந்த கண்டத்தின் மற்ெருரு புறத்தில் இருக்கும் ஒரேகானுக்குப் போகிறேம்.

ஆபி: (மிக்க ஆவலுடன்) ஒரே கானுக்கா?

**ஜாக்:** ஆமாம் அந்த இடத்தை நோக்கித்தான் மக்கள் எல்லாம் போயிக்கொண்டிருக் கிருர்கள்.

**ஸெத்:** முதலில் வெஸ்ட் போர்ட் லாண்டிங் என்ற இடத்தை நோக்கிச் செல்லுகிறேம். அது எல்லைப் பிரதேசத்திலே கன்ஸாஸ் ராஜ்யத்தில் உள்ளது. மேற்கு நோக்கித் தொலை தூரம் செல்லும் பிரயாணி வண்டிகளில் அங்குத்தான் தேவையான சாமான்களை சேகரித்து வைத்துக் கொள்கிருர்கள். அங்கு நம்மைப்போல மேற்கு நோக்கிச் செல்லும் பல பிரயாணிகளைச் சந்திப்ப

தாகும். அதற்கு பிறகு சம வெளிகளையும் மலைகளையும் கடந்து செல்ல அவர்களும் துணையாகி விடுவார்கள்.

ஆபி: நீங்கள் போகவேண்டிய தூரத்தைப் பற்றி நினைத்தாலே குலை நடுங்குகிறது. ஆகவே நீங்கள் எல்லைப் பிரதேசத்தையும் உங்களுடனேயே எடுத்துச் செல்லுகிறீர் கள் போலாகும், இல்லையா?

ஸேத்: அப்படிச் செய்வது ஒரு முட்டாள்த் தனமாகத் தோன்றலாம். ஆனல் செழிப் புள்ள கறுப்புமண் அங்கு மலிந்து கிடைப் பதைப் பற்றி நாம் அநேக கதைகள் கேட் டிருக்கிறோம். மேலும் யுக்தமான மழைக் கும், வெய்யிலுக்கும் அங்குக் குறைவில்லை. என்கிறார்களே.

ஜாக்: ஆபி நீங்களும் அவர்களுடன் ஏன் போகக் கூடாது? மேற்கே எல்லையைத் தாண்டியிருக்கும் அந்த பிரதேசத்தில் ஜனங்கள் வேகமாகக் குடியேறிக் கொண் டிருக்கிறார்கள். ஏன் போன வாரத்தில் மட்டும் இவ்வழியாக இருநூறு வண்டிகள் போயிருக்கின்றன. பல்வேறு இடங்களி லிருந்தும்—பென்ஸில்வேனியா கன்னெக் டிகட், வெர்மாண்ட் முதலிய இடங்களி லிருந்து—மக்கள் தங்களுக்கு தாராளமாக வாழ இடம் கிடைப்பதை எண்ணி சந்தோ ஷத்துடன் போனார்கள். நானும் கூடிய சீக்கிரத்தில் எனக்குத் தேவையான பிர யாண வண்டி கிடைத்தவுடன் போகப்

போகிறேன். அங்குள்ளவர்களுக்கு சிகப்பு இந்தியர்களை எதிர்த்துப் போராட என்னைப் போன்றவர்கள் தேவையாக உள்ளது. அதேபோல,: ஆபி, அவர்களுக்குள் எப்படி சமாதானத்துடன் வாழ்வது என்பதைப் போதிக்கக் கூடிய புத்திசாலிகளும்—உங்களைப் போன்ற மூளை உள்ளவர்களும் தேவையானவர்களாக இருப்பார்கள்.

**ஆபி:** (எங்கோ பார்த்தபடி) அங்குப் போவதற்கு அது ஒரு தூண்டுதலாகும் என்ருல் மறுக்க முடியாதுதான்.

**ஜாக்:** அப்படியானுல் அங்குப் போகவிடாமல் உங்களை எது தடுத்து நிறுத்துகின்றது? இப்பொழுதுதான் நீங்களே சொன்னீர்கள் எங்கெங்கோ சுற்றியலைந்து கொண்டிருந்தீர்கள் என்று!

**ஆபி:** அப்படியும் இருக்கலாம். நான் நீண்ட நாட்களாக சுற்றி யலைந்து கொண்டிருந்திருக்கலாம். (அவர் பேசிக் கொண்டிருந்த விஷயத்தை மாற்றி விடுகிருர்.) நீங்கள் மூவரும் போகிறீர்களா, ஸெத்.

**ஸெத்:** அவ்வளவுதான். நாங்கள் மூன்று பேர்களும் அந்த நீக்ரோ கோபேயும்.

**ஆபி:** அவன் உனது அடிமையா?

**ஸெத்:** கோபேயா? இல்லை! அவன் ஒரு சுதந்திர மனிதன். இருபது ஆண்டுகளுக்குமுன் என் தந்தைதான் அவன் தந்தையை அடி

மைத் தனத்திலிருந்து விடுதலை செய்வித்தார். ஆனால், நாங்கள் கோபே விஷயத்தில் அதிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டியிருக்கிறது. நாங்கள் வந்த இடங்களைப் பற்றிய பிரச்னையில் என்ன நோக்கம் கொண்டிருக்கிறார்கள் என்பது தெளிவாகக் கூறுவதற்கில்லை. தவிர ஏராளமான சுதந்திர நீக்ரோக்கள் வர்ஜீனியா பிரதேசத்துக்குள் தந்திரமாகச் செலுத்தப்படுகிறார்கள், அடுத்தபடி நதியைக் கடந்தவுடன் வெகு ரகசியமாக விற்பனை செய்யப்பட்டு விடுகிறார்கள். நாம் • சட்ட மன்றத்திற்குச் சென்று அவர்களுடைய சட்டப் பூர்வமான உரிமைகளை எடுத்து நிலை நிறுத்துகையில் ஒவ்வொரு கட்டத்திலும் அயோக்கியரான சட்ட நிபுணர்களின் சூழ்ச்சியினால் தோல்வியே காண்கிறோம். அதனால்தான் நாங்கள் இம்முறை சுதந்திரப் பிரதேசங்களின் வழியாகவே இந்தப் பிரயாணத்தை நடத்தி வருகிறோம்.

ஆபி: ஒரகானில் அடிமை வியாபாரம் இல்லாமல் சுதந்திரமான நிலை இருக்குமென்று நீங்கள் கருதுகிறீர்களா?

ஸெத்: தாராளமாக இருக்கும். அங்கு சுதந்திரமான சூழ்நிலை இருந்துதான் ஆக வேண்டும்.

ஆபி: (வெறுப்பு) அப்படியொன்றும் இல்லை ஸெத் வாஷிங்டனிலுள்ள அரசியல் வாதிகள் மேற்கத்தியவர்களையெல்லாம் பகுதி

பகுதியாக அடிமை வியாபாரிகளுக்கு விற்பனை செய்து கொண்டிருக்கும் வரையில் அங்கு சுதந்திர நிலை நிலவாது.

**ஸேத் :** (ஆத்திரமாக) அந்தப் பிரதேசம் எப்படியும் சுதந்திர நிலையில் இருந்துதான் ஆக வேண்டும்! தனது பிரஜைகளை அடிமைத் தளைகளிலிருந்து காப்பாற்றுவதற்கும், போதுமான சக்தியற்ற நாடாக இது இருக்குமானல் பிறகு நாங்கள் இதைவிட்டு கனடா தேசத்தில் போய் சேர்ந்துவிடுவோம். அது இல்லாவிட்டால் இன்னும் மேற்கே வெகு தூரத்திற்கு அப்பால் புதியதொரு நாட்டை அமைத்துக் கொள்ளுவோம்.

**ஆபி :** (ஆழ்ந்த குரலில்) என்ன, புதியநாடா?

**ஸேத் :** ஏன் அமைக்கக் கூடாது?

**ஆபி :** கிழவர் மென்ட்டார் கிரஹாம் முன்பு ஒரு தடவை இந்த ஐக்கிய அமெரிக்க தேசம் என்ருவது ஒருநாள் ஐரோப்பிய நாடுகளைப்போல் பரஸ்பரம், விரோதம் நிறைந்த அநேக குறுநாடுகளாகப் பிரியத்தான் போகிறது என்று என்னிடம் சொன்ஞர். அது என் ஞாபகத்துக்கு வந்தது.

**ஸேத் :** சரி—பிரிந்தால் பிரியட்டுமே! நீங்கள் கூறுவதன் பொருள் எனக்குப் புரிகிறது. இந்த நாட்டை நான் பெரிதும் நேசிக்கின்றேன்.. இந்த நாட்டிற்காக நான் போரிலும் ஈடுபடத் தயார். ஜார்ஜ் வாஷிங்டனும் மற்ருேரும் இளைஞர்களாக இருக்கை

யில் இங்கிலாந்து தேசத்தைப் பெரிதும் நேசித்தனர். அதன் சார்பில் யுத்தத்தி லும் ஈடுபட்டனர். ஆனால் அரசாங்கம் நியாயமாக நடக்கத் தவறியபொழுது அதி லிருந்து மாறுபட்டு அதை எதிர்க்கவும் தயங்கவில்லை.

ஜாக்: ஆண்டி ஜாக்ஸன் மட்டும் மறுபடி அர சாங்கத்தைக் கைப்பற்றி வெள்ளை மாளி கைக்கு வந்திருந்தால் அப்படி நியாயமாக நடக்கத் தவறியவர்களை தேசத்துரோகி கள் எனக்கூறி குதிரைச் சாட்டையினல் அடித்து விரட்டியிருப்பார்.

ஆபி: ஸெத், உங்களையும், உங்கள் மனைவி, பிள்ளை ஆகியவர்களையும் இழந்து நிற்கும் நாளே அமெரிக்கர்களாகிய எங்களுக்கு மிகவும் துரதிஷ்டம் பிடித்த நாளாகும்.

ஸெத்: (இடைமறித்து) மகனே! நான் வான ளாவப் பெருமையுடன் பெரிய விஷயங் களைப் பேசினேன். ஆனல் அவையனைத் தும் வெற்றுப் பேச்சுகளே. அவர் இறந்த பிறகு நாம் மேற்கொண்டு முன்னேறிச் செல்லும் சக்தியையே இழந்துவிடுவோம். பிற்காலத்தில் நற்பயனை அனுபவித்து இன்புறுவதற்கு யாருமே இருக்கமாட் டார்கள் என்று ஏற்பட்டால் எதிர்காலத் திற்காக உழைப்பதில் என்ன பிரயோஜ னம்? என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். ஆபி, ஆனல் எனக்கு என்னவோ மிகவும் பயமாகரதான் இருக்கிறது.

ஆபி : (திடீரென எழுந்திருக்கிறார்.) நீங்கள் அப்படி பயப்படக்கூடாது. ஸெத், ஆனால் இதை நான் உங்களுக்குச் சொல்லுவதற்கு அருகதையற்றவன். ஏனென்றால் இது வரை என் வாழ்நாள் முழுவதும் நான் பீதி யுற்றபடித்தான் இருந்து வந்துள்ளேன். ஆனால் இப்பொழுது நீங்கள் செய்ய திட்ட மிட்டுள்ள பெரிய விஷயத்தையும் உங்களை யும் நினைக்கையில் நான் மிகமிக அற்பன் என்பது புரிகிறது. உங்களையும் உங்களைப் போன்றவர்களையும் ஐக்கிய அமெரிக்கா வில் நிலைத்திருக்க வகை செய்வதற்கு நான் ஏதாவது செய்தேயாக வேண்டும். நீங்கள் இதைவிட்டுப் போகக்கூடாது ஸெத். எதையும் கண்டு பயந்து நம்பிக்கையை இழந்து விடாதீர்கள்! (ஆக்கி வண்டியி லிருந்து வெளியே வருகிறாள். அவள் ரொம்பவும் பீதியுற்றுத்தான் இருக்கிறாள்.)

ஆக்கி : ஸெத்!

ஸெத் : என்ன ஆக்கி ?

ஆக்கி : அவன் நிலை ரொம்ப மோசமாக உள் ளது ஸெத்! அவன் தூக்கத்தில் பிதற்று கிறான். மூச்சுவிட முடியாமற் திணறு கிறான்....(அவள் அழுகிறாள். ஸெத் அவ ளைக் கட்டிப் பிடித்துக் கொள்கிறார்.)

ஸெத் : பரவாயில்லை. அதற்காகக் கவலைப் படாதே கண்மணி! டாக்டர் வந்ததும் அவனைக் குணப்படுத்திவிடுவார். கவலைப் படாதே குணமடைந்து விடுவான்.

ஆபி: நீங்கள் பிரியப்பட்டால் நான் பிரார்த்தனை நடத்த முயற்சிக்கிறேன். (அவர்கள் அவரையே பார்க்கிறார்கள்.)

ஜாக்: அப்படித்தான் பேசவேண்டும், ஆபி!

ஸெத்: ஆபி நீங்கள் எதைச் சொல்லி பிரார்த்தனை செய்தாலும் நாங்கள் நன்றி பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறோம். (ஆபி தனது தொப்பியைக் கழற்றுகிறார். அவர் பேச ஆரம்பிக்கையில் இடது பக்கத்திலிருந்து கோபே உள்ளே வந்து பிரார்த்தனையைக் கேட்பதற்காக பயபக்தியுடன் நிற்கிறார்.)

ஆபி: உலகத்தின் தந்தையாம் கடவுளே, இந்த மூடு போட்ட வண்டிக்குள் நோயுற்றுப் படுத்துக் கிடக்கும் இந்தச் சிறுவனைக் கருணைக் கண் கொண்டு பார்ப்பீராக! அவனுடைய இனத்தவர்களெல்லாம் காட்டுப்பிரதேசத்திற்கு இடையே புதியதொரு குடியிருக்கு மிடத்தைத் தேடிக்கொண்டு வெகு தூரத்திற்கு அப்பால் பிரயாணமாகிச் செல்லுகின்றனர். அதுவும் உனது குழந்தைகளான மானிடர்கள் வசிப்பதற்கு ஏற்ற நல்ல இடமாக மாற்றி யமைக்கும் உனது வேலையைச் செய்வதற்காகவே செல்லுகின்றனர். அப்படிச் செல்லுகை கையில் இடையே ஏற்படக்கூடிய கஷ்டங்களைஎதிர்த்துப் போராட கொஞ்சமும் அவர்கள் பயப்படவில்லை. அப்படிப்பட்ட அவர்களது குழந்தையை அவர்களிட

மிருந்து பிரித்து எடுத்துச் சென்றுவிடாதே என்று தாழ்மையுடன் இறைஞ்சுகிறேன். அவனுக்கு வாழ்வதற்குச் சுதந்திரமளியுங்கள். சாவு எனும் பாசறைக்குள் அவனை ஒதுக்கித் தள்ளாதீர். அவனது பிறப்புரிமையை மறுக்காதீர்கள். இந்த உலகத்தின் பரந்த சமவெளிகளையும், உயர்ந்த மலையுச்சிகளையும், பசுமை நிறைந்த பள்ளத்தாக்குகளையும், அகன்ற நதிகளையும் கண்டுகளிக்கும் பாக்கியத்தை அவனுக்கு அளியுங்கள். இந்தச் சிறுவன் நமது அமெரிக்க நாட்டைச் சார்ந்தவன். இங்குள்ளவைகளனைத்தும் அவனுக்குச் சொந்தமானவைகளே. அதுபோல அவனும் அவைகளுக்கு சொந்தமானவன்தான். அவனுடைய முன்னோர்கள் இடையறுது தொடர்ந்து நம்பிக்கையுடன் பலகாலம் பாடுபட்டு வந்த உயரிய லட்சியத்திற்காக பாடுபட்டு உழைக்கும் வாய்ப்பை, இந்தச் சிறுவனுக்கும் அளியுங்கள். அவனது தந்தையின் பலத்தையும், சக்தியையும் அவனுக்கும் அருளுங்கள். எங்களுக்கெல்லாம் தேவையான வலிமையைப் பொழியுங்கள். ஆண்டவனே, உலக மக்களெல்லாம் விடுதலையடைந்து உய்வதற்காக சிலுவையில் நின்று உயிர்நீத்த புனிதமான தங்கள் திருக்குமரன், ஏசு கிறிஸ்துவின் பெயரால் தங்களைக் கேட்கிறேன். எங்களுக்கெல்லாம் தேவையான வலிமையையும், சக்தியையும் அளித்து எங்களை எதிர்நோக்கி

*யுள்ள பணியை—லட்சியத்தை—வெற்றி கரமாகச் செய்து முடிக்க அருள்புரியுங்கள் ' அப்படியே நடப்பதாக '*

**கோபே :** (*உணர்ச்சியுடன்*) *ஆமென்....!*

**ஸேத்தும் ஆக்கியும் :** (*முணு முணுக்கின்றனர்.*) *அப்படியே ஆவதாக!* (*ஆபி தலையில் தொப்பியை மாட்டிக்கொள்கிறார்*).

**ஆபி :** *நடுநிசியாகிவிட்டது. நான் போகர் பண்ணைக்குச்சென்று டாக்டரை அழைத்து வருகிறேன். அவர் வெளியே செல்லு கிறார்*).

**ஸேத் :** *ஆபி, உங்களுக்கு எனது நன்றி.*

**ஆக்கி :** *ரொம்ப நன்றி, லிங்கன்.*

**கோபே :** *ஆபிலிங்கன்! கடவுள் உங்களுக்கு அருள்புரிவாராக!* (*விளக்கொளி விரைவாக மறைகின்றது*).

[ஏழாவது காட்சி முற்றிற்று.]

## காட்சி 8

எட்வர்ட்ஸின் இல்லத்திலுள்ள முன் ஹால். முன் காட்சி நிகழ்ந்து சில நாட்களுக்குப் பிறகு.

மேரி ஏதோ ஒரு புத்தகத்தை வைத்துப் படித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிருள்.

அப்போது பணிப்பெண் உள்ளே வருகிருள்.

**பணிப்பெண் :** *மேரியவர்களே! திருவாளர் லிங் கன் வருகிறார்.*

**மேரி :** *யார்? லிங்கன் அவர்களேயா! (தனது உணர்ச்சிகளை அடக்கிக் கொள்வதற்காக ஒரு விநாடி உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். பிறகு புஸ்தகத்தை மூடிவைத்து விட்டு பரபரப்புடன் எழுந்திருக்கிறாள்.)*

**பணிப்பெண் :** *அம்மையே, நீங்கள் அவரைச் சந்திக்கத் தயாராகிவிட்டீர்களல்லவா?*

**மேரி :** *இதோ ஒரு விநாடியில் (பணிப்பெண் போகிறாள். மேரி பக்கத்திலுள்ள சோபாவின் மீது புஸ்தகத்தை வைத்துவிட்டு, தன்னைச் சரிப்படுத்திக்கொண்டே வலது புறமுள்ள வாயிலை நோக்கிச் செல்லுகிறாள். குளிர்காயும் கணப்படுப்புக்கருகில் வருகையில் ஆபி உள்ளே நுழைவதைப் பார்க்கிறாள்.) லிங்கன் அவர்களே, உங்களை மறுபடியும் சந்திப்பதில் பெருமகிழ்ச்சியடைகிறேன். (அவர்கள் இருவருக்கும் எல்லையற்ற சங்கோஜம். அவர் ஏதோ ஓர் இரு வார்த்தைகளில், தான் எண்ணி வந்த விஷயத்தைத் தெரிவித்துவிடத் தீர்மானித்துக் கொண்டுள்ளார். சமூக முறைப்படி அவர்பால் இனிமையாய் நடந்துகொள்ள அவள் பெரு முயற்சி செய்கிறாள்.)*

**ஆபி :** *மேரி, மிக்க நன்றி. இப்படி நான் ஏன் உன் தயவை நாடித் திடுமென இங்குப் பிரவேசித்துள்ளேன் என்பது பற்றி நீ ஆச்சரியப்படலாம்.*

**மேரி :** (சடுதியில்) *நினியனின் வீட்டில் உங்களுக்கு எப்பொழுதுமே வரவேற்புண்டு.*

ஆபி: சென்ற முறை நான் தங்களைச் சந்தித்த போது நடந்துகொண்ட முறையினால் இங்கு வருவதற்கு எனக்கே அச்சமாக இருக்கிறது.

மேரி: நீங்கள் மிகக் கடுமையான நோயிலிருந்து மீண்டிருக்கிறீர்கள். அதைப்பற்றி ஜாஷுவா ஸ்பீட் எங்களுக்குத் தகவல் கொடுத்துக் கொண்டிருந்தார். நாங்கள் அதைப்பற்றிப் பெரிதும் கவலைப்பட்டு வந்தோம்.

ஆபி: நீங்கள் என்னிடத்தில் பெரிதும் அன்பு பாராட்டி யிருக்கிறீர்கள்.

மேரி: இப்பொழுது உடல் நலமடைந்துவிட்டீர்கள். நீங்கள் பழையபடி வேலையைத் தொடங்கி விடுவீர்கள். மறுபடி நீங்கள் சட்டசபைத் தேர்தலுக்குப் போட்டியிடுகிறீர்களல்லவா? அல்லது அதைவிடப் பெரிய திட்டங்கள் ஏதாவது உண்டா?

ஆபி: மேரி எனக்கு அப்படியெல்லாம் திட்டங்கள் ஏதும் கிடையாது. நமது திருமண நாளாக இருந்திருக்கவேண்டிய அன்றைய தினம் நான் பேசிய விஷயங்களுக்காக வருந்துகிறேன்.

மேரி: மிஸ்டர் லிங்கன். நீங்கள் அவற்றையெல்லாம்பற்றி ஒன்றும் சொல்லத் தேவையில்லை. அப்பொழுது நிகழ்ந்தவைக்கெல்லாம் எனது தவறுதான் காரணம்.

ஆபி: (எதிர்பாராத வகையில் குற்றத்தைத் தன்மீது சுமத்திக்கொண்டு அவள் பேசு

வதைக் கண்டு மனம் கலங்கி) என்ன, உங்களது குற்றமா? அது எனது படு மோசமான கோழைத்தனத்தினுல் அல்லவோ ஏற்பட்டது.

**மேரி :** எனது தன்நம்பிக்கையே என் கண்களை மறைத்துவிட்டது நான்....நான் உங்களைக் காதலித்தேன். (ஒரு விளுடி அவளது உறுதியான குரலில் ஒருவித நடுக்கம் ஏற்படுகிறது. ஆனுல் அவள் உடனே தனது மனத் தளர்ச்சியைக் கட்டுப்படுத்தி விடுகிருள்.) உங்களுக்கும் என்மீது காதல் உண்டாகச் செய்ய முடியும் என்றும் நம்பிக்கை கொண்டிருந்தேன். நாம் இருவருமே உள்ளத்தினுல் ஒன்றுபட்டு விடுவோம் என்று நம்பினேன். எனக்குள்ள மன உறுதி உங்களிடத்திலும் பாய்ந்து சுடர்விட்டெரியும் என்று நினைத்தேன்! நீங்கள் மக்களின் தலைவராகவும், உண்மையான ஆண் மகனுகவும் திகழ்வீர் என நம்பினேன். ஆனுல் நீங்கள் அந்தப் பேறை விரும்பவில்லை. (அவள் அங்கிருந்து மறு பக்கம் திரும்புகிருள்.) உங்களுக்குள்ள அரிய சக்தியை நான் அறிவேன். ஆனுல் உங்களது மகத்தான எதிர்காலமாட்சிமையை உறித்தள்ளுவதற்கே அந்தச் சக்தியை முழுமையாகப் பயன்படுத்துவீர்கள் என்று நான் நினைக்கவில்லை.

**ஆபி :** நீ சொல்வது உண்மைதான் மேரி. ஒரு சமயம் என்மீது நீ அளவற்ற நம்பிக்கை

கொண்டிருந்தாய். அதற்கு நான் தகுதியே யில்லாதவனுகத்தான் இருந்தேன். ஆனல் கடைசியாக இப்பொழுது, நீ வைத்த நம்பிக்கைக்குப் பாத்திரனுகக் கூடிய தருணம் வந்துவிட்டது. (மேரி அவரைக் கூர்ந்து கவனிக்கிருள்.) நம் இருவரது வாழ்க்கைப் பாதையும் வெவ்வேருகத் தான் இருக்கும் என்று தீர்க்கமாக நம்பிய தால்தான் முன்பு நான் அவ்வாறு வெட்கப் படத்தக்க முறையில் நடந்து கொண்டேன். ஆனல் எனது நம்பிக்கை தவருனது என்ற முடிவுக்கு இப்பொழுது வந்துவிட்டேன். நல்லதற்கோ கெட்டதற்கோ எப்படியாயி னும் நம் இருவரது தலைவிதியும் ஒன்ருகவே பிணைக்கப்பட்டுள்ளது என்று திண்ணமாக நம்புகிறேன். அதனல் உன்னை மறுபடியும் எனது மனைவியாக வேண்டுமென்று கோரு கிறேன். ஆனல் மறுபடியும் என்னை ஏற் றுக்கொள்வது உன்னையே நீ தாழ்வுப் படுத்திக் கொள்வதாகும் என்பதையும் உணர்ந்துள்ளேன்.

மேரி : (சினந்தவளாய்) இறுதி வெற்றி நமது என்கிற நிச்சயமிருக்குமே யானல் என் னுடைய தாழ்வையோ குறைவையோபற்றி யெல்லாம் நான் பயப்படவில்லை. உறுதியும் நம்பிக்கையும் தங்களுக்குத் திடமாய் இருந் தால் தான் வெற்றிகிட்டும்! உங்களது மன மும் உள்ளமும் இப்படி மாறியதற்கு கார ணம் என்னவென்று புரியவில்லையே!

**ஆபி**: *பரந்த புல்வெளிப் பிரதேசத்தின் வழி யாக என் பழைய நண்பன் ஒருவன், தன் மனைவி ,மக்களுடன் மூடுபோட்ட வண்டி யொன்றில் மேற்கு நோக்கிச் சென்று கொண்டிருந்தான். வரும் வழியில் அவ னைச் சந்தித்தேன். என்னையும் தன்னுடன் வரும்படி அழைத்தான். எனக்கும் ஆசை யாகத்தான் இருந்தது. (அவரது குரலில் பெரும் துக்கத்தின் தொனி கலந்து ஒலிக் கிறது. ஆனாலும் அவர் அதை மறைத்துத் தன்னைச் சமாளித்துக் கொண்டு அவள் பக்கம் திரும்பி உறுதியுடன்) ஆனல் அப் பொழுதும் நான் சொல்லவேண்டிய திசை அதுவல்ல என்பதை அறிந்து கொண்டு தான் இருந்தேன். நான் எந்தப் பாதை யில் செல்லவேண்டு மென்று இதுகாறும் நீ விரும்பி வந்தாயோ அதைப் பின்பற்றிச் செல்ல எனக்கு உகந்ததாகும்.*

**மேரி**: *இனி ஒரு பொழுதும் அந்த வழியி லிருந்து விலகி தப்பி ஓடவோ அல்லது தவருகச் செல்லவோ மாட்டேன் என்று வாக்குறுதி அளிப்பீரல்லவா?*

**ஆபி**: *நீ என்னை ஏற்றுக் கொள்வதானல் மேரி, கடவுள் எனக்கு அளித்துள்ள சக்தி யைக் கொண்டு எது நல்லது என்பதைக் கண்டு அறிவேன். அதன் பிறகு எனது வாழ்நாள் முழுவதையும் நல்லதையே செய் வதற்கு முயற்சி செய்வேன். (அவரை ஊடுருவிப் பார்க்கிருர். அவரைச் சிறிது*

நேரத்திற்காகவாவது சாமர்த்தியமாக எதையும் தீர்மானித்து முடிவு செய்யமுடியாதபடி வேதனைபடச் செய்வதில் அவளுக்கு ஆசை ஏற்படலாம். ஆனாலும் அப்படி அவளால் செய்ய முடியாது.)

மேரி: அப்படியானால் மிகவும் உத்தமம். நான் உங்களுக்கு மனைவியாக ஒப்புக் கொள்கிறேன், உங்கள் பக்கத்திலேயே உறுதியுடன் நின்று வாழ்க்கையில் எது வந்தாலும் போராடுகிறேன். சாவுதான் நமது ஒற்றுமையைப் பிரிக்கமுடியும் (அவரிடம் ஓடிச் சென்று இறுக்கிக் கட்டிக்கொள்கிருள்.) ஆபி! நான் உங்களைக் காதலிக்கிறேன்! மனமார நேசிக்கிறன். நம்மிருவருக்கும் மிடையே எது நேர்ந்தாலும், உங்களைக் காதலித்தபடியே—நேசித்தபடியே—நான் உயிர் துறப்பேன்! (அவரது தோளில் சாய்ந்தபடி துக்கம் தாளாது விக்கி விக்கி அழுகிருள். அவர் அவளைக் கட்டித் தழுவிக் கொள்கிருர். அவள் தோள்மீது சாய்ந்தபடி கீழே விரித்துள்ள கம்பளத்தைப் பார்க்கிருர்.)

[இரண்டாம் அங்கம் முடிவுற்றது]

# மூன்றாம் அங்கம்

## காட்சி 9

இல்லினய்ஸிலுள்ள ஒரு நகரம். 1858-ம் ஆண்டு கோடை காலத்தின் ஒரு மாலைப் போது. பிரசங்க மேடை ஒன்று தென்படுகிறது.

மேடைக்கு எதிரே பேச்சாளருக்கு மேற்புறமாக ஒது விளக்கு பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. மேடைக்குப்பின்புறம் மூன்று நாற்காலிகள் உள்ளன. அவைகளில் வலது புறத்திலுள்ள நாற்காலியில் நீதி பதி ஸ்டீபன் ஏ. டக்ளஸ் உட்கார்ந்திருக்கிறார். இடது பக்கத்தில் ஆபிலிங்கன் வழக்கமான தனது தொப்பி யுடன் உட்கார்ந்திருக்கிறார். அவர் இடை இடையே சிறு காகிதத் துண்டொன்றில் ஏதோ குறிப்பெடுத்துக் கொள்கிறார். மத்தியிலுள்ள நாற்காலி நினியனுக் காகப் போடப்பட்டுள்ளது. அவர்தான் இப்பொழுது மேடையின் முன்னால் நடு நிலையாளராக அக்ராசனம் வகித்து அமைதி நிலை நாட்டுவதில் ஈடுபட்டிருந்தார்.

**நினியன் :** *ஐக்கிய அமெரிக்காவின் மகோன்னதமான செனடர் பதவிக்காக இல்லினய்ஸின் சார்பாகப் போட்டியிடும் நீதிபதி ஸ்டீபன் ஏ. டங்ளஸும் திரு. அப்ரஹாம் லிங்கனும் பேசிய பிரதான விவாதங்களை நாம் இப்பொழுது கேட்டோம். இல்லினய்ஸைச் சார்ந்த தலை சிறந்த இந்த இரு திறமைசாலிகளுக் கிடையேயும் நடந்த தொடர்ச்சியான வாதங்களும் நமது நாட்டு மக்கள் அனைவரது கவனத்தையும் நமது*

ராஜ்யத்தின் மீது திருப்பியுள்ளது. காரணம், நமது நேசத்திற்குரிய இந்த நாட்டின் எதிர்கால சரித்திரத்தையும் அமெரிக்கர்கள் அனைவரின் அன்றாட வாழ்க்கையையும் பாதிக்கும் முக்கியமான பிரச்னைகளைப் பற்றியிருப்பதால் தான் இவர்கள் இருவரும் அலசி ஆராய்ந்து விவாதிக்கின்றனர். சாதாரணமாக விவாதங்கள் நடத்துவதற்குரிய விதி முறைகளையொட்டி, இங்குள்ள அபேட்சகர்கள் இருவரும் இப்பொழுது ஒருவரை யொருவர் மறுத்துப் பேசுவார்கள். முதலில் நீதிபதி டக்ளஸ்...............(இதைச் சொல்லிவிட்டு நினியன் பின்னல் சென்று நாற்காலியில் உட்காருகிறார். நீதிபதி டக்ளஸ் பேசுவதற்காக எழுந்து வருகிறார். சுருக்கமாகப் பேசி மற்றவர்களைத் தன் பக்கம் கவரக் கூடிய சக்திபடைத்தவர் டக்ளஸ். மேலும் தனது திறமையில் அபார தன்நம்பிக்கை கொண்டவர்.)

**டக்ளஸ்:** தோழர்களே! எனது அருமை நண்பர் திரு லிங்கன் அவர்கள் தனக்கே உரிய நகைச்சுவையுடனும் தூய்மையான அழகு ததும்பும் நேர்மையுடனும், பொறுப்புணர்ச்சியுடனும் இதுவரை பிரசங்கம் செய்தார். அரசியல் அறிஞன் என்கிற முறையில் இல்லாவிடினும், ஒரு சிறந்த மனிதன் என்கிற கருத்தில் அவர் எனது உன்னதமான குணாதிசயங்களைப் பற்றி பெருமையுடனும் அடக்கத்துடனும் எடுத்துரைத்தார். அவ

ரது அந்தப் பாராட்டுக்களுக்கு எனது மனமார்ந்த நன்றிகள். ஆனல்—அதே நேரத்தில்—அவர் பார்வைக்கு ஒன்று மறியாத சாதுவைப்போல் தோற்ற மளிப் பதையோ, அல்லது கருத்துடன் சிரத் தையாகப் பூண்டுள்ள இனிய சுபாவத் தையோ கண்டு ஏமாந்து விடவேண்டாம் என்று தாழ்மையுடன் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். ஏனெனில் அவரது ஒவ் வொரு புகழ்ச்சி மொழியிலும் ஒரு தீமை யான ஆயுதம் புதைந்து கிடக்கிறது. ஷேக்ஸ்பியரின் அழிவற்ற புகழ் வாய்ந்த அவல நாடகமான ஜூலியஸ் ஸீஸரில் தோன்றும் ப்ரூட்டஸ்ஸைப்போல் லிங்க னும் கண்ணியமிக்கவர், பாராட்டுக்குரியவர் தான். ஆனல் ப்ரூட் டஸ்ஸைப் போலவே இந்த லிங்கனும் தன் எதிரி ஏமாந்திருக்கும் நேரத்தில் அடி வயிற்றில் கத்திபாய்ச்சும் அருங்கலையில் தேர்ந்தவரே. பெரியோர் களே! இதோ என்னைப் பாருங்கள். என் மீது எத்தனை வடுக்கள் தென்படுகின்றன! அப்படி இருந்து நான் இதுவரை நேர்மை மிக்கவனுகவே இருந்து வருகிறேன். ஒரு வேளை அந்த உண்மை என்னும் தத்துவம் என்னுள் இருந்து உதவிபுரிவதுதான் இதற்குக் காரணமோ என்னவோ! கொலை காரர்களின் கத்தியினுல் நசுக்கப்பட்டுப் புதையுண்டு கிடக்கும் 'உண்மை' மறுபடி தலை தூக்கியுள்ளது. காரசாரமான மேற் கோள்களையும் உபமானங்களையும் சொல்லி

லிங்கன் உங்களையெல்லாம் சிரிக்க வைக்கிறார். பிறகு தெற்கேயுள்ள அடிமைத் தொழில்களின் இழிநிலைகளை யெல்லாம் உங்களுக்குப் புரியும்படி வார்த்தைகளால் படம் பிடித்துக் காட்டிக் கண்ணீர் வடிக்கச் செய்கிறார். அவர் மிக்க சாமர்த்தியமாக உங்களை உண்மையின் வாயிற்படியருகில் அழைத்துச் செல்கிறார். ஆனால் நீங்கள் அந்த எல்லைக் கோட்டைத்தாண்ட எத்தனிக்கையில் உங்களது கவனத்தை வேறு பக்கம் திருப்பிவிடுகிறார். தப்பித் தவறிக் கூட அவர் வடக்கேயுள்ள தொழிலாளிகளின் கஷ்ட நிலைமையைப் பற்றிக் குறிப்பிடுவது கிடையாது! நியூ இங்கிலாந்திலுள்ள பஞ்சாலைகளில் வேலை பார்க்கும் ஆயிரக்கணக்கான ஆடவரும் பெண்டிரும் இப்பொழுது வேலைநிறுத்தம் செய்திருக்கிறார்கள் என்பது ஏன் இவருடைய கருத்தில் படவில்லை? இவர் வதியும் பிரதேசத்திற்கு வெகு தொலைவில் இயங்கும் நிகழ்ச்சி அது என்ற காரணத்தினலோ, அவர்கள் ஏன் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள்? காரணம். இவர்கள் அதிகாலையிலிருந்து நள்ளிரவு வரை சூரிய வெளிச்சத்தையே பாராமல் பஞ்சாலைகளிலிலுள்ள ராக்ஷஸத் தரிகளில் தினசரி பதினன்கு மணி நேரம் உழைத்து உருக்குலைகிறார்கள். பிறகு அந்த பயங்கர ஆலைகளை விட்டு ஓய்ந்து வயிற்றுக்குப் போதிய உணவின்றி வாடி வதங்கி எலி வளைகளைப்

போன்ற வரிசை வரிசையாக இருக்கும் தங்களுடைய குடிசைகளுக்குள் சென்று அடைகிறார்கள்! இந்த நாட்டில் சுதந்திரப் பிரஜைகள் என்று சொல்லிக் கொள்ளும் அவர்களுக்கு என்ன சுதந்திரம் இருக்கின்றது? மஸாசுசெட்ஸில் உள்ள நிலைமைகளைத் தான் லிங்கன் தெரிந்துகொள்ளவில்லையென்றால் நமது இல்லினாய்ஸ் ராஜ்யத்திலே ரயில்களே ஓடாமல் இருக்கின்றனவே! அது கூடவா அவரால் தெரிந்து கொள்ள முடியவில்லை? காரணம் இல்லினாய்ஸ் மத்திய ரயில்வேத் தொழிலாளிகள் தங்கள் உரிமைகள் பறிக்கப்பட்டு அடக்கியாளப் படுவதைச் சகியாமல் அவர்களும் வேலை நிறுத்தம் செய்துள்ளார்கள்! அவர்களும் வாழ்க்கைக்குப் போதுமான ஊதியம் கோருகிறார்கள்! அதனால் இப்பிரச்னை வடக்கே பூராவும் ஊடுருவி நிற்கிறது. பட்டினியால் வாடும் தொழிலாளிகள் தங்கள் குழந்தைகளுக்குப் போதிய உணவு அளித்துப் போஷிக்க முடியாமையால் ஆத்திரமடைந்து கலவரங்களை உண்டு பண்ணிக் கொண்டு வீதிகளில் ஊர்வலம் வருகின்றனர்! இதுவா சுதந்திரம்? இதுவா சமதர்மம்? திரு. லிங்கனே அடிக்கடி சுதந்திரத்தைப் பற்றியும் சமத்துவத்தைப் பற்றியும் பிரசங்கம் செய்கிறார். அவர் திரும்பத் திரும்ப லவ்ஜாயையும் நீக்ரோ அடிமைத்தனத்தை ஒழித்துக்கட்ட வேண்டுமென்று கூவும் மற்றையோரும்

உபயோகித்த தர்க்கவாத முறையையே தானும் உபயோகப் படுத்துகிறார். அதாவது புனிதமான சட்டத்தின் மூலம் எல்லா மக்களுக்கும் சமத்துவமும், சுதந்திரமும் சுதந்திரப் பிரகடனத்தின் மூலம் அளிக்கப் பட்ட பிறகு நீக்ரோக்களும் நம்முடன் சரி சமத்துவமானவர்கள் என்று அவர்களுடைய பிறப்பு உரிமையை மறுக்கமுடியாது என்பதாம். ஆனால் இந்த முட்டாள்தனமான நம்பிக்கைக்கு, நேர்மாறாக டிரெட் ஸ்காட் விஷயத்தில் பிரதம நீதிபதி பானே உயர் நீதி மன்றத்திலே தெள்ளத் தெளிவான தீர்ப்பு அளித்துள்ளார். இந்த முடிவினால் நீக்ரோக்கள் உயர் வகுப்பினரால் அடிமைப் படுத்தப் பட்டு கீழ்ப் பணிந்து நடக்கும் தாழ்ந்த வகுப்பினரே! சொத்து, மற்ற சாமான்களின்மேல் எப்படி உரிமை பாராட்டலாமோ அதுவேபோல் நீக்ரோக்களின் மீதும் உரிமை பாராட்டலாம் என்று வெட்ட வெளிச்சமாகக் கூறுகிறது அந்தத் தீர்ப்பு. இவ்வாறிருக்கையில் அந்த உரிமைகளையே மறுத்துக்கூற எத்தனிக்கிறார் லிங்கன். அப்படி அவர் வெளிப்படையாகக் கூறாவிட்டாலும் டிரெட் ஸ்காட் வழக்கில் அளிக்கப்பட்ட தீர்ப்பு ஒருதலைப் பட்சமான தீர்ப்பு; அதை மக்கள் ஒருமுகமாகப் புறக்கணிக்க வேண்டும் என்றும் சாற்றுகிறார். இப்படி உயர்நீதி மன்றத்தின்மீது மக்களுக்குள்ள நம்பிக்கையையும் அதன் அப்பழுக்கற்ற

தூய தன்மையையும் குலைக்க முயற்சி செய்கையில் புரட்சிக்கு விடுத்திடுகிறோம் என்பது லிங்கனுக்குப் புரியாமல் போகாது! அவரும் ஒரு சட்ட நிபுணர் ஆயிற்றே! சட்ட பூர்வமான ஸ்தாபனங்களுக்கு எதிராக அவர் மக்கட் புரட்சியை உண்டு பண்ண எத்தனம் செய்கிறார். மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டு கூட்டம் கூட்டி பலாத்கார நடவடிக்கைகளில் ஈடுபடும்படிச் செய்கிறார். அவர் நம் சகோதரர்களுக்குள்ளேயே ஒருவருக் கொருவரிடம் பகைமையை மூட்டிவிடுகிறார்! இவற்றின் விளைவாக கண்டிப்பாக உள்நாட்டுப் போர்தான் ஏற்படும்! டிரெட் ஸ்காட் வழக்கு முடிவைப் பற்றி எனது அபிப்பிராயத்தைச் சொல்லச் சொல்லுகிறார். அதற்கு நான் "உயர்நீதி மன்றத்தின் தீர்ப்புக்களையே நாட்டின் தீர்ப்பாக—முடிவாகக் கொள்கிறேன், அதன்படி கீழ்ப்பட்டு நடக்கவும் விரும்புகிறேன்!" என்று பதில் அளிக்கிறேன், "இன ஒற்றுமை" வேண்டும் என்று போதிக்கும் வெறியர்கள் நீக்ரோக்களை மணந்து கொண்டு அவர்களுடனேயே கலந்து உண்டு உறங்கி வாக்களிக்கும்படி கேட்கிறார்கள். அவர்களுடைய வெறும் கூச்சல்களுக்கெல்லாம் மதிமயங்கிவிட மாட்டேன். அத்துடன் நான் இன்னொன்று சொல்லுவேன்—ஒவ்வொரு ராஜ்யமும் அக்கம் பக்கத்திலுள்ளவர்களுக்குத் தொல்லை கொடுக்காமல்

*தனது காரியங்களைக் கவனிக்க வேண்டும் இந்தக் கொள்கையுடன் நாம் உறுதியாக இருப்போமே யானால் பிறகு இந்த மாபெரும் குடியரசு சுதந்திர ராஜ்யங்களாகவும் அடிமை ராஜ்யங்களாகவும் இரு கூறுகப் பிளவுபட்டு நீண்ட நாட்களுக்கு நிலைத் திருக்க முடியும் என்பதை லிங்கன் அறிந்து கொள்ளுவார். இப்படியே நாம் எப்பொழுதும் போல செல்வத்தையும், ஜனத் தொகையையும், சக்தியையும் மேலும் மேலும் அதிகரித்தபடி வாழ முடியும். கடைசியாக நம்மைக் கண்டு உலகம் பாராட்டும், பீதியடையும்! (அவர் எதிரேயுள்ள கூட்டத் தினரைப் பார்க்கிறார். பிறகு திரும்பிச் சென்று தனது இடத்தில் அமருகிறார்.)*

**நினியன்:** *(எழுந்தபடி) லிங்கன் (ஆபி தனது குறிப்புகளை ஒருமுறை பார்த்துக்கொள் கிறார். தனது தொப்பியைக் கழற்றி அதற்குள் குறிப்புகளைப் போட்டுவிட்டு எழுந்திருந்து முன்னால் வருகிறார். அவர் மிகவும் அமைதியாகவும், நேர்மையாகவும் பேசுகிறார். அவரது வார்த்தைகள் ஒவ்வொன்றும் இருதயத்திலிருந்து தூய உணர்ச்சியுடன் வெளி வருகின்றன.)*

**ஆபி:** *நீதிபதி டக்ளஸ் கத்தியைக்கையாளும் எனது திறமைக்குப் பாராட்டுக் கூறினர் அதற்கு நன்றி. ஆனல் அந்தக் கலையில் என்னைவிட அவர் கை தேர்ந்தவர் என் பதை ஏற்றுக்கொள்கிறேன். நீதிபதி*

அவர்கள் தெற்குப் பகுதியில் அடிமைத் தனத்தைக் கண்டிக்கிறார். அதே நேரத்தில் வடக்கே அது பரவக் கூடாது என்றும் சூடாகப் பேசுகிறார். ஒரு புறம் ராஜ்யங்களின் சுய நிர்ணய உரிமைக்கும், மறு புறம் ஐக்கிய இமைப்புக்கும் விசுவாசம் செலுத்த இவர் முயலுகிறார். இந்நிலை எனக்கொரு கதையை நினைவுறுத்துகிறது. கெண்டகியில் ஒருவன் ஒருநாள் கரடி ஒன்றுடன் சண்டை போட்டுக் கொண்டிருந்தான். மனைவி அதனை வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தாள். "சும்மா நிற்கிறாயே! உற்சாக மூட்டுவதுபோல ஏதேனும் நாலு வார்த்தை கூறக் கூடாதா" என்றான் அவன். அதற்கு அந்த மனைவி கணவனையும், கரடியையும் பார்த்து "சண்டை போடுங்கள்! , நன்றாக சண்டை போடுங்கள்" என்று சொன்னாளாம். நீதிபதி அவர்கள் கருப்பர்களோடு உணவு அருந்தி ஆடிபாடி மகிழ்வதைப் பற்றிக் கூறியதைக் கேட்டீர்கள்! என்னைக் குறிப்பிட்டு அவர் கூறினாரா என்பது எனக்குத் தெரியவில்லை. ஆனால் ஒன்று கூறுவேன் நீக்ரோ மாது ஒருத்தியை நான் அடிமையாகக் கொள்ள விரும்பவில்லை என்றால் அவளை மனைவியாக்கிக் கொள்வது என்று அர்த்தமல்ல. நீக்ரோமாது எனக்கு அடிமையாக இருக்கக் கூடாது என்று எப்படிக் கூறுகிறேனோ அதேபோல அவளை மனைவியாக்கிக் கொள்ளவும் நான் விரும்ப

வில்லை. அவர்கள் உழைப்பின் பயனை அவர்களே அனுபவிக்கும் அளவுக்கு நீக்ரோக்களும் உரிமை படைத்தவர்கள் தான். நீதிபதிக்கு ஒன்று நினைவுபடுத்த விரும்புவேன் "அடிமை முறை அமுலில் இருக்கும் ராஜ்யங்களில்" நான்கு லட்சம் பேர் வெள்ளை—கறுப்பு இனத்திற்குப் பிறந்துள்ளனர். அவர்கள் அனைவரும் நிறவெறி எதிர்ப்பாளர்களின் குழந்தைகளல்ல என்பதை நீதிபதி நினைவில் கொள்வாராக! நியூ இங்கிலாந்தைப்பற்றி இங்கே கூறப்பட்டது. அங்கே நிலவும் வறுமையையும் கோரத்தையும் நான் கண்டவன்தான்! கறுப்பு அடிமைகள் கொய்த பஞ்சை, வெள்ளையர்கள் துணியாக்குவதைக் கண்டேன், ஆனால் நீக்ரோவுக்கும் அமெரிக்கனுக்கும் இடையில் இருந்த வேறுபாடு ஐம்பது சதம் தான்! இதனைக் கண்டு எந்த அமெரிக்கன் பெருமைபட முடியும்? ஆனாலும் வடக்கே இருக்கும் பிரச்னைகளுக்குப் பரிகாரம் தெற்கே இருக்கிறது என்று யார் சொல்லுவார்கள்? அது மட்டுமின்றி அவர்கள் வேலை நிறுத்தம் செய்கிறார்கள் என்றால் அதற்கான உரிமை அவர்களுக்கு உண்டு என்பதை நமது அரசியலமைப்பு ஏற்றுக் கொண்டுள்ளது. இதனால் நான் புரட்சியைக் கிளப்புவதாக ஆகாது. நாம் நிறுவும் நிறுவனங்களைக் காப்பாற்றவும், சர்க்காரை வேண்டும் போது திருத்தவும், மாற்றியமைக்கவும், தூக்கி

யெரியவும் ஆன உரிமை நமது மக்களுக்கு உண்டு. இந்த உரிமையைத்தான் நமது முன்னோர்கள் நமக்கு அளித்துவிட்டுச் சென்றுள்ளனர்.

சுப்ரீம் கோர்ட் நீதியைப் பற்றிக கூறப்பட்டது இங்கே. சுப்ரீம் கோர்ட் நீதிபதிகளும் மனிதர்கள்தான். அவர்கள் நீதி செலுத்தும்போது—நீதி மன்றத்துக்கு தொடர்பில்லாத சில விஷயங்களின் கவர் சியிலும் அவர்கள் ஈடுபடுகிறார்கள். அது மட்டுமின்றி இந்த நீதிபதிகள்—தெற்கு ராஜ்யங்களின் சலுகை பெற்ற வகுப் பிலேயிருந்து வருபவர்களாகவும் இருக் கிறார்கள் "மற்ற மனிதர்களின் யோக்கி யதை எப்படியிருக்கிறதோ அப்படித் தான் நீதிபதிகளின் நாணயமும் இருக் கிறது என்று கூறினார் ஒருவர். அவர் வேறுயாருமல்ல (சற்றே நீதிபதி டக்ளஸ் பக்கம் திரும்பியவாறு) தாமஸ் ஜெபர்ஸன் தான்!

டிரெஸ்காட் தீர்ப்பு எதைக் காட்டு கிறது? சொத்துரிமை, மனித உரிமை ஆகிய இரண்டுக்கும் இடையே இருந்து வரும் பிரச்னை மிகப் பழமையானது. நானும், நீதிபதி டக்ளஸ் போன்றவர்களும் வாயை மூடிக்கொண்டே இருந்தோமானல் அதுவும் நீடித்துக் கொண்டே இருக்கும். இரு கொள்கைகளுக்கிடையே ஏற்பட்ட இந்த சண்டை இன்று, நேற்று தோன்றிய தல்ல. மனித உரிமை என்பது மனித

இனத்தின் பொதுவான உரிமையாகும். சொத்துரிமை அரசர்களுக்கு உரியதாகும். "நீ பாடுபட்டு உழைத்துப் பயிர் செய்! நான் அந்த உணவை உண்கிறேன்" என்பது தான் சொத்துரிமை! அது அரசர்களின் உரிமை. இதே போல ஒரு இனம் மற்றொரு இனத்தை அடக்கியாள நினைத்தால், அதுவும் அரசர்களுடைய செய்கையைப் போல கொடுமையாகத் தானே இருக்க முடியும்? 'எல்லோரும் ஒன்று' என்று கூறித்தான் மனித உரிமை பிரகடனத்தை நாம் துவக்கினோம். இன்றோ "எல்லோரும் ஒன்று நீக்ரோக்களைத் தவிர ........" என்று கூற விரும்புகிறோம். இப்படியே போனால் நிலைமை எங்கு கொண்டு போய் விடும் தெரியுமா? "எல்லோரும் ஒன்று. நீக்ரோக்களைத் தவிர, அந்நியர்களைத் தவிர, கத்தோலிக்கர், யூதர்களைத் தவிர" என்று துவங்கி "எல்லோரும் ஒன்று ஏழைகளைத் தவிர என்பதில் வந்து முடியும்! அடிமைத்தனத்துக்கு வக்காலத்து வாங்குபவர்கள், நம்மை அழைத்துச் செல்லக் கூடிய இடம் அதுதான். நமது நீதிபதி டக்ளஸூம் அவரது தோழர்களும் அதனையே விரும்புகிறார்கள். "ஒவ்வொரு ராஜ்யமும் அதனதன் வேலையை கவனித்துக் கொள்ளட்டும்" என்று அவர்கள் கூறுகிறார்கள். இப்போதைக்கு அது சரியாகத் தோன்றலாம். மனிதர்களில் ஒரு பகுதியினரை அடிமைப்படுத்தி விலங்கு

களைப் போலாக்கி, மனித உரிமைகளைப் பறித்து, ஒதுக்கினீர்களேயானல், அதனல் உண்டாகும் அந்த வெறிப் பேய் உங்களைப் பலிகொள்ளாது என்பது என்ன நிச்சயம்? இப்படிக் கூறுவதனல் நான் உள்நாட்டுப் போரைக் கிளப்பிவிடவில்லை, ஜனநாயகத்தின் அடிப்படையான தன்மைகள் உயர்ந்தவை. அவை நம்மை உயர்த்தின. இன்னும் அவை நம்மை உயர்த்தும் என்று தான் கூற விரும்புகிறேன். அடிமை முறை ஆதரவாளர்கள் மட்டுமின்றி நீதிபதிடக்ளஸைப் போன்று 'இருப்பது இருக்கட்டும்' என்று கூறுகிறவர்களும் கூட, ஜனநாயகத்திற்கு தீங்கே விளைவிக்கிருர்கள், நான் ஏன் அதனை வெறுக்கிறேன்! அடிமைத்தனம் என்பது பயங்கரமான அநீதி! அடிமைத்தனம் என்பது உலகில் நமது குடியரசின் செல்வாக்கை அழித்து விடும்; சுதந்திர உலகத்தில் நமக்குக் கிடைக்க வேண்டிய பெருமையை, கௌரவத்தை, மரியாதையை பாழ்படுத்தி விடும். நண்பர்களாயுள்ள நாடுகள் நம்மைக் கண்டு ஐயங்கொள்ளும். அடிமைத் தனமானது பிரஜா உரிமைகளின் அடிப்படையை வெட்டிச் சாய்க்கிறது. "சுயநலம்தான் வேண்டும். ஒரு நடவடிக்கை எடுக்க கொள்கை எதுவும் தேவையில்லை" என்று சொல்லும் நிலையை அடிமைத்தனம் உண்டாக்குகிறது. நீதிபதி தனது முடிவுரையில் "உலகம் நம்மைக் கண்டு அஞ்சும்" என்க்

*கூறினர். அது அல்ல நான் விரும்புவது. வழிகாட்டியாக முன்னேறுவதற்கு உதா ரணமாக நாம் விளங்க வேண்டும். அப்படி எப்பொழுது விளங்க முடியும்? ராஜ்யங் கள் இணைந்து ஐக்கியமாக இருப்பதன் வாயிலாக; பிரிவு, இனம், வகுப்பு என்ற பிளவே இன்றி எப்போது நாம் வாழு கிறேமோ அப்போதுதான் நாம் உலகுக்கு வழிகாட்ட முடியும்! "இரு பிளவுகள் கொண்ட சபை நிலையானது அல்ல" என்று கூறுவதுண்டு. பாதி அடிமைத் தனத்தையும், பாதி சுதந்திரத்தையும் அனு மதிக்கிற இந்த ஆட்சி நிரந்தரமாக நீடிக் கும் தகுதி பெற்றதல்ல எனக் கூறிக் கொள்கிறேன். (லிங்கன் தனது இருக் கைக்கு திரும்பிச் செல்கிருர்.)*

*(விளக்கொளி மங்குகிறது.)*

(ஒன்பதாவது காட்சி முற்றிற்று)

## காட்சி 10

எட்வர்ட்சின் வீட்டிலுள்ள சம்பாஷணை நடத்தும் பொது அறை 1860-ஆம் ஆண்டு இளவேனிற் காலம், ஒரு நாள் பிற்பகல் நேரம்.

ஆபி தன் துடையின்மீது ஏழு வயதான மகன் டாட்டை உட்கார வைத்துக்கொண்டு வலப்புறமுள்ள சோபாவில் அமர்ந்திருக்கிருர். பக்கத்தில் ஒன்பது வய துள்ள மற்ருெரு பிள்ளை உட்கார்ந்திருக்கிருன். பதி னேழு வயதான மூத்த பிள்ளை ராபர்ட் ஜன்னலுக் கரு

கில் உட்கார்ந்து புகை பிடித்துக்கொண்டிருக்கிறுன். ஹார்வர்ட் சர்வ கலாசாலை மாணவன் அவன். தன் தந்தை ஆபி குழந்தைகளுக்குச் சொல்லிக்கொண் டிருக்கும் கதையை அவனும் கேட்டுக் கொண்டிருக்கி றுன். இடது பக்கத்தில் ஜாஷ் உட்கார்ந்திருக்கிறுர்.

**ஆபி :** *அந்தக் காலத்திலெல்லாம் சாலைகள் இவ்வளவு ஒழுங்காக அமைந்திருக்கவில்லை டாட், அப்பொழுது எல்லாம் கால் மிதி ஒற்றையடிப் பாதைகளாகவே கிடந்தன. இருட்டில் என்ஞல் வழி கண்டு பிடித்து வரவே கடினமாக இருந்தது.*

**வில்லி :** *உங்களுக்கு பீதி உண்டாகவில்லையா?*

**ஆபி :** *ஆமாம், பீதிதான்.*

**வில்லி :** *என்ன, இந்தியர்கள் எதிர்ப்படுவார்கள் என்ற பீதியா?*

**ஆபி :** *இல்லை. இந்தப் பக்கங்களைவிட்டு அவர் கள் நகர்ந்து விட்டார்கள். நான் எங்கு வழி தெரியாமல் தப்பிவிடுவேனே என்றும் அந்தப் பையன் அதற்குள் இறந்து விடு வாஞே என்றும் பயப்பட்டேன். அப்படி நேர்ந்தால் அது என்னுடைய தவருகு மப்பா! ஆனல் கடைசியாக டாக்டரைக் கண்டு பிடித்தேன். அப்பொழுது அவர் படுத்துக் கொள்ளும் நேரம். நான் அவ ரைக் கூப்பிட்டதற்கு முணு முணுத்தார். எப்படியோ கடைசியாக அவரை என்னு டன் கூட்டிச் சென்றேன்.*

**வில்லி :** *பையன் இறந்து விட்டாஞ?*

ஆபி : அதெல்லாம் இல்லே வில்லி. அவன் சாக வில்லே. ஆனல் அவன் ரொம்ப நோய் வாய்ப்பட்டிருந்தான். டாக்டர் அவனுக்கு ஏராளமான மருந்துகள் கொடுத்தார்.

டாட் : ஏன் அப்பா, அது ரொம்ப கசப் பாகவா இருந்தது?

ஆபி : அப்படித்தான் இருந்தது என்று நினேக் கிறேன். ஆனல் அது நன்ருக வேலே செய் தது. அந்த நல்ல மனிதர்களே அதன் பிறகு நான் பார்க்கவேயில்லே. அடிக்கடி அவர் களிடமிருந்து செய்தி வந்து கொண்டிருந் தது. அந்தச் சிறுவனுக்கும் உன் வயது தான் இருக்கும், டாட். ஆனல் அவன் இப் பொழுது பெரியவனுகி உன்னேப் போன்ற ஒரு பிள்ளேக்கும் தகப்பனுகி விட்டான். பனி மலேகளின் உச்சியிலிருந்து உற்பத்தி யாகி ஓடிவரும் நதிக் கரையிலுள்ள பள்ளத் தாக்கில் ஒரு பெரிய பண்ணேயில் வசிக் கிருன். (மேரி உள்ளே வருகிருள்.)

மேரி : ராபர்ட், என்னுடைய அறையிலா புகை பிடிக்கின்ருய்!

ராபர்ட் : (மெதுவாக) ஆமாம், அம்மா. (அவன் எழுந்திருக்கிருன்.)

மேரி : சுருட்டைப் பிடித்து புகை விடுவதை என்னல் சகிக்க முடியாது என்று, நான் உன்னிடம் சொல்லியிருக்கிறேன். எனது அறையிலோ அல்லது என் வீட்டின் எந் தப் பகுதியிலுமோ புகைப்பதை நான் வெறுக்கிறேன்........

ஆபி : *வா மேரி வா—நீ ஒரு ஹார்வர்ட் மாண வனுக்கு மரியாதை கொடுக்கவேண்டும். மரக்கிடங்கிற்குச் சென்று புகைபிடி பாப்!*

ராபர்ட் : *சரி, அப்பா.*

மேரி : *இது மாதிரி மறுபடியும் நடந்து கொள்ள மாட்டாய் அல்லவா!*

ராபர்ட் : *இல்லை அம்மா. (அவன் வெளியே போகிருன்.)*

ஆபி : *ஒரு காலத்தில் எனக்கு அறிமுகமான சில நிபுணர்களைப் பற்றி கதையொன்றை நான் பையன்களுக்குச் சொல்லிக் கொண் டிருந்தேன்.*

மேரி : *குழந்தைகளா நீங்களெல்லாம் சாப்பிட வேண்டிய நேரம் வந்து விட்டது. (பிள்ளை களெல்லாம் உடனே ஒழுங்காக எழுந் திருந்து செல்ல எத்தனிக்கின்றன.)*

வில்லி : *அதன் பிறகு என்ன நடந்தது அப்பா?*

ஆபி : *ஒன்றுமில்லை. அதன் பிறகு எல்லோரும் சந்தோஷமாக வாழ்ந்தனர். சரி நீங்கள் ஓடலாம். (வில்லியும் டாட்டும் வெளியே ஓடுகின்றனர்.)*

ஜோஷ் : *நாலரை மணி ஆகிவிட்டது ஆபி. அவர் களெல்லாம் இனி எந்த நேரத்திலும் வந்து விடுவார்கள்.*

ஆபி : *(எழுந்திருந்து) அட, கடவுளே! அதை மறந்தே விட்டேனே.*

மேரி : *(ஆபியின் பக்கம் சரேலென்று திரும்பி) யார் அந்த 'அவர்கள்?'*

ஆபி: கிழக்கே யிருந்து சிலர் வருகிறார்கள். அவர்களில் கிரிம்மின் என்னும் அரசியல் தலைவர் ஒருவர், திரு. ஸ்டார்வ்சன் ஒருவர் —அவர் ஒரு தொழிற்சாலை நடத்துபவர் —தவிர பாஸ்டனைச் சார்ந்த பாதிரி, டாக்டர் பார்ரிக்கும் அதில் ஒருவராக வருகிறார்.

மேரி: (கடுமையாக) அவர்கள் இங்கு எதற்காக வருகிறார்கள்?

ஆபி: அவர்களுடைய நோக்கம் எதுவென்று எனக்குச் சரியாகத் தெரியாது. ஐக்கிய அமெரிக்காவின் ஜனாதிபதி பதவிக்குப் போட்டியிடத் தகுதியுள்ள அபேட்சகர் தானா நான் என்று பார்த்து அறிந்து கொள்ள வரக்கூடும் என்று ஊகிக்கிறேன். (மேரி, ஒருகண நேரம், பேசாமல் இருந்தாள்) ஒருவேளை அவர்கள் நாம் இன்னமும் அந்த மர வீட்டிலேயே குடியிருக்கிறோமா? பன்றிகளை படுக்கைக்குக் கீழ் வைத்துக் கொண்டிருக்கிறோமா என்று கண்டு அறிய விரும்பியிருக்கலாம்.

மேரி: (ஆத்திரத்துடன்) நீங்கள் என்னிடம் சொல்லவில்லையே!

ஆபி: மன்னிக்க வேண்டும் மேரி—இவ்விஷயம் எனக்கு மறந்து விட்டது.

மேரி: என் வீட்டிற்கு இதுவரை வந்திராத முக்கியமான விருந்தினர்கள் வரப் போகிறார்கள் என்பதை என்னிடம் சொல்ல மறந்து விட்டீர்களே.

ஆபி: *அவர்கள் விருந்தினர்கள் அல்ல. அவர்கள் இங்கு ஏதோ காரியமாகத்தான் வருகிறார்கள்.*

மேரி: *(வருத்தத்துடன்) அதுவும் முக்கியமான காரியமாகத்தான் இருக்கவேண்டும். நாம் இப்பொழுது உள்ள அழுக்குப் பிடித்த அநாகரிகமான நிலையிலேயே, சுருட்டுப் புகையின் துர்நாற்றம் நிறைந்த நமது வீட்டிலேயே நம்மைக் காணவேண்டுமென்று எண்ணுகிறார்கள் போலும்.*

ஆபி: *ஹாவர்ட் சர்வகலாசாலையில் படிக்கும் பிள்ளையொருவன் நமக்கு இருக்கிறான் என்பதை எடுத்துச் சொன்னால் போகிறது.*

மேரி: *எனக்கு மட்டும் அவர்கள் வருவது முன்னால் தெரிந்திருந்து, அவர்களுக்கான முன்னேற்பாடுகள் செய்ய நேரம் இருக்குமானால் எப்படி யெல்லாம் உபசரிக்க ஏற்பாடு செய்திருப்பேன் தெரியுமா? அதிருக்கட்டும். நீங்கள் ஏன் நல்ல ஆடை அணிந்து கொள்ளவில்லை? அந்தப் பழைய கந்தல் பூட்ஸுகளையே ஏன் அணிந்து கொண்டிருக்கிறீர்கள்........!*

ஆபி: *மேரி, நான் இந்த அழுக்குப் படிந்த பூட்ஸுகளைச் சற்று சுத்தம் செய்து போட்டுக் கொள்ளுகிறேன். அவர் இந்தச் சங்கடத்திலிருந்து தப்பித்துக் கொண்டு சந்தோஷமாக வெளியே போகிறார். மேரி அவரையே பார்த்துக் கொண்டிருக்கிறாள். அவளுடைய உதடுகள் துக்கத்தால் 'துடிக்*

கின்றன. அவள் கண்ணீர் விடாமல் கட்டுப்படுத்திக் கொள்கிருள்.)

மேரி : (வருத்தத்துடன் உட்கார்ந்துகொண்டே) ஜாஷ்வாஸ்பீட் உங்களுக்குத்தான் தெரியுமே. ஆரம்பத்திலிருந்து எல்லா விவரங்களும். முதலில் நாங்கள் ஒருவரை யொருவர் காதலித்ததும், பிறகு மனமாற்றம் ஏற்பட்டதும், மறுபடி ஒன்று சேர்ந்ததும், திருமணம் செய்து கொண்டதும் அதன் பிறகு பதினெட்டு ஆண்டுகளாகக் கூடி வாழ்ந்து வருவதும் எல்லாம் உங்களுக்குத் தெரிந்தவையே. ஆனல் நீங்களும் மற்றவர்களைப் போலவே நான் ஒரு சச்சரவுக்காரி என்றும் அவருடைய நல்ல உள்ளத்தையே மாற்றி கீழ் நிலைக்குக் கொண்டு வந்து விட்டவள் என்றும் நினைக்கலாம்........

ஜாஷ் : (அமைதியுடன்) அதெல்லாம் இல்லை, மேரி. அப்படி நான் கருதவில்லை. ஆனல் எனக்கு ஆபியைப் பற்றியும் நன்ருகத் தெரியும் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்.

மேரி : இவரைப்போல் இன்னொருவர் இருப்பாரா என்பதே எனக்குச் சந்தேகம். உலகில் மேல்நிலைக்கு வந்துள்ள மற்றவர்களின் வரலாற்றில் எதிரிகள் இருந்துள்ளதை நான் கண்டுள்ளேன். இவருக்கோ எதிரிகள் இல்லை. நண்பர்களும் இவரிடம் நல்ல நம்பிக்கை உள்ளவர்கள்தான். இவரைக் காண்பதற்கு முன்பேயே இவருக்கு

நல்ல எதிர்கால மிருக்கிறது என்று கேள் விப்பட்டேன். கண்டதும் அது உண்மை என்றே எனக்குத் தோன்றியது. அவர் அதனை உணரவில்லை. நம்பவில்லை. பெரிய மனிதனுகக்கூடிய வாய்ப்பு சிறிதேனும் இருந்தால் அதனையும் தவிர்க்கவே முயற்சி செய்தார். கரடுமுரடான வாழ்க்கைப் பாதையில், கொடுமை நிரம்பிய விரத வாழ்க்கையின் மூலம் ஏதோ ஒரு எதிர் காலத்தை நோக்கி போவது என்பது அவரிடம் உள்ள ஒரு சங்கடம். இந்த நிலையிலிருந்து அவரை மீட்க எவ்வளவோ முயற்சி செய்தேன். அத்தனையும் வீணு யிற்று. இப்போது அதிருஷ்டம் கதவை வந்து தட்டுகிறது. அவர் இதனைப் பயன் படுத்திக் கொள்ளவேண்டும். நான் என்ன செய்வேன்? நான் சாகும் அளவு ஓய்ந்து போய் விட்டேன். (கண்ணீர் உகுக்கிருள்.) அவரை நான் விரும்பும்படி உருவாக்க முயன்றேன். தோல்வி கண்டேன். நானே இப்போது உடைந்து போய்விட்டேன்.... (அவள் கடுமையாகத் தேம்புகிருள்) (ஜாஷ் அவளுக்குப்பின் அமர்ந்து அவளைத் தேற்றுகிருர்.)

**ஜாஷ்** : மேரி, நீ இப்படி வருத்தப்பட்டுக் நொந்து கொள்வதற்கு எவ்வித காரணமும் இல்லை. என்ன நடந்தாலும் எல்லாம் வல்ல இறை வன் ஒருவன் இருக்கிருன் என்பதை நினை வில் வைத்துக் கொள்ளவேண்டும். பைத்தி யக்காரர்கள், சந்யாசிகள் அனைவரது

வாழ்க்கைப் போக்கையும் அந்தக் கடவுள் தான் நிர்ணயிக்கிறார். அதனால் ஆபி லிங்கனையும் அவரே காத்து ரக்ஷிப்பார். (ஆபி மறுபடி திரும்பி வருகிறார்.)

ஆபி: (காலில் அணிந்திருந்த பூட்ஸுகளை பார்த்தவாறே) இப்போது இவை சரியாக இருக்கிறது என்று நினைக்கிறேன் மேரி! (மேரியை உற்றுப் பார்க்கிறார். அவள் தனது உணர்ச்சிகளைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொள்ள முயல்கிறாள்.)

மேரி: அவர்களை யெல்லாம் நீங்கள் இந்த அறையில் வரவேற்று உபசரிக்கலாம். நான் சமையல் அறையில் அவர்களுக்காக சிற்றுண்டி தயார் செய்கிறேன். (அவள் அங்கிருந்து போகிறாள். ஆபி அவளை வருத்தத்துடன் பார்க்கிறார். இடையே சில வினாடி மௌனமாக இருக்கிறார். கடைசியில் ஆபி பேசுகிறார்.)

ஆபி: இவர்களெல்லாம் நல்ல செல்வாக்கு உள்ளவர்கள் போலத்தான் தோன்றுகிறது.

ஜாஷ்: சிவார்டின் அபேட்சா பத்திரத்தை நிராகரிக்கும் அதிகாரம் படைத்த மூவர் தூது கோஷ்டியினரிடம் இவர்களுக்கு நல்ல செல்வாக்கு உண்டு.

ஆபி: அதிருஷ்டவசமாக அவர்கள் என்னை அபேட்சகராக நியமித்தால் தேர்தலில் நான் ஜெயித்து விடலாம் என்று நீங்கள் எண்ணுகிறீர்களா?

ஜாஷ்: அவர்கள் அப்படிச் செய்தால் தேர்தலில் உங்களுக்கு வெற்றி கிட்டுவதற்கு நல்ல வாய்ப்பு உண்டு. தேர்தலுக்கு நான்கு பேர்கள் போட்டி இடுகிறுர்கள். அவர்கள் ஒருவரோடொருவர் மோதிக்கொள்வதற்கிடையே தங்களைப்போன்ற ஒரு கறுப்புக் குதிரை ஒன்று எதிர்பாராமல் வெற்றி அடைய வாய்ப்பு அளித்துவிடும்.

ஆபி: ஆனல் கறுப்புக்குதிரை வேறு திசை நோக்கி ஓட ஆரம்பித்துவிடும்.

ஜாஷ்: நீங்கள் உங்களிஷ்டப்படி நடக்கலாம். நான் ஒன்றும் பந்தயம் கட்டப் போவதில்லை.

ஆபி: (புன் சிரித்தவாறே) என்னைப் போன்ற வயதானவனை ஒரு பந்தயக் குதிரையோடு ஒப்பிடுவது தகாது. எனினும் சில சிறந்த ஜாக்கிகள் மெண்டர்கிரஹாம், பௌலிங் கிரீன், பில்ஹொர்ன்டார்ன். நீங்கள்—மேரி ஆகியோர் உள்ளனர். எல்லோரையும் விட மேரியைத்தான் கூறவேண்டும்.

ஜாஷ்: (ஆபியைப் பார்த்தவாறே) அவர்கள் இப்போது பயன்தரமாட்டார்கள்! நீங்கள் தான் அவர்களை உதறி யெறிந்துவிட்டீர்களே! முதல் போட்டியிலேயே டக்ளஸ் உங்களிடம் அகப்பட்டுக்கொண்டு விழித்தார். இரண்டாவது போட்டியிலும் நீங்கள் ஈடுபடுவது என்று முடிவு செய்தால் அதே நிலைமைதான் ஏற்படும்! ஆனல் நீங்கள் அப்படிப்பட்ட முடிவுக்கு வரமாட்டீர்கள்

என்றே சந்தேகிக்கிறேன்....(கதவு மணி அடிக்கிறது. ஜாஷ் எழுந்திருக்கிருர்.)

**ஆபி :** அவர்கள் வருகிருர்கள் போலிருக்கிறது.

**ஜாஷ் :** நான் போய் மேரிக்கு ஒத்தாசையாக இருக்கமுடியுமா என்று பார்க்கிறேன். (புறப்பட்டு கதவுவரை போனவர் திரும்பி ஆபியை நோக்கியவாறே அமைதியுடன் பேசுகிருர்.) ஆனல் உங்களிடம் ஒன்று சொல்ல விரும்புகிறேன் ஆபி. இந்த நாட்டில் ஏறத்தாழ 20 மில்லியன் மக்கள் இருக்கிருர்கள். அவர்களில் பெரும்பாலோர் உங்களைப்போல ஏழைகள் தாம். அவர்கள் எல்லோரும் மிக்க கஷ்டஜீவனம் நடத்துகிருர்கள். அவர்களுடைய உண்மையான கஷ்டநிலேகளே உணர்ந்து உங்களைப் போன்று பாடுபடுவர்களேயே அவர்கள் விரும்புகிருர்கள். அதனல் இந்த கனவான்கள் வரும்பொழுதே அவர்களிடம் சற்றுச் சாந்தமாகவே நடந்து கொள்ளுங்கள். (ஆபி—பல்லே இளிக்கிருர். ஜாஷ் அவரை திரும்பிப் பார்க்கிகிருர்). இருந்தாலும் நான் சொல்லும் புத்திமதியை நீங்கள் தான் பொருட்படுத்துவதில்லேயே! (ஜாஷ் போகிருர். கதவை ஒரு பணிப்பெண் திறக்கிருள். ஸ்டர்வ்சன்; பார்ரிக், கிரிம்மன் ஆகிய மூவரும் உள்ளே வருகின்றனர். அவர்களில் ஸ்டர்வ்சன் சற்று வயதான வழுக்கை விழுந்த பணக்காரர். பார்ரிக் எப்பிஸ்கோபல் வகுப்பை சார்ந்தவர் கிரிம். மின் ஹாஸ்யம் நிறைந்த அறிவாளி.)

**ஆபி:** *வாருங்கள் கிரிம்மின் உங்களை மறுபடி யும் பார்த்ததில் ரொம்ப சந்தோஷம் (அவர்கள் கை குலுக்குகின்றனர்.)*

**கிரிம்மின்:** *சௌக்கியமா திரு. லிங்கன்? இதோ இவர்தான் டாக்டர், பார்ரிக்; போஸ் டனைச் சார்ந்தவர். அதோ அவர் பிலடல் பியாவைச் சார்ந்த திருவாளர். ஸ்டர்வ்சன்.*

**டாக்டர்பார்ரிக்:** *லிங்கன் அவர்களே.*

**ஸ்டர்வ்சன்:** *தங்களை அறிமுகம் செய்து கொண்டது எனக்கு ரொம்பவும் பெருமை திருவாளரே.*

**லிங்கன்:** *ரொம்ப நன்றி உங்களையெல்லாம் இப்படி உட்காரும்படி கேட்டுக்கொள் கிறேன். (அவர்கள் உட்காருகின்றனர்).*

**கிரிம்மின்:** *இங்கே புகை பிடித்தல் திருமதி லிங்கன் ஆட்சேபிக்க மாட்டாரல்லவா?*

**ஆபி:** *தாராளமாகப் பிடிக்கலாம். உங்களை யெல்லாம் வரவேற்க என் மனைவி இங்கு இல்லையே என்று வருந்துகிறேன். ஆனல் இன்னும் சுற்று நேரத்தில் வந்து விடுவாள் (அவரும் உட்கார்ந்து கொள்ளுகிறார்.)*

**ஸ்டர்வ்சன்:** *நாங்கள் இப்பொழுது அசைக்க முடியாத மனஉறுதி படைத்த ஒருவருடன் பேசிக் கொண்டிருக்கிறோம். லிங்கன், வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்ற முறையில் பேசும் இயல்புடையவராயிற்றே தாங்கள். எனவே சுற்றி வளைக்காமல் விஷயத்தை உடனே தங்களுக்குத் தெரி விக்க விரும்புகிறோம் மன்னிக்கவும்.*

ஆபி : *நீங்கள் சொல்லுவது புரிகிறது, என்னுடைய சொந்த ஊரிலே வந்து எனது நிலைமையைக் கண்டறிந்து கொள்ள நினைத்துள்ளீர்கள் என்பது புரிகிறது. அப்படியே நீங்கள் செய்யலாம்.*

ஸ்டர்வ்சன் : *வரப்போகும் தேர்தல் எதிர்ப்புக்களை யெல்லாம் புத்திசாலித்தனமாகச் சமாளித்துத் தைரியமாக நிதானக் கொள்கையுடன் போட்டியிடக்கூடிய அபேட்சகர் ஒருவர் எங்களுக்குத் தேவை என்பது எல்லோரும் அறிந்ததே. இந்த நாட்டில் உள்ள உங்கள் பெரும்பாலான நண்பர்கள் நீங்கள் தான் அதற்குத் தகுதியானவர் என்று உறுதியாக நம்புகிறார்கள்.*

ஆபி : *முதன் முதலில் அரசியல் பதவிக்காக நியூசேலம் பகுதியில் என்னை நியமித்த போது நான் எனது நிதானமான கொள்கைகளை நிரூபித்துக் காட்டினேன். அதிலிருந்து பிறழவில்லை என்பதை சமீபத்தில் நிரூபித்துள்ளேன்.*

பார்க் : *(சிரித்துக்கொண்டே) அப்படியானால் எங்களுக்குத் தேவையான அபேட்சகர் நீங்கள் தான் என்பதை ஒத்துக்கொள்கிறீர்களா ?*

ஆபி : *உத்தமரும், ராஜ தந்திரியுமான சீவார்டைப்போன்ற ஒருவர் அபேட்சகராக நிற்க தயாராக இருக்கையில் என்னுடைய தகுதியைப் பற்றி நானே சொல்லிக் கொள்ள தயாராக இல்லை.*

**ஸ்டர்வ்சன் :** மேல்சபை அங்கத்தினர் டக்ளஸுடன் தாங்கள் நடத்திய ஒரு முக்கிய விவாதத்தில் அவர் வடக்கேயுள்ள தொழிலாளர்களின் நிலையைப் பற்றி விரிவாக எடுத்துப் பேசினர். பதிலுக்குத் தாங்கள் தெற்கேயும் அடிமைகளின் இழி நிலையைப் பற்றி விரிவாகச் சொன்னீர்கள்.

**ஆபி :** ஆமாம். அது எனக்கும் ஞாபகத்திற்கு வருகிறது. சுதந்திர ராஜ்யங்களிலுள்ள தொழிலாளர்களுக்கு வேலை நிறுத்தம் செய்யும் உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு நாம் பெருமைப்பட வேண்டும் என்று அப்பொழுது நான் பேசினேன். இது வெறும் ஒரு தந்திரமான பேச்சல்ல. உண்மையாக உள்ள நிலைதான் அது.

**ஸ்டர்வ்சன் :** அப்படித் தாங்கள் பேசியது தொழிலாளர் சமூகத்தினரிடையே கணிசமான ஆதரவை ஏற்படுத்தியுள்ளது. அதனுல் உங்களுக்கு நன்மைதான். ஆனுல் வியாபாரிகளிடையே ஒரு பெருத்த பீதியும் ஏற்படுத்தியுள்ளது.

**ஆபி :** இந்த விஷயத்தில் நான் அதிகமாக விவரித்துக் கூற முடியவில்லை. அநீதியான முறையிலும், அடக்கியாளும் நோக்கத்துடனும் இயங்கும் அரசாங்கத்தை மக்கள் எதிர்த்துப் போராடும் உரிமையுடன் இயங்கும் தேசம் இது. (பார்ரிக்கின் பக்கம் திரும்பி] தேயிலைக் கப்பல் கவிழ்ந்த "பாஸ்டன் தேநீர் விருந்து" கூட ஒருவகை வேலை நிறுத்தம்தான். புரட்சியும் அவ்

வாறே (ஸ்டர்வ்சன் பக்கம் திரும்பி) ஜாக்ஸன் நிர்வாகத்திற்கு எதிராக பாங்குகளைத் திரட்டிய நிக்கோலஸின் முயற்சியும் அந்த வகையைச் சேர்ந்ததுதான்........

**ஸ்டர்வ்சன் :** நீங்கள் சொல்வது உண்மையே. அராஜகமாக இயங்கும் காலம் மலையேறி விட்டது. இப்பொழுது தொழில்கள் அபி விருத்தி அடையும் காலம். இருப்புப் பாதைகளும், தந்திக் கம்பிகளும் ஏராளமாக உற்பத்தி செய்யப்பட்டு நாடெங்கும் பரவியுள்ளன. இவை யனைத்தும் தனியார் தொழில் ஸ்தாபனங்களாலேயே தயாரிக்கப் படுகின்றன. இம்மாதிரியான மகத்தான பணிக்கெல்லாம் சுதந்திரமாகவும், உறுதியுடனும் செயலாற்றுபவர்கள் தேவை. லிங்கன் அவர்களே இதை இன்னும் பச்சையாகச் சொல்லப் போனல் நீங்கள் தேர்தலில் வெற்றி பெற்றுவிட்டால் முதலாளிகளுக் கெதிராக தொழிலாளிகளின் நலனையே பெரிதாகக் கருதி செயல்புரிவீர்களா?

**ஆபி :** இந்தக் கேள்விகளுக்கு நான் நேரிடையான பதில் அளிக்க முடியாது. தேர்தலில் வெற்றிபெற்ருல் நான் என்ன செய்ய வேண்டுமென்பதை இப்பொழுது சொல்ல முடியாது. ஆனல் அடிமைத்தனத்தை எதிர்ப்பவன் நான் என்பது உங்களுக்குத் தெரிந்ததே.

**பார்ரிக் :** நியூ இங்கிலாந்திலுள்ள நாங்களனைவருமே உங்களுடைய உயர்ந்த நோக்கங்

களைப் போற்றி ஆதரிக்கின்றோம். தெற்கே யுள்ள நமது நண்பர்களின் மிருகத்தனத் தை வெறுக்கின்றோம்.

ஆபி : தெற்கே நீக்ரோக்களின் மீது திணிக்கப் படும் அடிமைத்தனத்தை தவிர இன்னும் பல ரகமான அடிமைத்தனங்கள் இருக் கின்றன. இவை அனைத்தையுமே நான் எதிர்க்கிறேன். (ஸ்டர்வ்சனைப் பார்த்து) எல்லோருக்கும் சரிசமத்துவமாக முன் னேற, வகையும் நம்பிக்கையும் அதன் மூலம் சக்தியும் அபிவிருத்தியும் அளிக்கக் கூடிய ஜனநாயக முறையிலேயே எனக்கு நம்பிக்கை அதிகம். தொழிலாளி, முதலாளி இருவரையுமே சமமாகக் கருதி அபிவிருத் திக்கு வாய்ப்பளிக்கும் ஜனநாயக முறை யில் தான் எனக்கு நம்பிக்கை.

பார்ரிக் : நாங்கள் உங்களது குறிக்கோளை ஆதரிக்கிறோம் லிங்கன். நீங்கள் இந்த உலகத்திற்கே தலைவரான அந்த ஒருவ ரிடத்திலாவது உங்களுக்கு பக்தி உண்டா என்பதைத் தெரிந்துகொள்ள நான் ஆவ லாய் உள்ளேன்.

ஆபி : எல்லாம் வல்ல இறைவனைத்தான் நீங்கள் குறிப்பிடுகிறீர்கள் அல்லவா ?

பார்ரிக் : ஆமாம்

ஆபி : அவருடைய கட்டளைக்கு கீழ்பணிந்து நடக்காமல் நான் இருந்ததே இல்லை. பலர் என்னை ஒரு நாஸ்திகன் என்றே கருதுகிறார் கள். காரணம், நான் மாதா கோயில்

அங்கத்தினராக பதிவு செய்து கொள்ள மறுத்து வருவதுதான்.

**பார்ரிக்:** *நீங்கள் அப்படி மறுப்பதற்குக் காரணம் என்னவோ?*

**ஆபி:** *நான் வணங்கும் முறைகளுக்கேற்ற கோயில்கள் எதுவுமே எனக்குக் கிடைக்கவில்லை. கிறிஸ்துவ தத்துவங்களான நன்றியறிதலையும் நம்பிக்கையையும் தெரிவித்துக் கொள்ளும் கடினமான நீண்ட அறிக்கைகளையும் என்னால் மனதார ஏற்றுக் கொள்ளவே முடியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் நான் உங்களிடத்தில் வாக்குறுதி அளித்துச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நம்மைக்காத்து ரட்சிப்பவரான பரம பிதாவின் சுவிசேஷத்தையும், நீதி போதனையையும் மதித்துக் கீழ்ப்பணிந்து நடப்பதே எந்த மாதா கோயில் அங்கத்தினருக்கும் கடமையாகுமென்று இருக்குமானல் நான் சந்தோஷத்துடன் எந்தக் கோயிலிலும் அங்கத்தினராவேன். சற்று மன்னிக்கவும். என் மனைவி உங்களுக்குக்காக ஏதோ சிற்றுண்டி தயார் செய்கிருள். அதைப் போய்ச் சற்றுக் கவனித்து வருகிறேன். (போகிருர்.)*

**பார்ரிக்:** *இவர் ஒரு சமுசய வாதி. அவருடைய வகையில் அவர் ஒரு லட்சிய புருஷன் தான். இருந்தாலும் ஒரு நாஸ்திகரே.*

**ஸ்டர்வ்சன்:** *தீவிர வாதியுங்கூட.*

**கிரிம்மின் :** தீவிரவாதியா? அதைக்கண்டு சிரிக்கவே தோன்றுகிறது. என்னை மன்னிப்பீர்கள் என்று கருதுகிறேன்.

**ஸ்டர்வ்சன் :** நீங்கள் நகைக்கலாம். ஆனால் எனது கேள்விக்கு நேரடியாகப் பதிலளிக்காமல் அவர் ஒதுங்கியது எனக்குப் பிடிக்கவில்லை. டக்ளஸைப் போலவே இவரும் ஒரு கிளிப்பிள்ளை வாதியெனவே நினைக்கிறேன். மக்களின் உணர்ச்சிகளைக் கிளப்பத்தான் இவரால் முடியும்!

**கிரிம்மின் :** அப்படியே வைத்துக் கொள்ளுங்கள். பிறனும் கூட ஏய்க்கும் வித்தையில் இவரிடம் பிச்சை வாங்க வேண்டியிருக்கும்.

**ஸ்டர்வ்சன் :** இருக்கலாம். ஆனால் இவர் அவ்வளவு தூரம் எதிர் பார்க்கத்தகுந்தவரல்ல!

**கிரிம்மின் :** எதிர் பார்க்க முடியாதா? நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

**ஸ்டர்வ்சன் :** மக்களின் உணர்ச்சியைக் கிளறி விடுபவர்கள் நாளடைவில் அதிருப்தியைப் பரப்பி, மக்களிடம் கலகம் விளைக்கவே முயற்சிப்பார்கள்....!

**கிரிம்மின் :** சீவார்ட் மாத்திரம் என்ன? அவரை அபேட்சகராக நிறுத்தினேமானல் அடிமைகளை விடுவிக்குமாறு கோரத் தொடங்கி விடுவார். பிறகு எங்கும் அதிருப்தியும், கிளர்ச்சியுமே. பொருளாதாரத்திலும், தத்துவஞானங்களிலும் மற்றும் பல விஷயங்களிலும் இந்த லிங்கனே உயர்ந்தவர். நமது கட்சியின் சார்பாக நிற்கும் அபேட்சகரிடம் இதைவிட வேறு என்ன தகுதியை

*நாம் எதிர் பார்க்கிறோம்? நமக்கு வேண்டு வது ஒன்றே ஒன்றுதான்; தேர்தலில் தனக்கு வெற்றியை தேடிக் கொள்பவராக இருக்க வேண்டியது ஒன்றுதான். இதைச் சாதிக்கக் கூடியவர் லிங்கன் ஒருவரே இருக்கிறார்.*

**ஸ்டர்வ்சன்:** *நீங்கள் கூறுவதை ஏற்கலாம் போல் தோன்கிறது.*

**பார்ரிக்:** *நாங்கள் எல்லாருமே அதைத்தான் சொல்லுகிறோம்.*

**கிரிம்மின்:** *அப்படியானல் வாக்காளர்களின் அடி முட்டாள் தனத்தையே நம்பிக் கொண்டிருங்கள். அவருடைய பேச்சு அதைத்தான் தூண்டிவிட முடியும். உங்க ளுடைய கேள்விக்குப் பதில் சொல்லாமல் தட்டிக்கழித்து விட்டார் என்றுதான் நீங் கள் புகார் செய்கிறீர்கள். ஆனல் அதை யும் அவர் சாதுர்யமாகவே செய்து இருக் கிறார். தொழிலாளர்களின் பிரச்சனைகளைப் பற்றி கேட்டால் ஜனநாயகத்தில்தான் தனக்கு நம்பிக்கை என்கிறார். மதத்தைப் பற்றிக் கேட்டாலோ அவர் தன்னைப் போல பிறரையும் நேசி என்று கூறுகிறார். விவாதத்திற்கு இடந் தராமல் சாமர்த்திய மாய்ப் பேசுகிறார். எனக்குத் தெரிந்தவரை அவர் ஒருவரேதான் ஓட்டுக்களை சம்பா திக்க கூடியவர். அவருடைய பெயரும் அவருக் கேற்றார்போல் அமைந்து உள் ளது. அவர் மிக்க கண்ணியமானவர். இப் பொழுது நம்மோடு சமத்காரமாகப் பழகு*

கிறார் பிறகு அவர் வெள்ளி மாளிகைக்குள் நுழைந்த பிறகும் அந்த முறையிலேயே செய்வார். நாம் என்ன சொல்லுகிறோமோ அதன்படியே செய்வார் என்பதில் ஐய மில்லை.

**பார்ரிக் :** (அவரை எச்சரித்தபடி) சற்று ஜாக் கிரதையாகவே இருங்கள்! அதோ அவர் வருகிறார்.

**ஆபி :** நீங்கள் அனைவரும் சாப்பாட்டு அறைக்கு தயவு செய்யுங்கள் என் மனைவி உங்க ளுக்கு தேநீர் அளிப்பார்.

**பார்ரிக் :** நன்றி.

**ஸ்டர்வ்சன் :** தாங்கள் உபசாரம் போற்றத் தக்கது. (ஸ்டர்வ்சனும் பார்ரிக்கும் போகி றார்கள். க்ரிம்மின் தனது சுருட்டை எறிவ தற்கு இடம் தேடுகிறார்.)

**ஆபி :** தேநீர் வேண்டாமெனில் விரும்புகிறவர் களுக்கு வேறு குடி வகைகளும் கிடைக்கும். (ஸ்டர்வ்சனும் பார்ரிக்கும் போகிறார்கள். கிரிம்மின் சுருட்டை எறிய இடன் தேடு கிறார்.)

**ஆபி :** கிரிம்மின், நீங்கள் சுருட்டைக் கை யிலேயே கொண்டு வரலாம்.

**கிரிம்மின் :** நன்றி (அவர் ஆபியைப் பார்த்து சிரித்து விட்டு கையைத் தட்டிக் கொடுக் கிறார். பிறகு வெளியே செல்லுகிறார். பின்னல் ஆபியும் சொல்லுகிறார். விளக் கொளி மறைகிறது.

[பத்தாவது காட்சி முற்றிற்று]

## காட்சி 11

இல்லினய்ஸ் ராஜ்ய அரசாங்க மாளிகையில் லிங்கன் தேர்தல் பிரசாரத் தலைமைக் காரியாலயம். 1860, நவம்பர் 6-ந் தேதி தேர்தல் தினத்தன்று மாலை.

அது ஒரு பெரிய அறை. அதன் ஜன்னல் மிகப் பெரியது. விசாலமான தாழ்வாரத்தை நோக்கி நிற்கிறது. வலது பக்கத்திலும் இடது பக்கத்திலும் கதவுகள் இருக்கின்றன. இடது பக்கமாகவுள்ள மேஜையின்மீது பத்திரிகைகளும், முக்கிய செய்தித் துணுக்குகளும் இருக்கின்றன. சுற்றிலும் பல நாற்காலிகள் போடப்பட்டுள்ளன. பின்புறம் முப்பத்தி மூன்று ராஜ்யங்களின் அமைப்பும் அவற்றிலுள்ள வாக்காளர்களின் எண்ணிக்கைகளும் குறிக்கப்பெற்ற படம் மாட்டியிருக்கிறது. அதன் இரு பக்கங்களிலும் தேர்தல் முடிவுகளை அறிவிக்கும் பட்டியல் தொங்குகின்றது. அந்தப் பட்டியலில் முதலில் அலாபாமாவும், அர்கான்சாஸ்ஸும் குறிப்பிடப்பட்டுள்ளன.

இடது பக்கச் சுவரில் அமெரிக்கக் கொடி காட்சியளிக்கின்றது. வலபக்கத்தில் ஐக்கிய அமெரிக்காவின் படம் உள்ளது. அதில் ஒவ்வொரு ராஜ்யமும் சிகப்பு, வெள்ளை அல்லது நீல நிறத்தால் குறிக்கப்பட்டிருக்கின்றன.

ஆபி மேஜைக்கருகில் உட்கார்ந்து முக்கியமான செய்தித் துண்டுகளைப் படித்துக்கொண்டிருக்கிறார். லிங்கனின் மனைவி வலது பக்கத்தில் உட்கார்ந்து ஏதோ ஒருவித ஐயப்பாட்டுடன் தேசப் படத்தையும், ஆபியையும், பட்டியலையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

ராபர்டர் லிங்கன் அவளுக்குப் பக்கத்தில் நின்று கொண்டு தேசப்படத்தைப் பார்த்துக்கொண்டிருக் கிருன். நினியன் எட்வர்ட்ஸ் மேஜைக்கு இடதுபக் கத்தில் அமர்ந்திருக்கிருர். ஜாஷ் ஸ்பீட் புள்ளி விவரப்படத்திற்கு அருகில் நிற்கிருர். இடது பக்க முள்ள கதவு வழியாக தந்தியடிக்கும் இயந்திரங்களின் ஒலி நன்ருகக் கேட்கிறது. ஜன்னல் வழியாக வெளியே பொது மக்கள் தேர்தல் முடிவுகளே, அவ்வப் பொழுது ஜால விளக்கு வீசும் ஒலியை நோக்கினவர் களாக ஆரவாரிக்கின்றனர். வாத்யங்களின் இசையும் நன்ருகக் கேட்கின்றது.

அவ்வப்பொழுது உள்ளே யிருக்கும் தேர்தல் முடிவுகளேக் காட்டும் பலகையில் புதிய அறிவிப்புக் களே மாட்டியபடி இருக்கிருர் தந்தி யடிப்பாளர் ஜெட் என்பவர். பில் என்பவரோ ஜெட்டிடமிருந்து தந்திகளே வாங்கி வெளியே ஜனங்களுக்கு அறிவித்துக் கொண் டிருக்கிருர்.

**ராபர்ட்** : *தேசப்படத்தில் போடப்பட்டுள்ள அந்தக் கொடிகள் எதைக் குறிக்கின்றன?*

**ஜாஷ்** : *சிகப்பு நிறம் இந்தக் குறியிட்ட ராஜ்யம் நமக்கு நிச்சயம் வெற்றியளிக்கும் என் பதையும் வெள்ளே நிறம் சந்தேகம் என்ப தையும் நீலநிறம் தோல்வி என்பதையும் குறிக்கின்றன. (ஆபிதான் படித்துக் கொண்டிருந்த செய்திக் குறிப்பைப் போட்டு விட்டு வேறு ஒன்றை எடுத்துக் கொள்கிருர்.)*

**நினியன்** : *(எழுந்து, தேர்தல் விபரங்களேப் பார்த்தபடி) இல்லிஞய்ஸில் லிங்கனுக்கும் டக்ளஸுக்கும் ஓட்டுகள் சரிசமமாக உள்*

ளன. (ஜாஷும் ராபர்ட்டும் தேர்தலில் விபரங்களைக்காட்டும் அட்டவணையைச் சூழ்ந்து கொள்கின்றனர்.)

**ஜாஷ்:** மேரிலாண்ட் பூராவும் பெர்க்கென்ரிட் ஜுக்கும் பெல்லுக்குமே வெற்றியாக உள்ளது. ஆபி உங்களுக்கு அங்கு ஒன்றுமே கிடைக்கவில்லை.

**மேரி:** (மிக்க ஆவலுடன்) ஏன், நியூயார்க் என்ன ஆயிற்று? (ஜெட் அங்கிருந்து போகிறார்.)

**நினியன்** அங்கு டக்ளஸுக்கு ஒரு லட்சத்துப் பதினோராயிரமும் லிங்கனுக்கு லட்சத்து ஆறாயிரமும் கிடைத்துள்ளன.

**மேரி:** (ஆபியைப் பார்த்து வருத்தத்துடன்) நியூயார்க்கில் அவர் உங்களை வென்று விட்டார், ஆபி!

**ஜாஷ்:** அறிய வேண்டிய முடிவுகள் இன்னும் இருக்கின்றன. இப்பொழுது வந்துள்ள முடிவுகளெல்லாம் நியூயார்க் நகர்ப்பகுதியிலிருந்தே வந்துள்ளன. அங்கு டக்ளஸுக்கு அதிக ஆதரவு இருப்பது தெரிந்ததே.

**நினியன்:** ரோடு ஐலண்டுமீது போடப்பட்டுள்ள சிகப்புக் கொடியை மாற்றி வெள்ளைக் கொடி போடு, பாப். ஏனெனில் அது எனக்கு சந்தேகமாக உள்ளது.

**மேரி:** நினியன், பென்சில்வேனியாவில் நிலைமை எப்படி உள்ளது?

**நினியன்:** அங்கு ஆபிக்குத்தான் வெற்றி. அதைப்பற்றி சந்தேகமே வேண்டியதில்லை.

**மேரி :** உண்மைதான். இருந்தாலும் புதிதாக வரும் ஒவ்வொரு அறிவிப்பிலும் டக்ளஸுக்கே வெற்றியாக இருக்கையில் எப்படிக் கவலைப்படாமலிருக்க முடியும்.

**ஜாஷ் :** ஆனல் அவை ஒவ்வொன்றும் ஆபியின் வெற்றியையே குறிக்கின்றன.

**நினியன் :** நியூயார்க்கிலுள்ள வாக்குச் சீட்டுக்களை எல்லாம் எண்ணி முடிக்கும் வரை சற்றுப் பொறுத்தீர்களானல் பிறகு நீங்கள் வெள்ளை மாளிகையை நோக்கி வெற்றி நடை போடுவீர்கள்.

**மேரி :** ஏன் இன்னும் அவையெல்லாம் எண்ணி முடிவு அறிவிக்கப்படவில்லை ?

**ஆபி :** முடிவுகள் சீக்கிரமே வந்துவிடும். (வலது பக்கத்திலிருந்து பில்லி ஹெர்ன்டான் வருகிருர். அவர் அளவுக்கு மீறி குடித்திருந்த போதிலும் நிதானத்தை இழக்கவில்லை.)

**பில்லி :** (ஆபியைப் பார்த்து) கீழே ஏராளமான செய்தி நிருபர்கள் காத்திருக்கிருர்கள். நீங்கள் தேர்தலில் வெற்றியடைந்த பிறகு முதல் முதாக என்ன செய்வீர்கள் என்பதை தெரிந்து கொள்ள விரும்புகிருர்கள்.

**நினியன் :** ஆபி! அவர்களுக்கு நாங்கள் என்ன சொல்லுவது ?

**ஆபி :** நான் முதன் முதலில் தாடி வளர்த்துக் கொள்ள உத்தேசித்திருக்கிறேன் என்று சொல்லுங்கள்.

**ஜாஷ் :** என்ன தாடியா ?

**கினியன்:** (சிரித்துக்கொண்டே) எதுவாயிருந் தாலும் மனத்திலேயே வைத்துக்கொள் ளுங்கள்.

**ஆபி:** (மற்ருெரு செய்தித் துணுக்கை எடுத்துக் கொண்டு) சில நாட்களுக்குமுன் சிறுமி ஒருவள் எனக்குக் கடிதம் எழுதி இருந் தாள். அதில் எனக்கு மீசையிருந்தால்தான் பார்ப்பதற்குக் கண்ணியமாக இருக்கும் என்று குறிப்பிட்டிருந்தாள் அதன் படியே நான் இப்பொழுது தாடி மீசை வைத்துக் கொள்ளப் போகிறேன். தேர்தலில் நான் வெற்றி பெற்ருல் எனக்கு அது தேவை யாகத்தான் இருக்கும்.

**மேரி:** இப்பொழுது நியூயார்க்கிலிருந்து புதி தாக தகவல் வந்துள்ளதா?

**கினியன்:** கன்னக்டிகட்டில் எல்லோரையும் விட ஆபிக்கே அதிகமான ஒட்டுகள் கிடைத் திருக்கின்றன். ஆனல் என்ன இருந்தாலும் பதினெரு ஒட்டுதான் அதிகம் கிடைத்திருக் கின்றன. மிஸ்ஸெளரியில் டக்ளஸுக்கு முப்பத்தி ஐயாயிரம் வாக்குகளும் பெல் லுக்கு முப்பத்தி மூன்ருயிரமும், பிரிக்கன் ரிட்ஜுக்கு பதினுருயிரமும் லிங்கனுக்கு எட்டாயிரம் வாக்குகளும்தான் கிடைத் திருக்கின்றன. (வெளியே நிற்கும் மக்கள் கூட்டத்தித்தினர் ஆரவாரம் செய் கின்றனர்.)

**மேரி:** ஆமாம், அவர்களெல்லாம் ஏன் இப்படி ஆரவாரம் செய்கின்றனர்?

**பில்லி:** அது அவர்களுக்கே தெரியாது.

**மேரி :** இந்த செய்திகளெல்லாம் இனி மேல் என்னல் பொறுமையாக கேட்டு கொண்டிருக்க முடியாது.

**ஆபி :** அது சரிதான், கண்ணே, நீ வீட்டுக்குச் சென்று விடுவதே நல்லது. சீக்கிரமே நானும் வந்து விடுகிறேன்.

**மேரி :** (பீதியுடன்) நான் வீட்டிற்குப் போக மாட்டேன். நீங்கள் என்னைப் புறக்கணித்து விட வேண்டுமென்று விரும்புகிறீர்கள். நமது திருமணத்திற்கு முன்பிருந்தே நீங்கள் செய்ய விரும்பியதே அதுதான். உங்களுக்கு என்னைப்பிடிக்க வில்லை. என்ற காரணத்தினல் உங்கள் முன்னிலையிலிருந்து நான் சென்று விடவேண்டும் என்பதற்காக நீங்கள் எதையாவது சொல்லுவீர்கள். (பக்கத்திலிருக்கும் நினியன், ஜாஷ், பில்லி ஆகியவர்களைப் பார்த்து) நீங்களும் அப்படித்தான் என்னை வெறுக்கிறீர்கள். அவருடைய வாழ்க்கையில் நான் இனிக் குறுக்கிடாமலிருக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்கள்.

**ஆபி :** நீங்கள் அனைவரும் ஒரு வினடி வெளியே போயிருக்கிறீர்களா?

**நினியன் :** அப்படியே செய்கிறேம் ஆபி. (அவரும் இன்னும் பலரும் தந்தி அலுவலகத்திற்குள் செல்கின்றனர். ஆபி விநோதமான பார்வையுடன் மேரியின் பக்கம் திரும்புகிறர்.)

**மேரி :** (மெல்லிய குரலில்) ஆபி நீங்கள் என்னை மனதார சபித்தீர்கள், நீங்கள் செய்தது

என்ன என்பதை உணர்ந்திருக்கிறீர் களா? என்னைச் சபித்தீர்கள்.

**ஆபி:** நான் பொருமையிழந்து பேசிவிட் டேன் அதற்காக வருந்துகிறேன். இந்தப் பயங்கரமான மேற்குப் பிரதேசத்தின் கஷ் டங்களை அனுபவிப்பதைக் காட்டிலும் வீட்டுக்குத் திருப்பிச் சென்றுவிடுவதே நல்லது. (அவரை முறைத்துப் பார்த்த படியே வெளியே நோக்கிச் செல்கிருள்).

**மேரி:** (வாயிலில்) நான் கனவுகண்ட காட்சி இதுதான். நான் சிறு குழந்தையாகயிருந்த பொழுதும் இதே இரவுதான் கனவு கண் டேன். இன்று இரவு என் கணவர் ஐக்கிய அமெரிக்காவின் ஜனுதிபதி யாகிவிட்டார் என்பதை கேட்டு ஆனந்திக்கக் காத்துக் கொண்டிருக்கிறேன். அப்படியே அவர் வெற்றியடைந்துவிட்டாலும் அதனுல் எனக்கு சந்தோஷம் ஏற்படப் போவ தில்லை. அந்தக் காலங் கடந்துவிட்டது. சந்தோஷிக்க வேண்டிய சமயம் போய்விட் டது....(அவள் கதவுகளைத் திறந்துகொண்டு வெளியே போகிருள். ஆபி வருத்தத் துடன் அவளைத் திரும்பிப் பார்க்கிருர். பிறகு அங்கிருந்து வேகமாகத் திரும்பி இடது பக்கத்துக் கதவருகில் வேகமாகச் சென்று அதை திறக்கிருர்.)

**ஆபி:** பாப்(இறைந்து கூப்பிடுகிருர்.) (ராபர்ட்ஸ் உள்ளே வருகிருன்.) உன் தாயாருடன் நீயும் போ.

**ராபர்ட்ஸ்:** நான் போகத்தான் வேண்டுமா?

**ஆபி:** ஆமாம்! வேகமாகப் போ! நான் வீடு வந்து சேரும் வரையில் அவளுடன் துணையாக இருந்துகொண்டிரு. (ராபர்ட் போய் விடுகிறான். ஆபி ஜன்னலின் பக்கம் திரும்பிக்கொள்கிறார். பில்லி ஜன்னலைத் திறக்கிறார்)

**பில்லி:** லிங்கன், நீங்கள் வெற்றியடைவீர்கள் என்று நம்புகிறீர்களா?

**ஆபி:** அதைப்பற்றி நான் கவலைப்படவேயில்லை.

**நினியன்:** எழுபத்தி நான்கு தொகுதிகளில் உங்களுக்கு வெற்றிகரமான வாக்குகள் கிட்டும்போல் தோன்றுகிறது. இன்னும் இருபத்தி ஏழு தொகுதிகளில் அநேகமாக வெற்றி கிடைக்கலாம். நியூயார்க் உங்களுக்கு தேர்தலில் வெற்றியேதான் தரும். ஜெயிக்குமோ தோற்குமோ என்ற கவலை ஏற்பட்டுவிட்டதா என்ன?

**ஆபி:** இல்லை. எனக்குத் தோல்வி ஏற்பட்டால் அது என் மனைவிக்கு எப்படிப்பட்ட அதிர்ச்சியைத் தரக்கூடும் என்பதைப் பற்றித்தான் எண்ணிக் கொண்டுள்ளேன்.

**நினியன்:** நான் உங்கள் வெற்றியை நம்பி பத்தாயிரம் டாலர்கள் பந்தயம் கட்டியுள்ளேன். அது என்ன ஆவது?

**பில்லி:** (குத்தலாக) உங்களுக்கு ஏற்படும் நஷ்டத்தைக் காட்டிலும் இந்த நாட்டு மக்களுக்குத்தான் அவரது தோல்வியால் அதிக நஷ்டம் ஏற்படும்.

**ஜாஷ்:** தோல்வியுற்ருல் உங்களுக்கு எப்படி யிருக்கும் ஆபி.

**ஆபி:** (ஜன்னலுக்கு அருகில் நாற்காலியில் உட்கார்ந்தபடி) அப்பொழுதுதான் என் வாழ்க்கையிலேயே எல்லையற்ற நிம்மதி ஏற்படும். (கிரிம்மின் கவலையற்று சுருட்டைப் புகைத்துக் கொண்டே உள்ளே நுழைகிருர்.)

**கிரிம்மின்:** வணக்கம், லிங்கன். வணக்கம் பெரியோர்களே! நீங்களெல்லோரும் இப்பொழுது எந்த நிலையில் இருக்கிறீர்கள்.

**நினியன்:** (கிரிம்மினிடம் புதிதாக வந்த தேர்தல் செய்தியைக்கொடுத்துவிட்டு) இதைப் பாருங்கள்.

**கிரிம்மின்:** (சிரிக்கிருர்) சரி பெல்மாண்ட் தான் படுகுழியில் விழும் வரைக்கும் போராடுவார் போலிருக்கிறது. நான் சிகாகோவிற்குப் போயிருந்தேன். அங்குள்ள சூழ்நிலை ரொம்பவும் தெளிவாகத் தெரிகிறது. இன்னும் சொல்லப்போனுல் லிங்கன்! உத்தியோகம் வேண்டுமென்று கோரி கூட்டம் கூட்டமாக வருபவர்களிடமிருந்து உங்களைக் காப்பாற்றுவதற்காகவே நான் இன்று இரவு கிளம்பி வந்துள்ளேன். இப்பொழுதே அவர்களில் பலர் கீழே வரிசையாகக் காத்துக்கொண்டிருக்க ஆரம்பித்துவிட்டனர். ராஜாங்கக் காரியதரிசி பதவிக்காக பதிஞேரு பேர்களும் தூதுவப் பதவிக்காக நான்கு பேர்

களும் வழியில் காத்துக் கொண்டிருப் பதைப் பார்த்தேன். (புதிதாக வந்த தேர் தல் செய்தி அறிவிப்புகளை எடுத்துக் கொண்டு வந்து உள்ளே அறிவிப்புப் பலகையில் ஜெட் மாட்டுகிருர். ஜன்ன லுக்கருகில் சென்று வெளிப் பலகையில் மாட்டுவதற்காக பில்லிடம் கொடுக்கிருர்.)

**பில்லி :** (தேர்தல் அறிவிப்பைப் பார்த்து விட்டு) நியூயார்க்கிலிருந்து வந்துள்ள முடிவுகள் போலிருக்கின்றன, டக்ள ஸுக்கு ஒரு லட்சத்தி எண்பத்தி மூளு யிரம் ஓட்டுக்களும் லிங்கனுக்கு ஒரு லட் சத்தி எண்பத்தி ரெண்டாயிரம் ஓட்டு களும் கிடைத்திருக்கின்றன. பரவாயில் லையே ஆபிக்கு கொஞ்சம் கொஞ்சமாக வாக்குகள் அதிகரித்துக் கொண்டே வரு கின்றனவே.

**கிரிம்மின் :** அடுத்தபடி நீங்கள் வெற்றியடைந்து விட்டீர்கள் என்ற செய்தி நியூயார்க்கி லிருந்து வரப்போகின்றது. இதை மட்டும் நீங்கள் திண்ணமாக வைத்துக் கொள்ள லாம். இந்த தேர்தலில் வெற்றி உங்கள் வீட்டு வாயிற்படியில் காத்துக் கிடக்கிறது. இந்தத் தடவை தீவிரமாக தேர்தலில் போராடியிருக்கிறோம் அதனுல் இன்றிரவு நமக்கு வெற்றிதான் கிட்டப் போகிறது.

**ஆபி :** (அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடந்துகொண்டே) நாம் லஞ்சம் மலிந்த அரசியல் சரித்திரத்திலேயே மிக கீழ்த்தர மான போராட்டத்தில் ஈடுபட்டோம்.

*இதில் நான் வெற்றிபெற்றால் அரசியல் துறையில் நான் பட்டுள்ள கடன்களை யெல் லாம் முகம் கோணுமல் திருப்பிக் கொடுத் தாக வேண்டும். என்னைத் தேர்தலுக்கு நிறுத்துவதற்கும் வெற்றிவாங்கித் தருவ தற்கும் பாடுபட்டவர்களுக்கெல்லாம் நான் எனது கடமையைச் செய்தாக வேண்டும். என்னைப் பலவிதத்திலும் சூதாட்டத்திற்கு ஆளாக்கிக் கொண்டுள்ளேன். என்னைப் பல விஷயங்களில் பிறருக்கு ஆட்படுத்திக் கொண்டுள்ளேன்; நேர்மையற்ற முறை. தேர்தலில் என் சார்பில் கொடுக்கபட்டுள்ள வாக்குறுதிகளை யெல்லாம் நிறை வேற்றி யாக வேண்டும். எனக்கு இப்பொழுது சற்று வெளியே போய்வர வேண்டும் (அவர் வலது பக்கமாக வெளியேறுகிறார்.)*

**கிரிம்மின் :** *பேரியோர்களே! நீங்கள் எல்லோரும் நமது அபேட்சகரின் நீண்ட நாளைய நெருங்கிய நண்பர்கள் ஆதலால் எனக்குப் புரியாமல் இருந்துவரும் நெடு நாளைய விஷ யம் ஒன்றே நீங்கள் எடுத்துவிளக்க முடி யும். அதாவது வெற்றி அடைவதில் அவ ருக்கு விருப்பம்இல்லை என நான் நினைக் கிறேன் அது சரியாக இருக்குமா?*

**ஜாஷ்:** *அது சரிதான்*

**கிரிம்மின் :** *நான் அன்றாடச் செய்திகளைக் கவ னித்து வருகிறேன். எனக்கென்னவோ 'இவையெல்லாம் புதிய அனுபவமாகத் தோன்றுகிறது.*

**பில்லி :** (ஆத்திரத்துடன்) தெற்கு கரோலினு வில் பத்தாயிரம் தொண்டர்களை திரட்டி யுள்ளார்கள் என்பது தெரியுமா? அவர் களுக்கு ஆயுதம் அளித்துத் தயாராக வைத்துள்ளனர். தேர்தலில் ஆபி வெற்றி பெற்ருல் அவர்கள் மறுநாளே பிரிந்து சென்றுவிடுவார்கள் என்று அந்த ராஜ்ய கவர்னர் பிரகடனம் செய்துள்ளார். பிறகு டிக்ஸன் கோட்டுக்கு தெற்கேயுள்ள மற்ற ராஜ்யங்களும் அதையே பின்பற்றிச் செல் லும். இப்படி யெல்லாம் நடக்குமென்ருல் இதற்கு அர்த்தம்தான் என்ன? போர். உள்நாட்டு போர். இதற்கெல்லாம் அவரே முழு பொறுப்பையும் ஏற்கவேண்டி வரும். வாழ்க்கையில் நிம்மதியைத் தவிர வேறு எதையுமே விரும்பாத அவருக்குத்தான் இந்தப் பொறுப்பெல்லாம் ஏற்படும்.

**நினியன் :** ஆத்திரத்தை குறைத்துக் கொள்ளுங் கள், பில்லி. மற்ெருரு முறை மது அருந்துங் கள் (பலகையில் உள்ள தேர்தல் முடிவுகளை படித்துவிட்டு) இன்று பத்தரை மணிக்கு லிங்கன் வெற்றி அடைந்துள்ளார் என்ற செய்தியை நியூயார்க் ஹெரால்ட் அறி வித்திருக்கிறது; அவர் வென்றுவிட்டார்! வென்றுவிட்டார்! (மேடைமீது உள்ளவர் கள் அனைவரும் கூச்சலிட்டுச்சிரித்து ஒரு வரையொருவர் தழுவிக்கொள்கின்றனர்.)

**ஜெட் :** லிங்கன் தெர்ந்தெடுக்கப் பட்டுவிட்டார். நேர்மைமிக்க பெரியவர் ஆபிதான் நமது அடுத்த ஜனதிபதி. (வெளியேசென்றிருந்த

*ஆபி திரும்பிவருகிறார். எல்லோரும் அவ ரிடத்தில் வேகமாக வருகிறார்கள் பில்லி ஆனந்தத்துடன் கை குலுக்குகிறார்.)*

**கிரிம்மின் :** *முன்பே எனக்குத் தெரியுமே. இது விஷயத்தில் எனக்கு ஐயமேயிருந்த தில்லையே! ஜெட் நேராக ஆபியிடம் வரு கிறார்.)*

**ஜெட்:** *லிங்கன், எனது அத்தியந்த வாழ்த்துக்கள்.*

**ஆபி :** *(பணிவுடன்) அனைவருக்கும் எனது நன்றி.*

**ஜாஷ் :** *ஆபி, எனது பாராட்டுககள்*

**ஆபி :** *நன்றி ஜாஷ்*

**நினியன் :** *கீழே இருந்து கத்தும் பொதுமக்களின் கூக்குரலைக் காது கொடுத்து கேளுங்கள்.*

**கிரிம்மின் :** *இதெல்லாம் உங்கள் பொருட்டுத்தான் லிங்கன். சற்று வெளிப்புறம் தலை நீட்டுங் கள். அவர்கள் தங்களைத் தரிசிக்கட்டும்.*

**ஆபி :** *நான் அதெல்லாம் செய்ய போவதில்லை. இந்தத் தேர்தல் முடிவை மேரியிடம் சொல் வதற்காக நான் வீட்டிற்குச் செல்லப் போகி றேன். (அவர் வெளி வாயிலை நோக்கிப் புறப்படுகிறார். குள்ளமும், கட்டுமஸ்துடன் பருமனுமாயுள்ள கவனுக், என்னும் அதிகாரி உள்ளே வருகிறார். அவரைத் தொடர்ந்து இரண்டு சிப்பாய்கள் வரு கின்றனர்)*

**கிரிம்மின் :** *இவர்தான் காப்டன் கவனுக் என் பவர், ஜனாதிபதியாரே.*

**கவனுக் :** *நீங்கள் தேர்தலில் வெற்றிபெற்றால் உங்களையே பின்தொடர்ந்து வருவதற் காகப் பணிக்கப்பட்டுள்ளேன்.*

**ஆபி:** *அதற்காக எனது நன்றி. ஆனால் உங்கள் உதவி எனக்கு இப்பொழுது தேவையில்லை.*

**கவனுக்:** *லிங்கன் அவர்களே, உங்களுக்குப் பல விதமான பயமுறுத்தல்கள் செய்யப்பட்டனவே. அதற்காகவாவது எங்களை நீங்கள் வைத்துக் கொண்டுதான் ஆகவேண்டும்.*

**ஆபி:** *சரி....ஜாஷ் நினியன், கிரிம்மின், பில்லி உங்கள் அனைவருக்கும் எனது வணக்கம். உங்களது நல் ஆசிகளுக்கு எனது நன்றி. (கதவை நோக்கி ஆபி செல்லுகிறார். மற்றவர்கள் மௌனமாக அவருக்குப் பதில் வணக்கம் தெரிவிக்கின்றனர்.*

**கவனுக்:** *நீங்கள் சற்று உத்தரவு கொடுங்கள் நான் முன்னால் போகிறேன். (அவர் போகிறார் அடுத்தபடியாக ஆபியும் கடைசியாக மற்ற இரு சிப்பாய்களும் செல்லுகின்றனர். விளக்கொளி மறைகிறது.)*

(பதினோராவது காட்சி முற்றிற்று)

## காட்சி 12

பிப்ரவரி 11, 1861—

ஸ்ப்ரிங் பீல்டு ரயில்வே ஸ்டேஷனில் வெளி முற்றம். வலது பக்கமாக ரயில் வண்டி ஒன்று நிற்கிறது. அதன் மீது கொடிகளும் தோரணங்களும் கட்டித் தொங்க விடப்பட்டுள்ளன.

அதன் பின்னால் சிப்பாய்கள் துப்பாக்கி ஏந்தியவாறு வரிசையாக நிற்கின்றனர். இடது பக்கம்

மக்கள் கூட்டமாகத் திரண்டு நின்று உணர்ச்சி வகி மாகக் கோஷிக்கின்றனர். ரயில் வண்டியின் சக்கரங் கள் சரியாக முடுக்கப்பட்டிருக்கின்றனவா என்று பரி சோதகன் ஒருவன் கையில் விளக்கேற்றி பார்த்துக் கொண்டு வருகிறுன். வலது பக்கத்தில் ரயில் வண்டி யின் தண்டவாளங்களை ஒரு கூலியாள் சுத்தம் செய்து கொண்டிருக்கிறுன். கவனுக் வாயில் சுருட்டை வைத் தபடி முன்னும் பின்னும் நடை போட்டுக்கொண்டிருக் கிறுர், கைகடியாரத்தை குனிந்து பார்க்கிறுர். ராணுவத்தலைவர் ஒருவர் வருகிறுர்.

**ராணுவத் தலைவர்:** *இங்கே அணிவகுத்து நில் லுங்கள் (கவனுக்கைப் பார்த்து வெறுப் புடன்) உங்களிடத்தில் சற்றுத்துருதுருப் பும் அச்சமும் காண்கிறதே ஏன்? கவனுக்?*

**கவனுக்:** *ஆமாம் அதற்குக் காரணமில்லாம லில்லை. தனக்கு என்ன நேர்ந்தாலும் எள் ளளவும் கவலையே படாமல் இருக்கக்கூடிய ஒருவரின் உயிரை நான் கடந்த மூன்று மாத காலமாகக் காவல் புரிந்து வந்த கஷ் டம் எனக்கல்லவா தெரியும்! ரிச்மாண்டில் உள்ளவர்கள் அவர் கண்டிப்பாக மார்ச் நாலாந்தேதியன்று பதவி ஏற்றுக்கொள்வ தற்கு உயிருடன் இருக்கமாட்டார் என்று நம்பி அது விஷயத்தில் பந்தயம் கூடக் கட்டத் தொடங்கிவிட்டார்களாம்.*

**ராணுவத் தலைவர்:** *அவர்கள் பந்தயம் கட்டும் பணத்தை என்னிடம் கொடுக்கட்டும். இந்த நாட்டு ராணுவத்தினர் தங்கள் சேனு திபதியைக் காப்பாற்றக்கூடிய சக்தி படைத்தவர்கள்தான்.*

**கவனுக:** அமெரிக்க ராணுவத்தினர் உதவிய ளிக்கக் கூடிய திறமை சாலிகள்தான். இருந்தாலும் தெற்கே யுள்ளவர்கள் குறி தப்பாமல் சுடுவதில் மிக்க வல்லவர்களா யிற்றே. ஆகவே இந்த ரயில் வண்டியி லுள்ள ஒவ்வொரு பெட்டியின் ஒவ்வொரு ஜன்னலையும் மிக ஜாக்கிரதையாகக் கவ னித்துக்கொண்டு வரும்படி ஏற்பாடு செய் யுங்கள்—முக்கியமாக, ஒரு நகரத்திலோ, ஒரு ஏரிக்கருகிலோ, எங்கு இந்த வண்டி நின்ற போதிலும் சரி அங்கெல்லாம் இந்தக் கண்காணிப்பு மிக்க அவசியம். வழியில் ஏந்த இடத்தில் ஆபத்து ஒலி கிளம்பினு லும் உடனே....

**ராணுவத் தலைவர்:** (சற்று இறுமாப்புடன்) ஆபத்தான ஒரு அவசர காலத்தில் தங்கள் தைரியம் காட்டும் விஷயத்தில் என்னு டைய ராணுவ வீரர்களுக்கு உத்திரவிட வேண்டிய அவசியமே கிடையாது.

**கவனுக்:** குறை கூறுகிற தோரணையில் நான் அப்படிச் சொல்லவில்லை. இருந்தாலும் நாம் எந்தவித ஆபத்திற்கும் முன் கூட் டியே தயாராக இருக்க வேண்டுமல்லவா? (இடது பக்கத்திலுள்ள பாண்டு வாத்திய கோஷ்டியினர் போராட்ட கீதமான "வயோதிக ஆபிலிங்கன்காட்டைக் கடந்து வந்துள்ளார்" என்ற பாடலைப் பாடுகின்ற னர். அதைச் சூழ்ந்துள்ள கூட்டத்தின ரும் சேர்ந்து பாடுகின்றனர். உள்ளே இருந்த நிர்வாகஸ்தர் ஒருவர் அங்கு வந்து

*நின்று கெடிகாரத்தில் மணி பார்க்கிருர். நினியன் எட்வர்ட் தம்பதியினர், ஜாஷ், பில்லி, கிரிம்மின் ஆகியோர் உள்ளே வருகிருர்கள் சிப்பாய்கள் அவர்களைத் தடுத்து நிறுத்துகின்றனர். அதைக்கண்டு கூட்டத்தினர் சத்தம் செய்கின்றனர். ராணுவத் தலைவர் அதிகார தோரணையில் அவ்விடத்திற்கு வருகிருர்.)*

**ராணுவத் தலைவர் :** *தள்ளி நில்லுங்கள் கூட்டத்தினரை முன்ஞல் வராமற்படி தடுத்து நிறுத்துங்கள் வீரர்களே.*

**நினியன் :** *நான் லிங்கனின் மைத்துனன்.*

**ராணுவத் தளபதி :** *உங்கள் பெயர் என்ன ?*

**கவனுக் :** *எனக்கு அவரைத் தெரியும் அவர்கள் எட்வர்ட் தம்பதிகள், திரு. ஸ்பீட், திரு. ஹார்ன்டான் ஆகியோர்களே. அவர்கள் எல்லோரையுமே எனக்குத்தெரியும் நீங்கள் அவர்களை உள்ளே விடலாம்.*

**ரா. த :** *சரி அப்படியானல் உள்ளே போங்கள் (அவர்கள் வலது பக்கமாகச் செல்லுகிருர் கள். ராணுவத் தளபதி இடது பக்கம் போகிருர்)*

**கிரிம்மின் :** *ஜனுதிபதி இப்பொழுது எப்படி இருக்கிருர் சந்தோஷமாய்த் தானே ?*

**நினியன் :** *எப்பொழுதும் போலவே மனச் சோர் வுடன் தான் இருக்கிருர்.*

**பில்லி :** *[உணர்ச்சி வசமாக] இன்று அவர் அலுவலகத்துக்கு வந்திருந்தார். அங்குள்ள 'லிங்கனும் ஹொர்ன்டனும்' என்னும்*

பலகையை எடுத்துவிடலாமா என்று கேட்ட தற்கு அப்படியே தொங்கட்டும். இந்த தேர்தல் முடிவினால் இப்பொழுது எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை என்பதை நம் கட்சிக்காரர்கள் உணரட்டும். நான் உயி ரோடிருந்தால் எப்பொழுதாவது மறுபடி திரும்பிவந்து நானும் ஹெர்டன்னும் எப் பொழுதும்போல் வக்கீல் தொழிலை தொடர்ந்து நடத்துவோம்.

**எலிசபெத்:** ‘நான் உயிரோடு இருந்தால், என்று அவர் அடிக்கடி தான் சொல்லிவருகிறார்.... (இடது பக்கத்திலிருந்து பிரமாதமான களி யாரவாரம் கேட்கிறது. ராணுவத்தலைவர் வேகமாக வருகிறார்.)

**ரா. த:** (கவனுக்கிடம்) ஜனதிபதிவந்து விட்டார் (தனது சிப்பாய்களைப் பார்த்து) உஷார் (அவர் பிளாட்பாரத்தில் வேகமாக நடந்து சென்று வண்டிக்கு அருகில் இடதுபுறம் நிற்கிறார்.)

**கவனுக்:** (நினியனையும் மற்றவர்களையும் பார்த்து) நீங்கள் சற்று பின்னல் தள்ளி நிற்கிறீர் களா? இந்த இடத்தை ஜனதிபதியின் குழுவினருக்காக காலி செய்து வைக்கப் போகிறோம். (மக்களின் ஆரவாரம் சற்று பலமாகவே கேட்கிறது.)

**ரா. த:** வீரர்களே, துப்பாக்கிகளை நிலையில் நிறுத்தி வணக்கம் தெரிவியுங்கள். (ராணு வத்தலைவரும் வணக்கம் தெரிவிக்கிறார். அவரைத் தொடர்ந்து சிப்பாய்களும் வணக்கம் செலுத்துகின்றனர். ஆபி அப்

பொழுது இடது பக்கத்திலிருந்து பிளாட் பாரத்தில் நடந்து வருகிறூர். நாளை தினம் அவருக்கு ஐம்பத்திரண்டு ஆண்டுகள் நிறைவு பெறும். அவர் தாடி வளர்த்துக் கொண்டு இருக்கிறூர். தோளின் மீது சால்வை போர்த்துக் கொண்டிருக்கிறூர். வலது கையில் அவரது கார்பெட் பை. இடது கையால் தனது மகன் டாட்டைப் பிடித்து அழைத்துவருகிறூர். அவருக்குப் பின்னுல் மேரி, ராபர்ட், வில்லி, வேலைக் காரப் பெண் ஆகியோர் வருகிறூர்கள். மேரி கையில் ஒரு கொத்து பூ எடுத்து வரு கிறுள். அவர் ரயிலுக்கு அருகில் வந்தவு டன் ஆபி தன் கையில் உள்ள பையை ரயில் ஓட்டுபவரிடம் கொடுத்துவிட்டு டாட் டைப் பிடித்து ரயிலில் ஏற்றிவிடுகிறூர். மேரி, ராபர்ட், வில்லி, வேலைக்காரப்பெண் ஆகியவர்கள் வண்டியில் ஏறிக் கொள்கின் றனர். ஆபி மட்டும் கீழே நின்று நினிய னிடமும் மற்றுமுள்ளவர்களிடமும் பேசிக் கொண்டிருக்கிறூர். அப்பொழுது இடது பக்கமாக நின்றிருக்கும் கூட்டத்தினரி டையே பெரும் கூச்சல் எழும்புகிறது. அவர்கள் எல்லோரும் முன்னுல்வர முயல் கின்றனர்.)

**ரா. த:** (முன்னேக்கி விரைந்தபடி) அவர்களை தடுத்து நிறுத்துங்கள். தடுத்து நிறுத்துங் கள், வீரர்களே. (சிப்பாய்கள் ஓடிவந்து கூட்டத்தினரைத் தடுக்கின்றனர். கவனுக் கும் அவருடைய ஆட்களும் ஆபியை

சூழ்ந்து நிற்கின்றனர். ஒவ்வொருவரும் துப்பாக்கியைப் பிடித்தவாறே உன்னிப் பாகச் சுற்றுமுற்றும் கவனித்துக்கொண்டு நிற்கின்றனர்.)

**கவனுக் :** ஜனுதிபதியவர்களே! உள்ளே ஏறி உட்காருங்கள். (ஆபி வண்டியின் பின்புற முள்ள உயரமான இடத்தில் ஏறி நிற்கிருர். கூட்டத்தினர் அவரைப் பார்த்தவுடன் பெரும் ஆரவாரம் செய்கின்றனர். அவர்கள் 'ஜனுதிபதியே! தாங்கள் பேச வேண்டும். எங்களுக்காகக் கொஞ்சம் பேசுங்கள்' என்று கத்துகின்றனர். உடனே ஆபி கூட்டத்தின் பக்கம் திரும்பி தனது தொப்பியைக் கையில் பிடித்து வீசிக்காட்டுகிருர். உடனே கரகோஷம் குறைகிறது.)

**நினியன் :** ஆபி! நீங்கள் சற்றுப் பேசவேண்டும் என்று ஜனங்கள் விரும்புகிருர்கள். (ஆபி இடது பக்கம் பார்த்தபடியே ஒரு கணம் நிற்கிருர்.)

**ஆபி :** அருமை நண்பர்களே! உங்களிடமிருந்து விடைபெற்றுக் கொள்கிறேன். நான் இப்பொழுது இந்த நீண்ட புதிய மீசைத் தாடியுடன் வாஷிங்டனுக்குச் செல்கிறேன். (அதை கேட்டு கூட்டத்தினர் கலகலவெனச் சிரிக்கின்றனர்.) உங்களுடைய அனுமதியை கோருகிறேன். (அருமை ஆபி! அருமை ஆபி! என்று கோஷமிடுகின்றனர் கூட்டத்தினர். உற்சாகத்திஞல் ஆபியை நோக்கி முன்னுல் நகருகின்றனர். சிப்பாய்கள் அவர்களைத் தடுத்து பின்னுல் போங்கள் என்று கத்துகின்றனர்.)

ஆபி : (ராணுவத் தலைவரிடம்) பரவாயில்லை. அவர்களை யெல்லாம் விடுங்கள். எல்லோரும் எனது பழைய நண்பர்களே. (ராணுவத் தலைவர் தனது சிப்பாய்களை அங்கிருந்து அழைத்து ஜனாதிபதி யிருக்கும் வண்டியை சுற்றி வளைவாக நிற்கச் செய்கிறார். கவனுக்கும் அவரது ஆட்களும் வண்டியின் படிகளிலே நின்று சுற்றுமுற்றும் கவனித்துக் கொண்டிருக்கின்றனர். அந்தப் பட்டணத்து மக்களும் மற்றும் பல நீக்ரோக்களும் சேர்ந்து மேடைக்கு வருகின்றனர்.)

ஆபி : தற்பொழுது உள்ள என்னுடைய மனோநிலையை உணர்ந்தவர்கள் உங்களை விட்டுப் பிரிவதில் எனக்குள்ளமனத்துயரை உணர முடியாது. நீங்கள் காட்டிய அளவற்ற அன்பிற்கும் இந்த இடத்திற்கும் நான் என்றென்றும் கடமைப் பட்டுள்ளேன். கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக நான் இங்கு வசித்து வந்துள்ளேன். இளமைப் பருவத்திலிருந்து இந்த முதியவயது வரையில் இங்கேயே வாழ்ந்தேன். என் குழந்தைகள் எல்லாம் இங்குதான் பிறந்தன. அவற்றில் மாண்டுபோன ஒன்றை இவ்விடத்தில் தான் புதைத்துள்ளேன். இனி நான் இவ்விடத்திற்குத் திரும்பி வருவேனோ எப்பொழுது வருவேன் என்பதெல்லாம் ஒன்றுமே தெரியாத நிலையில் இங்கிருந்து உங்களை விட்டுப் பிரிந்து செல்கிறேன். நமது அரசியல் கூட்டமைப்பிலிருக்கும்

ராஜ்யங்களில் பதினொன்று அதிலிருந்து பிரிந்து செல்ல விரும்புகிறோம் என்று அறிவித்திருக்கும் நிலைமையில் ஜனாதிபதி பதவியை ஏற்றுக்கொள்ளும்படி அழைக்கப்பட்டுள்ளேன். நாளுக்கு நாள் யுத்த பீதி எங்கும் அதிகரித்துக் கொண்டேஇருக்கிறது. மிக பயங்கரமான தொரு பொறுப்பை நான் ஏற்றுள்ளேன். அந்த பொறுப்பை நிறைவேற்றுவதில் நான் கீழ்க்கண்ட விஷயங்களை ஆராயத் துணிந்துள்ளேன். இத்தனை காலமாக இந்தக் கூட்டமைப்பு அரசாங்கம் எந்த மகத்தான லட்சியத்தின் அடிப்படையில் நீடித்து ஒன்ருக இருந்து வந்துள்ளது என்பதை ஆலோசிக்கவேண்டும். பல ராஜ்யங்கள் அக்கூட்டிலிருந்து பிரிந்துபோக விரும்புகின்றனவே என்ற வருத்தத்தில் அந்தப் பிரச்னையைக் கருதவில்லை. சுதந்திரப் பிரகடனத்தின் எத்தகைய உன்னதமான குறிக்கோளின் விளைவாக அக்கூட்டமைப்பு நிறுவப்பட்டது? அந்தக் குறிக்கோளைச் சாதிப்பதற்குப் மிகப் பண்டைய காலந் தொட்டு மக்கள் ஏங்கி நிற்கவில்லையா? அந்தப் பிரகடனம் இந்நாட்டு மக்களுக்குச் சுதந்திரம் அளித்தபோது மட்டுமின்றி உலகுக்கே எடுத்துக் காட்டாய் இயங்கி, அடிமைச் சங்கிலியைத் தகர்த்து சுதந்திரம் வாங்கும் வாஞ்சையை மக்கள் மனத்தில் எழுப்பவில்லையா? யாவரும் ஒன்றே. எல்லோரும் ஓர் குலம் என்ற முடிவை உலக மக்கள் மனத்தில் அது விதைத்திட வில்லையா?

நான் ஆராயத் துணிந்த பிரச்சினைகள் இவையே ஜன நாயக ஆட்சி நமக்கு வாய்த்துவிட்டது ஆனல் அது நீடித்து நிலைத்திருக்கும் தகுதி யுள்ளதுதாஞ என் பது தான் இப்பொழுது நம்முன் உள்ள கேள்வி. நாம் இப்பொழுது விழித்துக் கொள்ளும் நாளை அடைந்து விட்டோம். பயங்கரமாகத் துன்புறுத்தி வந்த கனவு முடிந்துவிட்டது. அப்படியானல் அந்த கனவுக்கு இனியும் இடந்தரோம். நம்மை சூழ்ந்து உள்ள இந்த உலகத்தின் இயற்கை வளங்களை யெல்லாம் அபிவிருத்தி செய்வ தையும் நம்முள்ளே புகுந்துகிடக்கும் அறி வுச் செறிவையும் ஆத்ம சக்திகளையும் விசாலப்படுத்திக் கொள்வதையும் செய்து காட்டுவதற்காகவே நாம் இனி வாழ வேண் டும். அதனல் நமக்கு தனிப்பட்ட முறையி லும் சமூகரீதியாகவும் அரசியல் துறையி லும் வளங் கொழிக்கும். இந்த உன்னத வாழ்க்கை முறைகள் நீடித்து நிலைத்திருக் கும். நான் உங்களை யெல்லாம் கடவுளின் பொறுப்பிற்கு விடுகிறேன். நீங்கள் கட வுள் வணக்கத்தின்போது என்னை நினைத் துக்கொள்வீர்களாக. (கவனக் ஆபியிடம் பேசுவதற்கு எத்தனிக்கிருர். ஆனல் அது சரியாக கேட்கவில்லை. அவர் ஆபியின் கைகளைத் தொடுகிருர். ஆபி வேகமாக அவர் பக்கம் திரும்புகிருர்.)

**கவனக்:** இங்கிருந்து கிளம்புவதற்கு நேரமாகி விட்டது. ஜனதிபதியவர்களே! வண்டிக்

குள் ஏறிக்கொள்ளுங்கள். (இந்த வார்த்தைகள் ஜனங்களின் கூக்குரலுக்கிடையே அவர்கள் செவியில் விழவில்லை. நினியன், எலிஸெபத், ஜாஷ், பில்லி, ஆகியோர் ரயில்வே ஸ்டேஷன் நடை பாதையில் வந்து நிற்கின்றனர். ராணுவ சிப்பாய்கள் வண்டிகளின் மீது ஏறுகிறார்கள். ஆபி கடைசி முறையாகத் தனது தொப்பியை ஜனங்களின் பக்கம் ஆட்டிவிட்டு வந்தனத்தைத் தெரிவித்துக்கொள்கிறார். பிறகு அங்கிருந்து சென்று வண்டியில் ஏறிக்கொள்கிறார். அவருக்குப் பின்னால் கவனுக்கும் சிப்பாய்களும் செல்கின்றனர். பாண்டுவாத்திய கோஷ்டியினர் தாங்கள் இதுவரை பாடி வந்த பாடலின் கடைசி வரியை முடித்தனர். எல்லோரும் பாடுகின்றனர். அவருடைய ஆத்மா முன்னேறிச் செல்கிறது என்ற பாட்டு அது. கீழேயுள்ள விசை போடுபவன் தன்னிடமிருந்த விளக்கை ஆட்டுகிறார். கண்டக்டர் அதிவேகமாக உள்ளே செல்கின்றான். வண்டியை ஓட்டுபவர் மேலே தாவி ஏறிக்கொள்கிறார். கூட்டத்தினர் தலைத் தொப்பிகளையும் கைக்குட்டைகளையும் வீசியபடி சந்தோஷமாக வழியனுப்புகின்றனர். யென்ஜினிலிருந்து வரும் காதைத் துளைக்கும் ஊதல் ஒலி வலது பக்கத்திலிருந்து கேட்கிறது.)

திரை

# இல்லிஞய்ஸில் லிங்கன்

—சுருக்கம்—

இந்த நாடகத்திற்குத் தேவையான கதையையும் கதா பாத்திரங்களின் அமைப்புக்களையும் பெற உதவிய முக்கிய மான ஆதாரங்களைப்பற்றி விளக்குவதற்காகவே இந்த அநுபந்தம் சேர்க்கப்பட்டுள்ளது. மேலும் இந்த நாடகத் தின் பன்னிரண்டு காட்சிகளுக்கும் உரிய சரித்திர அடிப படையைக் குறிப்பிடுவதற்கும, நான் ஏன் அந்த அடிப் படைகளிலிருந்து மாறியுள்ளேன் என்பதையும் காட்சி களுக்கிடையே நடந்த நிகழ்ச்சிகளைக் குறிக்கவும் இந்த நாடகத்திற்குள்ளேயே சில முக்கிய விஷயங்களைப் புகுத் தாமல் விட்டுவிட்டதற்குரிய காரணத்தை விளக்கவுமே இந்தக் குறிப்பு எழுதப்பட்டுள்ளது.

வாழ்க்கைச் சரிதங்களை நன்கு சொல்லக்கூடியவன் நான் என்பதைப் பறைசாற்றுவதற்காக இந்தக் குறிப்புக் களை எழுதவில்லை. சாதாரணமாக, உண்மைகளைவிட உணர்ச்சிகளையே நாடக ஆசிரியர்கள் பெரிதும் பயன்படுத் திக்கொள்கின்றனர். ஆனாலும் ஆப்ரகாம் லிங்கனின் உண் மையான குணாதிசயங்களைப்பற்றிய நாடகத்தில் உண் மைக்கே பிரதானியம் அளிக்க வேண்டியதாக இருக்கிறது. அவரது வாழ்க்கை ஜனநாயகத் தத்துவததின் வளர்ச் சிக்கே ஒரு எடுத்துக்காட்டாக இருக்கிறது.

லிங்கனின் பிரசங்கங்களின் விளைவாக ஏற்பட்ட வெற்றிகளே அமெரிக்காவின் பிற்கால லட்சியங்களாக உருவெடுத்தன.

மற்றவர்களைப் போலவே நானும் இடா எம் டார்ப லிடம் கேட்டே லிங்கனின் வாழ்க்கை விவரங்களை அறிந்து கொண்டேன். அவரது வாழ்க்கை நிகழ்ச்சிகளையெல்லாம் ஆல்பர்ட் புஷனலிடம் கேட்டறிந்தேன். இருந்தாலும் கார்ல் ஸாண்ட்பர்க் எழுதிய புத்தகத்தைப் படித்தபிறகுதான்

லிங்கனின் விநோதமான குணாதிசயங்களைப்பற்றி நன்கு புரிந்துகொள்ள முடிந்தது. அவர் மனித குலத்தின் புனித மான அபிலாஷைகளை யெல்லாம் எல்லோருக்கும் விளங் கும்படி சாதாரண வார்த்தைகளில் வெளியிட்டுள்ள அறிக் கைகளின் பெருமை துலங்கிற்று. இருந்தாலும் வளமான லிங்கனின் வாழ்க்கைச் சுரங்கத்தில் புகுந்து எழ உறுதுணை யாக இருந்தது சாண்பர்க்கின் புத்தகம் தான்.

லிங்கனின் வாழ்க்கைச் சரித்திரத்திலே நத்தானியேல் ஸ்டீபன்சன் எழுதிய சிறு புத்தகம்தான் நல்ல முறையில் உள்ளது. பெவரிட்ஜ், லிங்கனின் வாழ்க்கைச் சுருக் கத்தை மட்டும் தெளிவாக எழுதியுள்ளார். ஆனால் அவ ருடைய குணாதிசயங்களைப்பற்றி ஒன்றுமே அதில் காண வில்லை.

லிங்கனைப்பற்றிய உண்மை விபரங்களுக்கு லிங்கன் எழுதியவைகளையும் அவருடன் கூட்டாளியாக இருந்த சட்ட நிபுணர் வில்லியம் எச். ஹெர்ன்டான் எழுதிய புத்த கங்களையும் எல்லோரும் படித்தாகவேண்டும். லிங்கன் எழுதிய கட்டுரைகள் அனைத்தும் ஒன்றாகத் திரட்டி ஜான். ஜி. நிக்கோலேயும் ஜான்ஹேயும் 1894-ல் வெளியிட்டனர்.

ஹெர்ன்டானுக்குத்தான் நாம் பெரிதும் கடமைப்பட் டுள்ளோம். அவரே எழுதியிராவிட்டால் லிங்கனது உண்மை குணாதிசயங்களைப்பற்றிய சிறு குறிப்புகளே நமக்கு ஜான் வில்க்ஸ் பூத்தின் மூலம் கிடைத்திருக்கும். லிங்கனது பாத்திரத்தில் மட்டும் என்னால் முடிந்த அளவு உண்மையான அவரது குணாதிசயங்களைப் புகுத்தி எழுதி யுள்ளேன். ஆனால் மற்ற பாத்திரங்களில் நான் அவ்வளவு தூரம் உண்மைக்குப் பிரதானியம் அளிக்கவில்லை. இந்த நாடகத்தில் மேரிடாட் லிங்கனின் பாத்திரத்தை இன்னும் தெளிவாக விளக்கிக் காட்டுவதற்கு நாடகத்தில் போதிய நேரம் இல்லையே என்று வருந்துகிறேன், அவளது கணவ னின் புகழ் வாய்ந்த வாழ்க்கையின் துக்ககரமான முடிவுக்கு அவளது பாத்திரம் ஒரு அறிகுறியாக மட்டும் விளங்கு கிறது.

இனி, இந்த நாடகத்தில் வரும் பல காட்சிகளையும் பற்றி விளக்கிச் சொல்லுகிறேன்.

## *காட்சி* 1 (1833)

1831-ம் ஆண்டு கோடைக்காலத்தில் இல்லினொய்ஸி லுள்ள நியூ சேலத்திற்கு லிங்கன் வருகிறார். அப்பொழுது அவருக்கு வயது இருபத்திரண்டு. அப்பொழுது அந்தக் பட்டணத்தில் தேர்தல் நடக்கிறது. தேர்தல் குமாஸ்தாவாக வேலை பார்க்கும் இருவரில், மாக்நாமருக்கு உடல் நலமில் லாமற் போகவே அவருக்குப் பதிலாக லிங்கனை அந்த வேலையில் அமர்த்துகிறார் மென்டர் கிரஹாம். இதிலிருந்து தான் அவரது அரசியல் வாழ்க்கை துவங்குகிறது. அத் துடன் மென்டர் கிரஹாத்துடன் நெருங்கிய நட்பு ஏற்படு கிறது. அவரது நட்பினால் லிங்கன் பெரிதும் பயன் அடை கின்றார்.

“லிங்கன் கிரஹாத்தின் வீட்டிலேயே சாப்பிட்டுவரு கிறார் அந்த நல்ல நண்பர் இவருக்கு இலக்கணம், இலக்கியம் இன்னும் பல விஷயங்களையும் தினசரி இரவு நெடுநேரம் வரை கற்றுக்கொடுத்தார். ‘கிராஹம்தான் லிங்கனுக்கு கல்வியறிவு ஏற்படுவதற்குக் காரணபூதராக இருந்தார்” என்று ரட்லஜ் என்பவர் (ஆன்னின் சகோதரர்) எழுதியுள் ளார். “ஆபிதான் நான்கற்றுக்கொடுத்த இலக்கியங்களை யும், இதர பொது அறிவுகளையும் சூட்டிகையாக ஆவலுடன் கற்றுக் கொண்டவர்” என்று மென்ட்டார் கிரஹாமே சொல்லியுள்ளார்.

இந்த முதலாவது காட்சியில் லிங்கன் படகு மூலம் நியூ ஆர்லியன்ஸுக்குச் சென்றது குறிப்பிடப்பட்டுள்ளது.

## *காட்சி* 2 (1834)

இந்தக் காட்சியில் பல புதிய பாத்திரங்கள் அறிமுகம் செய்யப்பட்டுள்ளன. அவையனைத்தும் கற்பனை பாத்தி ரங்களே. லிங்கனுக்கு புரட்சி இயக்கத்தில் ஈடுபட்டு போராடியவர்களைத் தெரியும் என்பதைக் காட்டுவதற் காகவே மாட்லிங்கை அறிமுகம் செய்துள்ளேன். கடைசி

கட்டங்களில் தேவையாக இருக்கிறூர் என்ற காரணத் திற்காக ஸெத்கேல் என்பவர் இக்காட்சியில் அறிமுகம் செய்யப்பட்டுள்ளார்.

ஜோஷுவா ஸ்பீட் இந்த நாடகத்தில் ஒரு முக்கிய பாத்திரமாகையால் அவரையும் இந்தக் காட்சியிலேயே அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. லிங்கன் ஸ்பிரிங் பீல்ட்டி லுள்ள ஸ்பீடின் அறையிலேயே தங்குவதற்கு அவர் இடம் கொடுத்து ஆதரிக்கிறூர்.

லிங்கன் நியூசேலத்திற்கு வந்து ஏழுமாதங்களுக்கெல் லாம் ராஜ்ய சட்டசபைத் தேர்தலுக்கு நின்றூர். தங்கள் மத்தியில் வந்து சேர்ந்த புதியவராகிய லிங்கனுக்கு நியூ சேலத்து மக்கள் கீழ்க்கண்டபடி ,அமோகமான வாக்குச் சீட்டுகளை அளித்து வெற்றிபெறச் செய்தார்கள்.

ஆப்ரஹாம் லிங்கன்...205 வாக்குகள் அவருக்கு எதி ராக நின்றவருக்கு...3 , "லிங்கனுக்கு அந்த ஊர் வாசிக ளிடம் அளவற்ற செல்வாக்கு இருந்ததன் காரணமாகவே அவர் இவ்வளவு அதிக வாக்குகளைப் பெற்று வெற்றிபெற முடிந்தது" என்று பெவரிட்ஜ் சொல்லுகிறூர்.

பௌலிங்கிரீன் நியூசேலத்திலே வாழ்ந்த ஒரு பெரிய மனிதர். அவர்தான் அங்கு நீதிபதியாக இருந்தார். லிங்க னிடம் அவருக்கு அலாதியான பிரியம். மேலும் அவர்தான் முதன்முதலில் ஆபீக்கு சட்ட பயிற்சியில் ஆர்வத்தையும் ஊக்கத்தையும் உண்டாக்கினூர். இதனூல் லிங்கனின் குணுதிசயங்களும் பெரிதும் அபிவிருத்தி அடைந்தன.

இலினூய்ஸிலிருந்த பெரிய தனவந்தர் கூட்டத்திலி லேயே நினியன் எட்வர்ட்ஸ் முதன்மையானவராக இருந் தார் அவரும் ஆபிலிங்கனும் ராஜ்ய சட்டசபைத் தேர்தலுக் காக 1836-ல் ஒரே தொகுதியில் நின்று போட்டி போட்ட பொழுது லிங்கனுக்கே அபரிமிதமான வாக்குகளுடன் வெற்றி கிட்டியது. லிங்கன் ராஜ்ய சட்டசபை தேர்தலில் நின்றதற்கு ஆன்ரட்லஜ்ஜின் மீது அவர் வைத்திருந்தபாசம் தான் காரணமென்று கூறிவிட ஆதாரம் கிடையாது. ஆன்ரட்லஜ் மக்னூமரை மணம் செய்து கொள்ள விரும்பி

ளுள் என்பதற்கும் யாதொருவித அத்தாட்சியும் கிடையாது. மக்னுவர் நியூ சேலத்தைவிட்டு தன்னுடைய குடும்பத்தை அழைத்து வருவதற்காகக் கிழக்கே சென்று நீண்ட நாள் தங்கிவிட்டதால் அவள் அவன் மீதுள்ள நம்பிக்கையை இழந்து மனச்சாந்திக்கு வேறு இடத்தை நாட நினைத்தாள். அதை ஆபி அவளுக்கு பூர்த்தி செய்விக்கிறுர். ஆனுல் அவளை சாந்தப்படுத்துவது முடியாத காரியம். அதற்குப் பிறகு சில நாட்களுக்கெல்லாம் மக்னுவர் நியூ சேலத்துக்கு திரும்பி வந்தார்.

அவர் தனது நேர்மையான நோக்கத்தை நிறை வேற்றிக் கொள்ளுவதற்காகவும் தான் காதலித்த ஆன்ரட் லெஜ்ஜை தானே மறுபடி அடையவும் முயற்சித்தார். அவர் "ஆன் ரட்லெஜ்ஜை மணந்து கொள்ளுவதற்காக அவளுக்கோ அவளது குடும்பத்தாருக்கோ லிங்கன கடிதம் எழுதியதாக நான் கேள்விப்படவேயில்லை" என்று சொல்லி யிருககிறுர். ஆனுல் அவர் (லிங்கன்) ஆன்ரட்லெஜ் மரண மடைந்ததைக் கேட்டு பெரிதும் துக்கப்பட்டார் என்று எனது நண்பர்கள் சொன்ஞர்கள் என்று மாக் நாமர் பல வருடஙகளுக்குப் பிறகு சொன்ஞர்.

அந்தப் பிரதேசத்தின் அக்கம் பக்கத்தில் வாழ்ந்தவர் களும் மற்றும் பலரும் சொல்லுவதிலிருந்து ஆன் ரட்லெஜ் என்பவள் மிக அழகும் கவர்ச்சியும் நிறைந்தவளாக இருந் தாள்; அவளிடம் ஆபிலிங்கனுக்கு அளவற்றதொரு பாச மும் கவர்ச்சியும் ஏற்பட்டிருந்தது, கடைசியில் அவள் மாண்டு போனுள் என்பதை அறிய முடிகிறது.

இதிலே முக்கியமான விஷயம் அவள் இறந்து விட்டது தான்.

## காட்சி 3 (1835)

லிங்கன் ஷேக்ஸ்பியரது சோக நாடகங்களான "ஹாமலெட்" "மாக்பெத்" ஆகியவைகளை ஆர்வத் துடன் படித்து ரஸிப்பது வழக்கம்.

இந்தக் காட்சியில் லிங்கன் "ஆன் நம்மை யெல்லாம் விட்டு விட்டு மேல் லோகத்திற்குச் சென்று விட்டாள்

என்பதை என்னுல் பொறுக்கவே முடியவில்லை" என்று மிக வருத்தத்துடன் குறிப்பிட்டுள்ளார். இந்தக் காலத்தில் அவர் எதை யெல்லாம் விரும்பிப் படித்தார் என்பதைக் குறிபபிட்டுள்ளேன். அவரே மத விஷயமாக ஒரு புத்தகம் எழுதினுர். அது மட்டும் அழியாமல் நிலைத்திருந்திருக்கு மாஞல் மாதாக் கோயிலுக்குச் செல்லும் மதப் பற்றுள்ளவர் களெல்லாம் அதைப் படித்துவிட்டு லிங்கனை என்றும் மற வாமல் வாழ்த்தி வணங்குவார்கள். ஆனுல் அந்த புத்தகம் சாமுவேல் ஹில் என்னும் நண்பரால் எரிக்கப்பட்டு விட்டது.

## 1835—1840

மூன்ருவது நான்காவது காட்சிகளுக்கு இடையே ஐந்தாண்டு காலங்கள் கழிந்தோடுகின்றன. இந்தக் காலத் தில் லிங்கன் புதிய உலகத்தின் நுட்பங்களை அறிந்து தொடர்புகொண்டு அதனுல் புத்தம் புதியதொரு மனிதராக மாறுகிருர். பழைய நாட்டுப்புறத் தோற்றத்திலிருந்து அவர் புதிய பட்டணவாசியாக மாறுகிருர். அவர் தனக்கு முப்பது வயது ஆவதற்கு முன்பே தன்னை ஒரு கிழவராக பிறர் மதித்தனர் என்று பிற்காலத்தில் கூறுகிருர்.

அவர் நியூ சேலத்தை விட்டுக் கிளம்பி ஸ்பிரிங் பீல்ட் டுக்கு வந்து சேருகிருர். அங்கு நீதிபதி ஜான். டி. ஸ்டு வர்ட்டின் கூட்டாளியாக வக்கீல் தொழிலில் ஈடுபடுகிருர். இங்கு அவர் ஸ்டீபன். ஏ. டக்ளஸைச் சந்தித்து அவருடன் போராட்டம் நடத்தியதுதான் முக்கியமான விஷயம். டக்ளஸ் தனது சொந்த ஊரான வெர்மாண்டை விட்டுக் கிளம்பி இல்லினுய்ஸ்ஸுக்கு வந்து இங்கு லிங்கனுடன் ராஜ்ய அசெம்பிளியில் சேவை செய்கிருர். லிங்கன் டான்ஸ்டோன் என்பவருடன் சேர்ந்து கூட்டறிக்கை ஒன்று விடுத்தார். அதாவது, "அடிமைத்தனத்தை ஆதரிப்பது என்பது நியாய மற்றதொரு கொள்கை. ஆனுல் அவற்றை ஒழிப்பதற்காகக் கொண்டு வரப்பட்டுள்ள தீர்மானங்கள் அவ்ற்றினுல் ஏற்படும் தீமைகளை அகற்று வதைக் காட்டிலும் அதிகரிக்கவே செய்கின்றன"; என குறிப்பிட்டிருந்தனர்.

## காட்சி 4 (1840)

ஜாஷுவா ஸ்பீட்டின் சகோதரிக்கு லிக்கன் எழுதிய கடிதத்தில் அவர் குறிப்பிட்டுள்ள விபரங்கள் அனைத்தையும் அப்படியே தவருமல் அடிமைகளைப் படகில் சங்கிலியால் பிணைத்துக் கட்டப்பட்டிருந்ததை லிங்கன் பார்த்து விட்டுப் பேசும் காட்சியில் குறிப்பிடப் பட்டுள்ளது. லிங்கன் தனக்கே உரிய ஹாஸ்யத்துடன் கேலியாகச் சிலவற்றை குறிப்பிட்டுப் பேசுவார். ஆனுல் அவற்றில் எவ்வித துவேஷ மனப்பான்மையும் காண முடியாது. "அவரது கிண்டல் பேச்சுகளிலெல்லாம் அலாதியான தொரு அன்பு தொனிக்கும், தனது ஹாஸ்ய மொழிகளால் அவர் யாரை யுமே வருத்தப்படச் செய்ததில்லை" என்று பொதுவாகச் சொல்லப்படுகின்றது.

இந்தக் காட்சியில் லிங்கன் நியூ சேலத்திலிருந்த பல தொண்டர் படையினருக்குத் தலைவராக நின்று கருப்பு இராசாளி யுத்தத்தில் ஈடுபட்டதையும் குறிப்பிடப்பட் டுள்ளது. நான்காவது காட்சியில் லிங்கன் தேசியப் பிரசினை களில் தான் சிக்கிக் கொள்ள விரும்பாமல் இருந்ததைக் காட்டும் அவரது சொற்பொழிவுகள் இந்தக் காலத்தில் அவருக்கு இருந்த நோக்கத்தைத் தெளிவுப்படுத்துகின்றன. இவை நாலாவது காட்சியில் இடம் பெற்றுள்ளன.

## காட்சி 5 (1840)

நினியனின் மனைவி, எலிஸபெத் டாட் எட்வர்ட்ஸ்ஸிட மிருந்தும் அபிப்பிராயங்களைக் கேட்டறிந்துள்ளார், ஹெர்ன்டான். ஆப்ரஹாம் லிங்கன் அவளது சகோதரியைக் காதலித்த விபரங்களைப் பற்றி அவள் விளக்கிச் சொல்லி யுள்ளாள். அந்த விநோத காதலைப் பற்றிய விபரங்கள் இவையே:

அவர்கள் இருவரும் ஒன்ருக இருந்த அறையில் நான் அநேக தடவைகள் தங்க நேரிட்டிருக்கிறது. அப்பொழு தெல்லாம் மேரிதான் முதலில் பேச்சை ஆரம்பிப்பாள். லிங்கன் அவள் பக்கத்தில் உட்கார்ந்து கேட்டுக் கொண்

டிருப்பார். அவர் ஒன்றுமே பேசாமல் அவளிடம் இருந்த ஏதோ ஒரு கண்ணுக்குத் தெரியாத மாபெரும் சக்தியினுல் இழுக்க பட்டவராக இமை கொட்டாமல் பார்த்தபடி உட்கார்ந்திருப்பார். பெண்கள் கண்டு மயங்கும்படி கவர்ச்சி யாகவோ அல்லது சாதுரியமான புருஷனுகவோ விளங்கக் கூடிய ஆற்றலும் படிப்பறிவும் அவருக்கு அப்பொழுது கிடையாது. என்னைப் பொருத்த மட்டில் அவர் இயற்கை யிலேயே ஒரு பலஹீனமான உடற் கட்டுடையவர்தான் என்பது கருத்து, மேலும் போதிய கல்வி அறிவு அற்றவர். அதனுல் என் சகோதரி போன்றதொரு பெண்ணை தன்னிடம் ஆர்வமும் திருப்தியும் கொள்ளும்படிச் செய்யக் கூடிய சக்தி அவருக்கு இல்லை. மேரி சமூகததாரிடையே நேர்த்தியான பெண்ணுகவும், சுறுசுறுப்பும், முகமலர்ச்சியும் கொண்டவளாக இருந்தாள். அவளுக்கு டாம்பீகத்தில் ஆசை 'இருந்தது. அதிகாரத்தை விரும்பினுள். எனக்குத் தெரிந்தவர்களிலே ரொம்ப பேராசை கொண்டவள். அவள் சிறுமியாக இருக்கையிலேயே தனது நண்பர்களிடம் தான் ஜனதிபதியை மணந்து கொள்ளும்படி விதி இருப்பதாகச் சொல்லித்திருப்திப்பட்டுக் கொள்வாள். தவிர லிங்கனுக்கு மேரி இடத்தில் ஆசை இருந்த போதிலும் அவர்களிருவரும் மனம் ஒத்து வாழ்வார்களா என்பதில் சந்தேகமிருந்து. நான் மேரியிடமும் நேரில் அவர்களிருவரும் பொருத்தமான ஜோடி கள் இல்லை என்றும் கடவுளே இவர்கள் இருவரையும் ஒரு வருக்காக மற்ரெருருவரை படைக்கவில்லை என்றும் சொல்லி விட்டேன்."

அடுத்து வந்த நிகழ்ச்சிகள் ஸ்ரீமதி எட்வர்ட்ஸ் குறிப் பிட்டது சரி என்பதை நிரூபித்துக் காட்டிவிட்டன.

## காட்சி 6 (1841)

கடிதம் ஒன்று தீயிலிட்டு பொசுக்கப்படும் நிகழ்ச்சி புதிதாகக் கற்பனை செய்யப்பட்டதன்று. திருமணத்திற்காக குறிபபிடப்பட்ட நாளுக்கு சிறிது காலம் முன்பிருந்தே லிங்கன் அதிலிருந்து தப்பித்துச் செல்வதர்கான வழியை யோசித்துக் கொண்டிருந்தார். மேரி டாட் அவரை பிறர் நாடிவரும் நிலையிலிருந்து நாடிச் செல்லும் நிலைக்கு மாற்றி

விட்டாள். அவள் அடிக்கடி எல்லோருக்கும் புரியும்படி மற்ற ஆடவர்களோடு அதிலும் முக்கியமாக டக்ளஸுடன் சுற்றியலைந்தாள். ஆனால் லிங்கனுக்கு இதனால் யாதொரு புதிய மனமாறு பாடும் ஏற்பட்டுவிடவில்லை. அவள் எ ற்காக இப்படிச் செய்கிறாள் என்பதைப் பற்றிக் கூட அவர் கவனிக்கவில்லை. கோழையான ஆடவர்கள் செய்வதையேதான் அவரும் செய்தார். ஆனாலும் விரும்பத்தகாத ஒரு சம்பவத்தை ஏற்படுத்த வேண்டாமென்ற ஆசையினால் தான் அவர் தனது எண்ணத்தையெல்லாம் கடிதத்தில் எழுதி அதை ஒரு நண்பரிடம் கொடுத்து அவளிடம் சேர்ப்பிக்கச் சொன்னார். அதில் தான் அவளை மணம் புரிந்து கொள்ளவேண்டும் என்று கேட்கும் அளவிற்கு நேசிக்கவில்லையென்பதை உணர்ந்து கொண்டு விட்டதாக எழுதியிருந்தார். அதை நான் மேரியிடம் கொண்டு கொடுக்க வேண்டுமென்று விரும்பினார். நான் அதற்கு இணங்காமற் போகவே வேறொருவரிடம் கொடுத்தனுப்ப எத்தனித்தார். நான் உடனே அந்தக் கடிதத்தை நெருப்பில் போட்டு எரித்துவிட்டேன். "உங்களுக்கு உண்மையான ஆண்மையும் தைரியமும் இருக்குமானால் நேரில் மேரியைச் சந்தித்து அவளிடம் காதல் இல்லை என்பதைத் தெரிவியுங்கள், என்று சொன்னேன்" இவ்வாறு ஜாஷுவா ஸ்பீட் அந்தக் கடிதத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

இச்சம்பவத்தினால் ஆபிலிங்கன், மனம் சோர்ந்து வாழ்க்கையிலே வெறுப்புற்று பரிதாபகரமாகக் காட்சியளித்தார். "இந்த சந்தர்ப்பத்தில் தற்கொலை செய்து கொள்வதற்கு உதவும் ஆயுதங்களான கத்தி, பிளேடு எதுவும் அவருக்கு கிடைக்காமற்படி அப்புறப்படுத்தப்பட்டன என்று ஸ்பீட் குறிப்பிட்டுள்ளார்.

டாக்டர் டேனியல் டிரேக்கைப் பற்றிய குறிப்பும் இந்தக் காட்சியில் வருகிறது. அவரிடம் செல்லும்படி லிங்கனுக்கு சிபார்சு செய்யப்பட்டது. ஆனால் அவர் சின்சினாட்டிக்கு நேரில் செல்லாமல் தனக்குள்ள கோளாறுகளைப் பற்றிக் குறிப்பிட்டு டாக்டர் டிரெக்குக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினார்.

இந்தக்காட்சியின் முடிவில் ஹெர்ன்டான் நாட்டிற்காக உயிர் நீத்த லவ் ஜாயைப் பற்றிப் போற்றிப் பேசுவது கற்பனையாகப் புகுத்தப்பட்டுள்ளது.

## *காட்சி* 7 (1842)

லிங்கனது வாழ்க்கையில் இளமையிலிருந்தே புதிய மாறுதல்கள் சிறிது சிறிதாக ஏற்படத்தொடங்கின. மேலும் அவர் மனைவியும், நண்பர்களும் அவரை இடையருது முன்னேற்றப் பாதையில் செல்ல ஊக்கிக் கொண்டிருந்தனர். அவர்கள் கஷ்டத்தில் உழலும் தங்களது நாட்டு மக்களுக்கு அவர்களுக்காகப் பாடுபடக்கூடிய மக்கள் தலைவர் ஒருவர் தேவை என்பதை உணர்ந்து ஆபியைத் தயாராகும்படி ஊக்கிக் கொண்டுதான் இருந்தனர். ஆனல் ஆபியோ அதையெல்லாம் பொருட்படுத்தாது இருந்து வந்தார். தீடிரென்று அவருக்குள்ளேயே ஏற்பட்ட ஒரு உணர்ச்சி, ஆர்வத்தினுல் அவர் மக்கள் துறையில் முன்னேறத் துவங்கினுர். அப்படி அவரை மக்களுக்காகப் பாடுபடும் தலைவனுக முன்னேறவைத்த ஆர்வப் பொறிகள் எவை?

இந்த கேள்விக்குத்தான் நான் இந்த ஏழாவது காட்சியில் விடை பகர முயன்றுள்ளேன்.

மக்களை அடிமைகளாக்குவதை—அடிமைத்தனத்தை லிங்கன் எப்பொழுதுமே எதிர்த்து வந்துள்ளார். ஆனல் அதைவிட நாட்டிலே சங்கடங்களை ஏற்படுத்தக்கூடாது என்பதில் அவர் அதிக உறுதி கொண்டிருந்தார். அடிமைகள் பிரச்சனையில் மக்களின் உணர்ச்சி அதிகம் பாதிக்கப்பட்டுள்ளது என்றும் அதைச் சிறிது கிளறிவிட்டாலும் நாட்டின் ஒற்றுமை சிதறுண்டுவிடும் என்பதையும் அறிந்திருந்தார். மேலும் அவர் தென்னவர்களின் சொத்துரிமைகளுக்கு எதிராக ஒரு பொழுதும் குரல் எழுப்ப விரும்பவில்லை. வடக்கும் தெற்கும் பாதி சுதந்திர மக்கள் வாழும் நாடாகவும் பாதி அடிமைகள் வாழும் நாடாகவும் ஒற்றுமையுடன் இணைந்து இருக்க முடியும் என்பதே அவரது எண்ணம். மேலும் அடிமைகள் பிரசினை தானுகவே தீர்ந்துவிடும். என்றும் நம்பினுர்.

ஆனால் அவர் நினைத்தபடி நிலைமை நீடிக்கவில்லை. தெற்கிலிருந்து மக்கள் மூடுபோட்ட வண்டிகளில் மிசிசிபி நதியைக் கடந்து சமவெளியை நோக்கிப் பிரயாணமாகத் தொடங்கி விட்டனர். லிங்கன் ஜாஷ்ஸ்பீட் குடும்பத்தினரைக் காண கெண்டக்கிக்குச் செல்லுகையிலெல்லாம் தெற்கிலிருந்து மக்கள் மிஸ்ஸோரி ஐயோவா வழியாக கன்ஸாஸ்ஸிற்கும் நெப்ராஸ்காவிற்கும் சென்று குடியேறிக் கொண்டிருந்ததை கண்டார். மேலும் அவர்களில் பலர் பஸிபிக் கடற்கரையிலிருக்கும் கடைக்கோடிப் பிரதேசத்திற்கும் குடியேறிக் கொண்டிருந்தனர். டெக்ஸாஸ் குடியரசு, அமெரிக்க கூட்டு அரசாங்கத்தில் சேர்ந்துவிட துடித்துக் கொண்டிருந்தது.

இப்படிப் பரந்த மேற்குப் பிரதேசம் யாவும் அடிமைகளின் நாடாக இருப்பதா அல்லது சுதந்திர நாடாக இருப்பதா என்ற பிரசினையில் அவர் தன்னை மறந்து ஈடுபாடு கொண்டார். இந்தப் பிரசினைக்கு மிஸ்ஸோரி சமாதானத்தின் மூலம் தற்காலிகமான முடிவு காணப்பட்டது. அதன் விளைவாக மேஸன் மக்ஸன் எல்லைக் கோடு மேற்குப் பிரதேசத்திற்குள் விஸ்தரிக்கப்பட்டது. ஆனால் அந்த சமாதானத்தை ஸ்டீபன் டக்ளஸ் தகர்த்து விட்டார். அமெரிக்க உயர் நீதிமன்றம் டிரெட்ஸ்காட் வழக்கில் அந்த சமாதானத்திற்கு எதிர் மறையான தீர்ப்பு அளித்தது. அதன் பிறகே லிங்கன் செயலில் ஈடுபடத் தொடங்கினர். ஆகவே அடிமைத்தனத்தை தெற்கிலிருந்து மேற்கேயும் பரப்ப எத்தனிக்கையில்தான் ஆப்ரகாம் லிங்கன் வீறுகொண்டு எழுந்தார். இந்தக் காட்சியில் நோயாளிச் சிறுவருக்காக ஆபிலிங்கன் கடவுளிடம் பிரார்த்தனை செய்வது ஒரு வகையில் ஐக்கிய அமெரிக்கா நீடித்து இருப்பதற்காகவும் செய்ததாக அமைந்துள்ளது.

## காட்சி 8 (1842)

இந்த கா்ட்சியில்தான் முதலில் மணம் புரிந்துகொள்ள விரும்பவில்லை என்று அறிவித்துவிட்ட அதே மேரியை ஆபிலிங்கன் மறுபடி ஏற்றுக்கொள்வது அவர் தன் தலை விதியை உணர்ந்து செய்திருக்கிறுர் என்று தோன்றுகிறது. லிங்க

னுக்கு நான்கு பிள்ளைகள் பிறக்கின்றன. அதில் இரண்டாவது மகனான எட்வர்ட் நாலாவது வயதில் இறந்து விட்டான். விவாகமான இரண்டு ஆண்டுகள் கழித்து லிங்கன் பால்ய வயதில் தான் இருந்த இடங்களையெல்லாம் திரும்பவும் சென்று பார்க்கிறார். 1846-ல் அவர் அமெரிக்க காங்கிரஸ் சபை தேர்தலில் நின்று வெற்றி பெற்றார். காங்கிரஸில் அவர் அங்கம் வகித்த முற்பகுதி அவ்வளவு வெற்றிகரமாக இருக்கவில்லை.

ஜனாதிபதி போக்கையும் மிக்ஸிகன் யுத்தத்தையும் எதிர்த்து 1848-ம் வருஷம் ஜனவரி 12-ல் லிங்கன் உணர்ச்சி வசமான பிரசங்கம் செய்தார். அவரது இந்தப் பிரசங்கத்திலிருந்து அவரது உண்மையான பரந்த மனோபாவம் நன்கு விளங்குகின்றது. ஆனால் இந்த பிரசங்கத்தை அவருடைய தொகுதி மக்கள் விரும்பவில்லை. அதனால் மறுபடி அவரை தேர்தலுக்கு நியமிக்கவில்லை. லிங்கன் டக்ளஸுடன் அமெரிக்க காங்கிரஸ் சபையில் அங்கம் வகித்தபோது அவர் நாட்டுக்கு எதிரியின் பக்கமாக வாதம் அளித்து மெக்ஸிகன் யுத்தத்தை எதிர்த்து வாதம் செய்தார்.

அதைக் கேட்ட மக்கள் ஆத்திரமடைந்தனர். அதன் விளைவாக அரசியலில் இருந்தே விலகி இருக்கும்படி நேர்ந்தது. சில வருஷங்களுக்குப் பிறகு அரசாங்கத்தைப் பற்றி ஒரு சிறு கட்டுரையை லிங்கன் எழுதினார். அதில் கூட்டு முயற்சியின் மூலம் குறிப்பிட்ட சில லட்சியங்களை அடைவதற்காகவே நாட்டு மக்களால் ஒன்று சேர்ந்து அமைக்கப்படுவது அரசாங்கம். நல்ல அரசாங்கத்தினால் சிலவு அதிகமாகத்தான் இருக்கும் என்று குறிப்பிட்டுள்ளார். அது போலவே அடிமைகளைப் பற்றிய ஒரு சிறு கட்டுரையும் முன்னேற்றம்—வாழ்க்கை நிலைகளில் அபிவிருத்தி என்பது சரிசமத்துவமான மக்கள் வாழும் சமுதாயத்தின் பிரதான அங்கம். எப்படி உழைப்பது என்பது நம் எல்லோருடைய பொதுவான கடமையோ அது போலவே அதிகமாக உள்ள வேலைச் சுமையை எல்லோரும் பகிர்ந்து கொள்வது நியாயமான கொள்கையே. 1854-ல் லிங்கன் தான் புறப்படுவதற்கு தயார் என்ற முடிவிற்கு வந்தார். அந்த ஆண்டு அவர் பியோரியாவில் அவர் செய்த பிரசங்கமே தேச

மெங்கும் அவருக்கு புகழையும் முக்யத்தையும் முதன் முதலில் ஏற்படுத்தியது. உலகமெங்கும் உள்ள தாராள கொள்கையிலுள்ள கட்சிகளில் அங்கத்தினராக அவரை மாற்றியதும் அந்தப் பிரசங்கமே. அவர் அந்த லிபரல் கட்சிக்கு தமது கடமையை செய்ய வேண்டுமானல் நமது கூட்டு அரசாங்கத்தை நாம் காப்பாற்றியே ஆக வேண்டும் அதனுல் எதிர்கால சுதந்திர உலகத்தில் வாழும் மக்கள் அனைவரும் நம்மை மேன்மக்கள் என்று போற்றுவார்கள்.

## காட்சி 9 (1858)

டக்ளஸ் மேல் சபை மறு தேர்தலுக்காக நின்ருர். லிங்கன் அவரை எதிர்த்து போட்டியிட்டார். இந்த தேர்தல் போட்டியிலே பிரிவினை இல்லம் என்னும் தலைப்புள்ள பிரசங்கம் லிங்கனுடைய பேச்சுகளிலேயே மிகவும் விரு விருப்பும் அனல் கக்குவதுமாக இருந்தது. இதற்குப் பதிலாக லிங்கன் உள்நாட்டுப் போருக்கு தூபம் இடுகிருர் என்று சொல்லி டக்ளஸ் இடி முழக்கம் செய்தார்.

இந்த பிரசங்கங்களை கேட்டு இலினுய்ஸில் உள்ள மக்கள் உணர்ச்சி வசப்பட்டு இருந்தனர்.

உயர்நீதி மன்றத்தின் புனிதமான தீர்ப்பைப்பற்றி லிங்கன் நிகழ்த்திய எதிர்ப்புப் பிரசங்கங்களை இப்பொழுது யார் செய்தாலும் அவருக்கு தேர்தலில் தோல்வியைதான் மக்கள் ஏற்படுத்துவார்கள். ஆனுல் 1858-ல் லிங்கன் பொது மக்களிடையே ஏராளமான வாக்குகளை பெற்று வெற்றி அடைந்தார். ஆனுல் மேல்சபைக்கான தேர்தல் அந்த சட்டசபை அங்கததினர்களாலேயே நடத்தப்படுவ தால் அதிலே டக்ளஸே வெற்றி பெற்ருர்.

அமெரிக்க நாட்டு வாழ்க்கை வரலாறுகளைக் கொண்ட அகராதியில் ஆல்லன் ஜான்ஸன் டக்ளஸைப் பற்றி எழுதிய கட்டுரையில் கீழ்க்கண்ட விபரங்கள் 'காணக் கிடைக்கின்றன.

ஏப்ரல் 25-ல் டக்ளஸ் ஸ்பிரிங்பீல்டிலுள்ள மக்களுக்கு அருமையான சொற்பொழிவு ஒன்று நிகழ்த்தினுர். அவரு டைய எதிரிகளாக இருந்தவர்கள் ஐம்பது ஆண்டுகளுக்குப்

பிறகும் உணர்ச்சி இழக்காமல் அப்படிப்பட்ட தொரு பிரசங்கத்தை நிகழ்த்த முடியாது. அவரது பிரசங்கம் அந்த மன்றமெங்கும் எதிரொலி செய்து மக்களை மெய் மறந்த நிலையில் ஆழ்த்தியது. சில வாரங்களுக்குப் பிறகு அதே குரல் மங்கிவிட்டது. டக்ளஸ் டைபாய்டு ஜுரத் தினல் பாதிக்கப்பட்டு 1861 ஜூன் 3-ந் தேதி உயிர் நீத்தார். அவர் கடைசியாக சட்டத்தையும் அரசியல் அமைப்பு சாசனத்தையும் மதித்து கீழ்ப்படிந்து நடக்குமாறு தன் இரு பிள்ளைகளுக்கும் புத்திமதி கூறிவிட்டுச் சென்றார். அமெரிக்கர்கள் அவரை மதித்து நடக்க வேண்டும்.

## *காட்சி* 10 (1860)

இந்த காட்சியில் வரும் ஸ்டர்வ்சன், பார்ரிக், கிரிம்மின் ஆகிய மூன்று பாத்திரங்களும் லிங்கனுடைய காலத்திய வர்கள் அல்ல. அரசியல் வாதிகள் எப்படி ஒரு சிக்கலான பாதையில் முன்னேறவேண்டியுள்ளது என்பதை விளக்கிக் காட்டவே இப்பாத்திரங்கள் கொண்டுவரப்பட்டுள்ளன.

லிங்கனின் மனைவி தன் கணவரைப் பற்றி குறிப் பிடுகையில் அவர் எந்த மாதா கோயிலிலும் அங்கத்தினர் ஆகாமலேயே மதப் பற்றுள்ளவராக இருக்கிறார். ஆனல் எல்லோரையும் போல நுணுக்கமான கிறிஸ்தவப் பற்று கொண்டவர் அல்ல என்று சொல்லி இருக்கிறாள்.

ஆனல் பிற்காலத்தில் வாஷிங்டனில் இருக்கையில் லிங்கன் தவறாமல் கோயிலுக்குச் சென்று வந்தார். ஆனல் அங்கத்தினராக மட்டும் சேரவில்லை.

முதலாளி தொழிலாளி உறவுகளைப் பற்றி லிங்கன் விஸ்கன்ஸின் உழவர்கள் கூட்டத்தில் மிகத் தீவிரமாக பிரசங்கம் செய்தார். அதே பிரசங்கத்தை இன்னும் விரிவு படுத்தி 1861 டிசம்பரில் காங்கிரஸ் சபையில் சொற்பொழிவு நிகழ்த்தினர். அதிலிருந்து ஒரு வருஷத்திற்கெல்லாம் விஸ் கான்ஸின் தொகுதியினர் ஜனதிபதி தேர்தலில் லிங்கனுக்கு பெருவாரியான வாக்களித்து வெற்றி பெறச்செய்தனர்.

லிங்கனுக்கு அவர் மீதிருந்த நம்பிக்கையை காட்டிலும் அவரது நண்பர்களுக்கு அவர் மீது ஏராள நம்பிக்கை

இருந்தது. சுருங்கச் சொன்னால் லிங்கன் சுயமாக முன்னேற்றத்தையோ புகழையோ பொருளையோ விரும்பாதவர். அதனால் அவருக்கு தன் மீது அக்கரையே கிடையாது. என்று அர்த்தமல்ல. அதற்கு மாறாக அவர் பல விஷயங்களில் அக்கரை எடுத்துக்கொண்டிருக்கிறார். உண்மையாக பார்த்தால் அவர் ஒரு சாதுர்யமான போராட்டக்காரர். பதவிக்குதான் தகுதியுள்ளவன்தான் என்பதையும் தனக்கு அது வேண்டும் என்பதையும் அவர் உணர ஆரம்பித்தவுடன் அதை அடைவதற்காக மிக்கத் திறமையுடன் பாடுபட்டார். அவர் ஜனாதிபதி பதவிக்கு போட்டியிடத் தான் தயார் என்பதைக் குறிப்பாக அறிவித்து செல்வாக்குள்ள பலருக்கு கடிதங்களும் எழுதியுள்ளார். அரசியலில் மற்ற துறைகளைப்போலவே அவர் ஒரு முன்னறிவாளியாகத் திகழ்ந்தார். குடியரசு கட்சியின் அபேட்சகராக நியமனம் பெறுவதற்காக பெரிதும் பாடுபட்டிருக்கிறார். அதற்காக கான்சாஸில் உள்ள தனது நண்பருக்கு சிக்காகோவில் நடக்கும் மகாநாட்டிற்கு அனுமதிபெற்று தருவதற்காக 100 டாலர்களும் அனுப்பினார். குடியரசு கட்சியின் உயர்ந்த பதவிகளில் இருந்தோர் யாரும் லிங்கனுக்கு அக்கட்சியின் சார்பாக அபேட்சகர் ஸ்தானத்திற்கு வெற்றி கிட்டும் என்று நினைக்கவில்லை. ஆனால் சீவார்டுக்கு எதிராக லிங்கனே வெற்றிபெற்றார். ஜனாதிபதி ஆவதற்கு முன் லிங்கன் பையன்களுடன் பந்தாடிக்கொண்டிருந்தபொழுதிலும் பதவி ஏற்ற பிறகு அதை நிறுத்திவிட்டார். அவர் பிறருடைய பேச்சைக் கேட்டு நடப்பார். உறுதியில்லாதவர் என்று எண்ணிக்கொண்டிருந்தவர்களுக்கெல்லாம் அவர் திடுக்கிடும்படியான பல காரியங்களை செய்து காட்டினார். அவரைப்போன்று இந்நாட்டு சரித்திரத்திலேயே தலைமை பொறுப்பை அவ்வளவு திறம்பட நிர்வகித்தவர்கள் வேறு யாரும் கிடையாது. லிங்கன் எதற்கும் மனம் பிறழாமலும் ஒரே உறுதியுடனும் நிர்வாகத்தை நடத்திச் சென்றார் அதனால் மதிப்பிட முடியாத சீவார்டின் நட்புரிமையையும் பெற்றார்.

உள்நாட்டுப் போரின் கடைசி ஆண்டில் தனது மந்திரி சபையினருக்கு லிங்கன் படித்த அறிக்கை இதுதான்

" நானே நீதிபதியாக இருந்து உங்களை எத்தனை நாளைக்குப் பதவியில் இருக்க அனுமதிப்பது? தவிர நீங்களே ஒருவருக் கொருவர் பதவியில் இருந்து நீக்கப்படுவதற்காக முயற்சிப் பதை அறிய எனக்கு வருத்தமாக உள்ளது. என்னுடைய விருப்பமெல்லாம் இவ்விஷயத்தைப் பற்றி நீங்கள் இங்கோ வெளியிலோ அபிப்பிராயம் வெளியிடுவதோ மறுத்துப் பேசு வதோ கூடாது என்பதுதான்" லிங்கன் இறந்து எட்டு மணி நேரத்திற்கெல்லாம் குடியரசு கட்சி தலைவர்களெல் லாம் ஒன்றுகூடி அமுலில் இருக்கும் லிங்கனின் திட்டங்கள், கொள்கைகள் யாவற்றையும் அப்புறப்படுத்துவதற்காக மந்திராலோசனை நடத்தினர். கட்சியின் பின்னணியில் இருந்தவர்களுக்கெல்லாம் உறுதிபடைத்த தனிமனிதர் லிங்கனை கொன்றதற்காக வில்க்ஸ் பூத்திடம் நன்றி பாராட் டினுர். ஆனுல் அந்த லிங்கனே "யாருக்கும் கெடுதல் நினையாமல், எல்லோரிடத்திலும் அன்பும் ஆதரவும் காட்டி நடந்தால் நிரந்தரமான உண்மை சமாதானத்தை—சந்துஷ் டியை அடையலாம்" என்ற உன்னத கொள்கையை உறு தியுடன் கடைப்பிடித்து நடந்தவர்.

நான்காண்டு கால அவசர அரசியல் நிர்வாகத்தின் தலைவராக இருக்கையில் சர்வாதிகாரம் செலுத்தினுர் என்று சந்தேகிப்பவர்கள், அவர் இறந்த பிறகு அமெரிக்காவில் நிலவிய லஞ்ச ஊழல், கலகம் முதலிய நிலைமைகளை எண் ணிப் பார்த்தால் அவரது செயல் நன்கு விளங்கும். லிங்க னுக்குப் பிறகு வந்தவர்கள் யாருக்குமே நிர்வாகத் திறமை யும் சக்தியும் இல்லை. இங்கு இந்த நாடக சம்பவத்திலிருந்து வெகு தூரம் புறம்பாகச் சென்றுவிட்டேன்.

## காட்சி 11 (1860)

1860 நவம்பர் 6-ல் நடந்த ஜனுதிபதி தேர்தலில் நாட்டிலே சரித்திரம் கண்டிராத அளவு உணர்ச்சி வெள்ளம் கரைபுரண்டோடியது. அதிலே லிங்கனின் வெற்றி முன் கூட்டியே நிச்சயமாகத் தெரிந்திருந்தது. ஆனுல் இந்த தேர்தலினுல் நாட்டிலே அழியாத தொரு வெறுப்புணர்ச்சி யும் பகைமையும் ஏற்பட்டது. நாட்டிலே தேர்தல் நடந்த அன்றைய தினமே பத்திரிகைகளில் தென் கரோலி

ஞவைச் சேர்ந்த கவர்னர் கிஸ்ட் நாட்டிலே பதினெட்டு வயதிலிருந்து நாற்பது வயதுவரை அத்தனை ஆடவரும் ஆயுதங்களுடன் எந்தவித அவசர நிலைமைக்கும் தயாராக இருக்கவேண்டும் என்று அறிக்கை விடுத்திருந்தார். அதற்கு அவர் சட்ட சபையிலே காட்டிய காரணம் "அர சாங்கம் கூட்டமைப்பிலே இன்று நமக்குள்ள சமத்துவ நிலையை குலைக்கக் கூடிய சீர்திருத்தங்களை கொண்டுவர திட்டமிட்டுமுள்ள கட்சியின் பிரதிநிதி ஜனாதிபதி தேர்தலிலே வெற்றி பெறும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. மேலும் இதன் விளைவாக தென் நாட்டு ராஜ்யங்கள் சர்வாதிகார கூட்டு ஆட்சியின்கீழ் வந்து விடும்" அவரது இந்த கொள்கையை தென் நாடு எங்கும் உள்ளவர்களும் மற்றும் பல ராஜ்யங் களும் ஆதரித்து அதற்கான சட்ட திட்டங்களை கொண்டு வர தொடங்கின. இதைக்கண்ட லிங்கன் "வாஷிங்டனுக்கு இருந்த பொறுப்புகளையும் பிரச்னைகளையும் காட்டிலும் எனக்கு அதிகமாகவே மேலோங்கி நிற்கின்றன" என்று சொன்னார்.

பொது வாழ்வில் போதிய அனுபவமே இல்லாமல் லிங்கனைப் போன்று யாருமே ஜனாதிபதி பதவியை ஏற்று நிர்வகித்ததில்லை. இன்றுவரை வந்துள்ள மற்ற ஜனாதிபதி கள் யாவரும், நிர்வாக அனுபவமோ, ராணுவப் பயிற்சியோ, அல்லது குறைந்த பட்சம் மக்களிடம் வாக்குகளைப் பெறக் கூடிய திறமையோ படைத்தவர்களாகத்தான் இருந்திருக் கிறார்கள். ஜனாதிபதிகள் மரணம் அடைந்த பிறகு அப்பத விக்கு வந்த உப ஜனாதிபதிகளான டெய்லர், ஜான்ஸன், ஆர்தர், ரூஸ்வெல்ட், கூலிட்ஜ் ஆகியவர்களுக்கு அப்பத விக்கு வேண்டிய தகுதிகள் நிரம்ப இருந்தன. ஆனால் லிங்கனுக்கோ ஏதோ ராஜ்ய சட்ட சபையிலும் மத்திய சட்ட சபையிலும் அங்கம் வகித்த அனுபவத்தைத் தவிர வேறு ஒரு தகுதியும் இல்லை. ஆனால் அவர்கள எல்லோரையும் விட லிங்கன் தான் மகத்தான தொரு பணியை பொறுப்புடன் ஏற்று நடத்தவேண்டி யிருந்தது. ஒரே ஒரு சந்தர்ப்பத்தில் மட்டும் லிங்கன் தன் மனைவியிடம் பொறுமையற்று கடுமை யாக நடந்து கொண்டார். அந்த நிகழ்ச்சியை இந்த நாடகத்தில் புகுத்தவேண்டுவது அவசியம் என்ற எண்ணத்

திலேயே தேர்தல் நடந்த அன்று இரவு வரும் சம்பவமாகிய இக் காட்சியில் அதையும் சேர்த்துள்ளேன்.

மேலும் இக் காட்சியில் சிறுமி ஒருத்தி லிங்கன் தாடி வைத்துக் கொள்ளவேண்டும் என்று யோசனைகூறி கடிதம் எழுதிய சம்பவத்தையும் சேர்த்துள்ளேன். அந்தச் சிறுமி யின் பெயர் கிரேஸ் படேல் என்பதாகும் தேர்தலுக்கு இரண்டு வாரங்களுக்கு முன்பாகவே அந்தப் பெண்ணுக்கு லிங்கன் பதில் எழுதினர்: "அருமைச் சிறுமியே உனது 15-ந் தேதியிட்ட கடிதம் கிடைத்தது. எனக்குப் பெண்ணே கிடையாது என்று சொல்ல வேண்டிய அவசியத்தை எண்ணி வருந்துகிறேன். மீசை வைத்துக் கொள்ளும் விஷயத்தில் இதுவரை யில்லாமல் இப்பொழுது அப்படிச் செய்வதால் மக்கள் என்னை கேலி செய்யமாட்டார்களா? உன்னை அன்பாக நேசிக்கும் ஆபிலிங்கன்." தேர்தலில் பிரபலமானவர்களின் வாக்குகளில் நாற்பது சதவிகிதம் லிங்கனுக்கும் முப்பது சதவிகிதம் டக்ளஸுக்கும் கிடைத் தன பாக்கி இருந்தவை பெர்க்கன்ரிட்ஜ்ஜக்கும் பெல்லுக்கும் கிடைத்தன. தேர்தலில் மற்ற மூவருக்கும் 123-ம் லிங்க னுக்கு 180-ம் ஆக தொகுதிகள் வெற்றி அளித்தன.

## காட்சி 12 (1861)

தேர்தலுக்குப் பிறகு லிங்கனின் உயிருக்கு தொடர்ந்து ஆபத்துக்கள் பல சூழ்ந்தபடி இருந்தன என்பதிலும் பின்னல் கொல்லப்படாமல் இருக்க அவருக்கு ஏற்பாடு செய்யப்பட்ட பாதுகாப்புகளை லட்சியம் செய்யாமல் இருந்தார் என்பதிலோ மிகை படுத்துவது ஒன்றுமில்லை மார்ச் நாலாம் தேதி அன்று அவர் பதவி பிரமாணம் எடுத் துக் கொள்ளமுடியாதபடி தடுத்து நிறுத்த வேண்டும் என்ற முடிவுடன் பல தைர்யசாலிகளான தீயவர்கள் இருக் கிறார்கள் என்பதை அறிந்திருந்தும் "அவர் என்னைச் சுற்றி லும் ஆபத்துக்கள் சூழ்ந்திருக்கையில் ஒரு பக்கத்தில் மட்டும் பாதுகாப்பிற்கு ஏற்பாடு செய்வது என்ன அர்த்தம்" என்று எதிர்ப்பு தெரிவித்திருக்கிறார். லிங்கன் கிழக்கே பிரயாணம் சென்ற பொழுது அங்கு இவரது ரயிலை கவிழ்ப் பதற்கு சதி ஏற்பாடுகள் நடந்திருந்தன என்பதை அறிந்து

பால்டிமோர் ராஜ்யத்திற்குள் செல்ல வேண்டாமென்று எச்சரிக்கை செய்யப்பட்டது. இந்த கடைசி காட்சியில் வரும் லிங்கன் விடை பெற்றுக் கொள்ளும் பிரசங்கம் மிகவும் மனமுருக்கும் தன்மையதாகவே உள்ளது. அதன் பிறகு பதினேரு ஆண்டுகள் கழித்து வாஷிங்டனின் பிறந்த தினத்தன்று பிலடெல்பியாவில் நிகழ்த்திய பிரசங்கத்தி லிருந்து எடுக்கப்பட்ட வரிகளே ஜனநாயக சாசனத்தைப் பற்றிய கருத்துகள் ஆகும். அவரது இப்பிரதேசங்களில் லிங்கனின் கவிதை மனோபாவத்திற்கு நேர்த்தியானதொரு உதாரணம் கிடைத்துள்ளது. அதாவது எப்பொழுது நான் திரும்புவேன் அல்லது திரும்புவேனு மாட்டேனு என்று அவர் சொல்லிய விநோதமான வார்த்தைகளே அதற்கு சான்ருக உள்ளன.

இந்த நாடகம் அவரது ஆத்மா மேலே போய்க்கொண் டிருக்கிறது என்ற வார்த்தைகளோடு முடிவடைகிறது. அதாவது அவர் கூறிவந்த புனிதமான உண்மை தத்துவங் களின் விளைவாக என்றும் உயிருடனேயே இருப்பார் என்ற உண்மையையே அவை பறைசாற்றுகின்றன.

லிங்கனின் வாழ்க்கையைப் பற்றிய பலரது குறிப்புகளை யும் இங்கு நான் எடுத்துக் காட்டியுள்ளேன். அதுபோலவே இறந்துபோன சார்னிவிளாடெக் எழுதிய கட்டுரையிலிருந் தும் அவரது வாழ்க்கை விபரங்களை விளக்கிச் சொல்லு கிறேன். ஜார் மன்னர் ஆண்டு வந்த ரஷ்யாவிலிருந்து கொடுமைகளுக்குப் பயந்து அங்கிருந்து ஓடி வந்த ஒரு யூத அகதிதான் சார்னி விளாடிக் என்பவர். அவர் ஒரு போல்ஷ் விக் கட்சி அங்கத்தினர். லெனினைத் தங்கள் தலைவராகத் தேர்ந்தெடுப்பதற்கு அவரும் வாக்கு அளித்தவர்தான் பிறகு புரட்சி வேலைகளுக்காக சிறையில் இருந்தார். மிக்க கஷ்டங்களை யனுபவித்த பிறகு அவர் வேதனைதாளாது அமெரிக்காவிற்கு வந்து சேர்ந்தார். இங்கு சுதந்திரம், சமத்துவம் என்னும் அழகு வார்த்தைகளுக்கு உண்மை யான அர்த்தம் உள்ளது என்பதை உணர்ந்து கொண்டார். அவர் அமெரிக்காவின் மிக்க நல்ல பிரஜையானுர். கடைசி காலத்தில் குடியரசுக் கட்சியினர், சுதந்திரக் கட்சியினர் தொழிலாளர் கட்சியினர் ஆகியவர் கொண்ட நியூயார்க்

நகர சபைக் கூட்டுக் குழுவினரது தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அவர் "முதன் முதலில் நான் அமெரிக்கனுவதற்குக் கற்றுக்கொண்ட பாடம் லிங்கனது ஜெட்டிஸ்பர்க் சொற்பொழிவுதான். நான் அதைத் திரும்பத் திரும்பப் படித்தவுடன் அதிலிருக்கும் உயர்ந்த கொள்மைகளும், அமெரிக்காவினிடத்தில் அவர் கொண்டுள்ள அளவற்ற நம்பிக்கையும் விசுவாசமும் புரிய ஆரம்பித்தது. இந்நாட்டின் கடந்தகால சரித்திர நிகழ்ச்சிகள் அத்தனையும் என் கண்முன் வரிசை வரிசையாக விளக்கொளியுடன் பிரகாசித்தன. ஏதோ முன்பின் தெரியாத நண்பர் ஒருவர் என்னைக் கையைப் பிடித்து அழைத்துச் சென்று, இருளடைந்தோர் பாதையின் வழியாக அழைத்துச் சென்று, சந்தேகப்படாதே நம்பிக்கையைத் தளரவிடாதே இந்த நாட்டிற்குத் தனியானதொரு ஆத்மீக உணர்வும் கொள்கையும் உண்டு. அதை நீ விரும்பினுல் சந்தோஷத்துடன் ஏற்றுக் கொள்ளலாம்..."

"சுற்றி வளைந்து செல்லும் அமெரிக்க சரித்திரத்தில் லிங்கன் ஒரு மென்மையான நிலப்பரப்பாகக் காட்சியளிக்கிருர். அங்கு துக்கம் நிலவிய பொழுதும் சுற்றிலும் அழியாததொரு விளக்கொளி வீசுகின்றது. அவரது பிரசங்கத்தைப் புரிந்துகொள்ள முயற்சித்ததினுல் நான் ஒரு புனிதனுனேன். அவரைத் தோற்றுவித்த இந்த அமெரிக்க நாட்டிற்கு நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன்" என்று எழுதியுள்ளார்.

இப்படி எதிர்தரப்பிலிருந்து இந்நாட்டிற்கு வந்து குடியேறிய ஒருவரது உளமார்ந்த பொன் மொழிகளிலிருந்து அமெரிக்காவின் மகத்துவத்தை—பெருமையை உணர்ந்து கொள்ள முடிகிறது. இதையேதான் லிங்கன் 'விடுதலை' என்ற புனித வார்த்தையினுல் குறிப்பிட்டுள்ளார்.

லிங்கனது வரலாற்றையும் அவரது கொள்கைகளையும் ஆழ்ந்து படிப்பவர்களுக்கு அவர் வெறும் வரட்டு கூக்குரலிட்டு கொடி வீசுபவர் அல்லவென்பது தெள்ளத் தெளிவாகத் தெரியும். இன்றுவரை அவரது பெயரும் கொள்கைகளும் உலகத்தின் கண் நீடித்துநிலைத்திருப்பதற்குக் காரணம்

அவர் உலக மக்கள் அனைவரும் சுதந்திரத்துடனும் சகோதர மனோபாவத்துடனும் வாழவேண்டும் என்பதற்காக பரந்த நோக்குடன் தானே ஒரு உலக பிரஜையாக நின்று பாடு பட்டு மாண்டார் என்பதுதான். ஜனாதிபதியின் வெள்ளை மாளிகையிலிருந்து அவர் எழுதியதொரு கடிதத்தில் "எல்லாத் தொழிலாளர் வர்க்கத்தினரும் நாடு, மொழி வேறு பாடின்றி ஒருவருக்கொருவர் நேசபாவத்துடன் ஒற்றுமை யுணர்வை வளர்க்க வேண்டும்" என்று எழுதியுள்ளார் அவரைப் பொறுத்த மட்டில் என்றுமே தன் தேசத்திற் காக மட்டும் என்று எதையும் குறுகிய நோக்கத்துடன் செய்ததில்லை. இளமைப் பருவத்திலிருந்து பதிவு செய்யப் பட்டுள்ள அவரது சொற்பொழிவுகள், எழுத்துக்கள் யாவற்றிலும் அவர் குறிப்பிட்ட ஒரு வகுப்பாருக்காகவோ அல்லது கொள்கைக்காகவோ பரிந்து பேசியதில்லை. மனித குலம் முழுமைக்காகவும்தான் அவர் பரிந்து நின்று பேசினார் செயலாற்றினார். ஜனநாயகத் தத்துவமே உலக நாடுகளி லெல்லாம் தழைத்தோங்குவதற்காக அமெரிக்கர்கள் பாடு பட வேண்டிய கடமையை அவர் உணர்ந்து செயலாற்றி வந்தார்.

முதன் முதல் ஜனாதிபதி பதவியை ஏற்றுக்கொள்வ தற்கு பத்து நாட்களுக்கு முன்பாக அவர் சுதந்திர ஹாலில் நிகழ்த்திய பிரசங்கத்தில் "பல தனி ராஜ்யங்களின் கூட்டமைப்பான இந்த அமெரிக்க கூட்டாட்சியை— தேசத்தை—இத்தனை காலமாக ஒன்றுபடுத்தி வைத்திருந்த மாபெரும் சக்தி—லட்சியம்—எது என்பதே எனக்குப் புரி யாமல் ஆச்சரியப்பட்டு வந்ததுண்டு. ஆனால் உலகத்தின் வருங்கால சந்ததியினர் அனைவருக்கும் சுதந்திரத்தில் ஒரு நம்பிக்கையையும், உலக நாடுகளனைத்திற்கும் சுதந்திர உரிமையையும் இந்நாட்டு மக்களுக்கு பரிபூரண சுதந்திரத் தையும் அளிக்கும் சுதந்திரப் பிரகடனத்தில் புதிய நோக்கு கள் தான் இதற்குக் காரணமாக இருக்கவேண்டும். அந்த உன்னத கோட்பாட்டை விட்டொழித்தால்தான் இந்த நாடு காப்பாற்றப்படும் என்ற நிலை ஏற்பட்டால் அப்படிப்பட்ட உன்னத லட்சியத்தை இழப்பதை—அடிமைப்படுவதைக் காட்டிலும் இந்த இடத்திலேயே என்னைக் கொன்றுபோடு

வது மேல் என்றுதான் நான் சொல்லுவேன் '' என்று குறிப்பிட்டுள்ளார்.

சம்மர் கோட்டையின் மீது குண்டு வீசப்பட்டதைப் பற்றிய முடிவுகளை அவர் வருத்தத்துடன் விவாதித்துக் கொண்டிருக்கையில் குறிப்பிட்டதாவது: '' இப் பிரச்னை ஐக்கிய அமெரிக்காவின் தலைவிதியையும் தாண்டிய நிலையில் நிற்கின்றது. மக்களால் அமைக்கப்பட்ட ஒரு ஜன நாயக அரசாக்கத்தால் உள்நாட்டு எதிரிகளை வென்று தனது நாட்டின் ஒற்றுமையையும், பாதுகாப்பையும் நிலை நாட்ட முடியுமா முடியாதா என்ற கேள்வியை இது உலக மக்களின் முன் எழுப்பியுள்ளது.

அவர் உயிர் நீப்பதற்கு சில வாரங்களுக்கு முன், தனது ஜனாதிபதிப் பதவியின் இரண்டாவது ஆண்டு விழாவின்போது ஏசுகிறிஸ்துவின் புனித மொழிகளை எடுத்துரைத்தார், '' பிழைகள் நிறைந்த இந்த உலகத்தை வெறுக்கிறேன். அதிலும் பிழைகள் செய்யும் மனிதரை அடியோடு வெறுக்கிறேன்.

முற்றிற்று.